உ

# குமரேச சதகம்

## மூலமும் - உரையும்





நாயகர் ஸன்ஸ்,
ன்னை.

உ

குகமயம்.

குருபாததாசர்

பாடிய

# குமரேச சதகம்

## மூலமும்

வடார்க்காடு ஜில்லா

வாலாஜாபேட்டை முனிசிபல்

உயர்தர பாடசாலையில் ஆசிரியரா யிருந்த

க. ரா. ஜமதக்னி நாயகர்

இயற்றிய

தெளிபொருள் விளக்கவுரையும்.

---

வெளியிட்டவர்கள் :

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்

திருமகள்விலாச அச்சியந்திரசாலை

சென்னை

பதிப்புரிமை] [விலை ரூபா 1.









இந்நூல் புறப்பொருளைப் பற்றியது. திருக்குறள் நாலடியார், புறநானூறு போன்ற புறப்பொருள் நூல்கள் மிகக் கஷ்டமானவை ; சிறுவர் பயில முடியாதன. ஆதலின் சுமார் நூற்றறுபது ஆண்டுகள்முன் குருபாததாசர் என்பவர் எளிய கவிதையில் அரசியல், பொருளியல், அமைச்சு, இல்லறம் முதலிய புறப்பொருள் பற்றிய விஷயங்களையும் நல்லொழுக்க முறைகளையும் கடவுள் வழிபாட்டு முறைமையினையும் சிறுவரும் பயின்று உணரும் விதத்தில் இயற்றியுள்ளார்.

இவரது இயற்பெயர் முத்துமீனாக்ஷிக்கவிராயர் என அறிகின்றோம். இவர் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் திருப்புல்வயல் என்னும் திருப்பதியின்கண் வசித்ததாகத்

தெரிகின்றது. அம்மலையின்கண் வீற்றிருக்கும் முருகக்கடவுளை முன்னிட்டு இந்நூல் செய்யுட்களில் கடைசியில் 'மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே!' என்று மகுடமிட்டுப் பாடியுள்ளனர். இதனால் இவர் முருகனடியார் எனக் காணப்படுகின்றனர். புலவர்கள் முற்காலத்தில் சுயசரிதம் எழுதி வைக்காத குறையாலும் எவரும் இக்காலம்போல் யாரும் புலவர் சரிதங்களைத் தொகுக்கவில்லையாதலின் சரியான புலவர் வரலாறுகள் தெரிய முடியவில்லை. எனினும் புலவர்பிரான்கள் செய்து வைத்துப்போன இந்நூல்போன்ற பொக்கிஷங்களை நாம் பயன்படுத்துவோமாக.

இந்நூலுக்கு உரை பலவுள்ளன. அடியேனும் சிற்றறிவுக்கெட்டிய பொருள் விஷயங்களைச் சேர்த்து உரையெழுதத் துணிந்தனன். குற்றமகற்றி நல்லது ஏற்று அன்பர் ஆதரிப்பார்களாக.

ஜமதக்னி.

உ

முருகன் துணை

குமரேச சதக

# செய்யுள் முதற்குறிப்பகராதி

குமரேச சதக செய்யுள் முதற்குறிப்பகராதி

முற்றிற்று.

---



# குமரேச சதகம்

## மூலமும்

## தெளிபொருள் விளக்கவுரையும்

---

### காப்பு

நேரிசை வெண்பா

**பூமேவு புல்லைப் பொருந்துகும ரேசர்மேல்**
**தேமே வியசதகஞ் செப்பவே--கோமேவிக்**
**காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகாக்**
**காக்குஞ் சரவணத்தான் காப்பு.**

(இ - ள்) பூ மேவு புல்லை பொருந்து - அழகு பொருந்திய திருப்புல்வயல் என்னும் க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும், குமரேசர் மேல் - முருகக் கடவுளின்மீது, தேம் மேவிய சதகஞ் செப்ப - இனிமை பொருந்திய சதக நூல் பாடுவதற்கு, கோ மேவி காக்கும் சரவணத்தான் (உம்) - தலைமை பொருந்தி எல்லா வுலகங்களையுங் காக்கின்ற முருகப்பிரானும், கம்ப கும்ப கா குஞ்சர வண்ணத் தான் (உம்) - அசையும் இயல்புடையதும் குடம் ஒத்த மத்தகம் உடையதும் காட்டில் சஞ்சரிக்கும் இயல்புடைய

தும் ஆகிய யானையின் வடிவுடையவனும், ஐந்து கரத்தான் (உம்) - ஐந்து திருக்கரங்களையுடையவனும் ஆகிய விநாயகக் கடவுளும், காப்பு - காப்பாகுவர், எ - று.

(வி - ரை) பூ - மங்கல மொழிகளில் ஒன்று. நூல் ஆரம்பத்தில் மங்கலமொழி வைத்தல் சான்றோர் கவி மாபு. 'உலகம்' என்பதும் மங்கல மொழிகளுள் ஒன்று. 'பூமலி அசோகின்' என்று நன்னூலாரும் 'உலகம் உவப்ப' என்று நக்கீரனாரும் 'உலகம் யாவையும்' என்று கம்பரும் தொடங்கியுள்ளனர். அஃதே போன்று இந்த நூலாசிரியரும் இக் காப்புச் செய்யுளின் முதலில் 'பூ' என்னும் மங்கல மொழியை முதலில் வைத்தார்.

இந்த நூலாசிரியர் குருபாததாசர் அவர்கள் தாமியற்றப் புகுந்த இந்நூல் முட்டின்றி யினிது முடிதற் பொருட்டுக் "கோமேவிக் காக்கும் சரவணத்தான்............ குஞ்சர வணத்தான் காப்பு" என்று காப்பு வடிவ மங்கலம் வகுத்துக் கூறினார். ஏற்புடைக்கடவுள் காப்பு, வழிபடு கடவுள் காப்பு எனக் காப்பு மங்கலம் இருவகைப்படும். இங்கு இரண்டினையும் சேர்த்துக் கூறினார். இந்நூலுக்கு ஏற்புடைக்கடவுளாகிய முருகக்கடவுளை முதலில் வைத்து வழிபடு கடவுளாகிய விநாயகரை இரண்டாவதாகவும் வைத்தார் முருகக்கடவுளின் மீதுள்ள அதிக பக்தி விசேஷத்தால். விக்கினங்களைக் களையும் விநாயகரை முதலில் வைப்பது மரபாயிருப்பினும் இந் நூலாசிரியர் முருகக்கடவுளை முதலில் வைத்தது இக் காரணத்தாலேயே.

இது தற்சிறப்புப்பாயிரச் செய்யுள் ஆகும்

"தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளு
மெய்த வுரைப்பது தற்சிறப் பாகும்."

தேமேவிய சதகம் - செயப்படுபொருள். சரவணத்தான்........குஞ்சரவணத்தான் - காப்பு காப்பினுள் அடங்கியிருக்கும்) தெய்வ வணக்கம். (வணங்கியபின்னரே பாது காப்பிற் கழைத்தல் இயல்பு.)

புல்லை - புல்வயல் என்பதின் மரூஉ.

குமரேசர்=குமார+ஈச+அர். வடமொழிக்குணசந்தியால் குமார ஈச என்பவை குமரேச என்றாயிற்று. அர், பலர் பால் விகுதி. அது குமாரன் ஆகிய ஈசன் என இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகும் மாரனையுங் குற்படுத்தவல்ல சிறப்புடைய அழகு படைத்தவன் எனப் பொருள் படும்.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நூற்பயனும், சிறியவரும் அனுபவிக்கும் இனிமையும் உடையதா யிருப்பதால் இந்நூலைத் "தேம் மேவிய சதகம்" என்றார்.

சதகம், 96 பிரபந்த வகையினுள் ஒன்று. அகப் பொருள் ஒன்றன் மீதேனும் புறப்பொருள் ஒன்றன் மீதேனும் நூறு செய்யுட்கள் பாடுதல். அகம் - தலைவனும் தலைமகனும் புணரும்போது மொழிகளான உரைத்தற் கியலாத இன்ப உணர்ச்சியைப் பற்றியது. பிற பொருள் கள் எல்லாம் புறப்பொருளாகும். இந்நூலும் பலவகை.

மனித ஒழுக்க இயல்புகளை விவரித்தலால் புறப்பொருளாகும் சதகம் - நூறு, வடமொழி

'செப்பவே' என்பதில் உள்ள 'ஏ' இசைநிறை.

கோமேவிக் காக்கும் சரவணத்தான் - முக் கடவுளர்களுக்கும் முருகனே மேம்பட்டவன் என்பது கௌமார சமயக் கொள்கையாகும். ஆதலின் எக்கடவுளர்களுக்கும் யார்க்கும் எப்பொருட்கும் தலைமை பொருந்திக் காப்பதால் 'கோமேவிக் காக்கும்' என்றார். சூரபதுமன் கொடிய ஆட்சியால் அலைப்புண்டிருந்த தேவலோகத்தை விரும்பி வானவர்க்குச் சேனாபதியாகிக் காத்தருளியதாகும் என்க. கோ - அரசன், தெய்வலோகம். சரவணத்தான் - நாணற் காடு நிறைந்த பொய்கையில் உதித்தவன். சரம்நவம் - சரவணம், நாணல். வானவர்கள் சூரபதுமன் கொடுமையினின்றும் விடுபெறச் சிவபிரானைத் துதித்தலும், ஈசானம், தற்புருடம், வாமனம், அகோரம், சத்யோஜாதம் என்ற ஐந்து முகங்களோடு அதோமுகத்தையுஞ் சேர்த்துத் தரிசனந் தந்தருளினார். ஆறு திருமுகங்களினின்றும் ஆறு அனற்பொறிகள் கிளம்பின. அவற்றை வாயு அக்கினிகளிடம் ஒப்புவிக்க அவர்கள் கங்கையில் இட்டனர். கங்கா தேவியும் அவற்றை யேந்திச் சரவணப்பொய்கையில் இட்டனள். அங்கு ஆறு வடிவங்களோடும் - கந்தன் அவதரித்தனன். ஆறு வடிவங்களையும் பார்வதிதேவியார் சேர்த்தலும் ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் பொருந்திய ஏகவடிவனானன்.

இதனை,

"ஈங்கன நமது கண்ணின் எய்திய குமரன் கங்கை
தாங்கினள் கொண்டு சென்று சரவணத் திடுத லாலே
காங்கெய னெனப்பேர் பெற்றான் காமர்பூஞ் சரவணத்தின்
பாங்கரின் வருத லாலே சரவண பவனென் றானன்."

என்னுங் கந்தபுராணச் செய்யுளான் அறிக.

கம்பம், கும்பம், கா என்பவை யானைக்குரிய அடைமொழிகள். கம்பம் - அசைவு, எப்போதும் யானை அசைந்து கொண்டே இருக்கும். இது இயற்கை அடைமொழி. அசைதல் இல்லா யானையே இல்லையாதலால் இனச் சுட்டில்லாவடை. இங்ஙனம் இனமில்லனவற்றை அடை கொடுத்துக் கூறுதல் வழுவமைதி.

கும்பம் - குடம். குடத்தைக் கவிழ்த்தாற் போன்று யானையின் தலைமீது இரு ஊன்திரட்சிகள் உண்டு. அவற்றிற்கு மத்தகம் எனப்பெயர்.

குஞ்சரம் - காட்டுப்புதல்களில் திரிதலால் யானை. தேவ வடிவத்திற்கியைய நான்கு திருக்கரங்களும் யானை முகத்திற்கியைய துதிக்கை ஒன்றுஞ் சேர்ந்து விநாயகருக்கு ஐந்து திருக்கரங்கள் என்ப.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களையுஞ் செய்யும் நிமித்தம் ஐந்து திருக்கரங்கள் உடையன் விநாயகன் என்றுங் கூறுப.

கா என்னும் சோலைப் பொருள் உள்ள பெயர் இங்கு ஐந்துகரக்கா, ஐந்து கரங்களாகிய கூட்டத்தையுடைய என்று பொருள்படுதலையும் உணர்க.

கா என்னும் முதல் அதில் உள்ள மரத்துக்காயது என்று முதலாகு பெயராகவுங் கொள்ளலாம். அங்ஙனம் கொள்ளின் கா என்பது கற்பகமரம் எனப் பொருளாகும். அப்போது ஐந்து கரங்களாகிய ஐந்து கற்பக மரங்கள் உடையவன் என்ருகும்.

வணம் - இடைக்குறைச் செய்யுள் விகாரம். கும்பம், கம்பம், கரம், குஞ்சரம் எல்லாம் வடமொழிகள். ஐந்து கரம், விநாயகருக்குரிய அடைமொழி. ஆதலின் கம்ப கும்பத் துக்காக் குஞ்சர வண்ண ஐந்து கரத்தான் என்று அன்வயப்படுத்தப்பட்டது.

மரகத முனிக்கும் விபுதைக்கும் யானைமுகத்துடன் உதித்த கஜமுகாசுரன் வானவராலும், தானவராலும், மனிதராலும், விலங்குகளாலும் இறவாத வரம் பெற்று உலகத்தை நலியாநிற்க வானவர் விருப்பப்படி யானை முகத்துடன் தேவப் பிறப்பாக உதித்தருளியவன் விநாயகன் என்றறிக.

---

## அவையடக்கம்

மாரிக்கு நிகரென்று பனி சொரிதல் போலவு
    மனைக்குநிக ரென்று சிறுபெண்
  மணல்வீடு கட்டுவது போலவுஞ் சந்திரன்முன்
    மருவுமின் மினிபோ லவும்
பாருக்கு ணல்லோர்மு னேபித்தர் பலமொழி
    பகர்ந்திடுஞ் செயல்போ லவும்
  பச்சைமயி லாடுதற் கிணையென்று வான்கோழி
    பாரிலா டுதல்போ லவும்
பூரிக்கு மினியகா வேரிக்கு நிகரென்று
    போதுவாய்க் கால்போ லவும்
  புகல்சிப்பி முத்துக்கு நிகராப் பளிங்கைப்
    பொருந்தவைத் ததுபோ லவும்
வாரிக்கு முன்வாவி பெருகல்போ லவுமின்சொல்
    வாணர்மு னுகந்து புல்லை
  வாலகும ரேசர்மேற் சதகம் புகன்றனன்
    மனம்பொறுத் தருள்பு ரிகவே.

(இ-ள்) மாரிக்கு நிகர் என்று பனி பெய்தல் போலவும் - மழைக்கு ஒப்பாகும் என்று பனி பொழிதல் போன்றும், மனைக்கு நிகர் என்று சிறு பெண் மணல் வீடு கட்டுவது போலவும் - தான் செய்வது குடி யிருக்கத் தகுந்த வீட்டிற்குச் சமானம் என்று நினைத்துச் சிறு பெண்

குழந்தை மணலால் வீடு கட்டுவது போன்றும், சந்திரன் முன் மருவு மின்மினி போலவும் - நிலா முன்னுகப் பொருந்திய மின்மினிப்பூச்சின் எளிமை போலவும், பாருக்குள் நல்லோர் முன்னே பித்தர் பலமொழி பகர்ந்திடுஞ் செயல் போலவும் - இவ் வுலகத்தில் செம்மையாகக் கல்வியறிவு பொருந்திய பெரியோர் முன்னே பைத்தியக்காரர்கள் அறிவுக் கொவ்வாத பல பித்தான சொற்களைப் பேசும் செயல் போன்றும், பச்சை மயில் ஆடுதற்கு இணை என்று வான்கோழி பாரில் ஆடுதல் போலவும் - பசுமை நிறத் தோகையுடைய மயில் தனது அழகிய தோகை விரித்து நடனம் ஆடுவதற்கு ஒப்பாகும் என்று நினைத்து வான் கோழியும் (தன் பொல்லாச் சிறகை விரித்து) உலகில் ஆடுவது போன்றும், பூரிக்கும் இனிய காவேரிக்கு நிகர் என்று போது வாய்க்கால் போலவும் - நீர் நிறைந்திருக்கும் இனிய காவேரி நதிக்கு ஒப்பாகும் என்று ஓடுகின்ற வாய்க்கால் போன்றும், புகல் சிப்பி முத்துக்கு நிகராப் பளிங்கைப் பொருந்த வைத்தது போலவும் - யாவராலும் சிறப்பித்துச் சொல்லப்படும் சிப்பியின் நின்றும் உண்டாகும் முத்திற்குச் சமானமாக நில்லாத எளிய கண்ணாடிக் கல்லை இது முத்துக்கு ஒக்கும் என்று பொருந்த வைத்தது போலவும், வாரிக்கு முன் வாவி பெருகல் போலவும் - சமுத்திரத்திற்கு எதிரே குளமும் பெருகுவது போலவும், இன் சொல்வாணர் முன் உகந்து - மக்கள் அனுபவிக்கத் தகுந்த இனிய சொற்களால் கவி பாடுதலையே வாழ்வு நோக்கமாக வுடைய பெரியோர்

எதிரே விரும்பி, புல்லை வால குமரேசர் மேல் சதகம் புகன்றனன் - திருப்புல் வயலில் வீற்றிருக்கும் பால சுப்பிர மணியக் கடவுள் மீது இச் சதக நூலைப் பாடினேன், என்ன பேதமை!, மனம் பொறுத் தருள் புரிக - நூலைப் பயிலும் அன்பர் அடியேனை மன்னித்துத் தயை புரிவாராக, எ - று.

(வி - ரை) அவை - இடவாகு பெயராய்ச் சபையில் உள்ளவருக்காயிற்று. இந் நூலாசிரியர் மாரிக்கு நிகரென்று பனி பெய்தல் போலவும் கல்வி கேள்வி யில்லாத எளிமை யுடையவன் இந் நூலைப் பாடினேன்; அதை உபேக்ஷித்து விடாது குற்றம் பொறுத்துக் குணம் உண்டேல் எடுத்துக் கொள்ளுமாறு நூல் பயில்வோரிடம் இரத்தல் செய்கின்றார். அவையடக்கம் - சபையினர் அடங்குதற்குரிய வணக்க மொழி. சதகம் ஈண்டுக் குமரேசர் மீது ஆசிரியர் பாடிய பிர பந்தம். புரிக, வியங்கோள் வினைமுற்று.

---

## நூல்

### 1. குமரேசர் பெருமை

பூமிக்கொ ராறுதலை யாய்வந்து சரவணப்
பொய்கைதனில் விளையா டியும்
புனிதர்க்கு மந்த்ரவுப தேசமொழி சொல்லியும்
போதனைச் சிறையில் வைத்தும்
தேமிக்க வரிகரப் பிரமாதி கட்குஞ்
செருக்கமுடி யாவ சுரனைத்
தேகங் கிழித்துவடி வேலினு லிருகூறு
செய்தமரர் சிறைத விர்த்தும்
நேமிக்கு ளன்பரிட ருற்றசம யந்தனி
னினைக்குமுன் வந்து தவியும்
நிதமுமெய்த் துணையாய் விளங்கலா லுலகிலு
நிகரான தெய்வ முண்டோ [னே
மாமிக்க தேன்பருகு பூங்கடம் பணியுமணி
மார்பனே வள்ளி கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) ஓர் ஆறு தலையாய் வந்து - ஓர் ஆறு தலைகள் பொருந்திய ஏகவடிவம் உடையவனாக எழுந்தருளி, பூமிக்கு சரவணப் பொய்கை தன்னில் விளையாடியும் -

பூமியின் மேல் நாணல் காடு நிறைந்த தடாகத்தில் விளை யாடியும், புனிதற்கு மந்திர உபதேசம் மொழி சொல்லி யும் - பரிசுத்த மூர்த்தியாகிய சிவபிரானுக்கு மந்திரத்திற்கு முதல் எழுத்தாகிய 'ஓம்' என்னும் பிரணவத்திற்கு அர்த் தத்தை உபதேச வார்த்தையாகச் சொல்லியும், போதனைச் சிறையில் வைத்தும் - பிரணவ அக்ஷரத்திற்குப் பொருள் சொல்லமாட்டாத பிரம்மனைச் சிறையில் வைத்தும், தே மிக்க அரி, அர, பிரமாதிகட்கும் செயிக்க முடியா(த) அசு ரனை - தெய்வத் தன்மை மிகுந்த மஹாவிஷ்ணு, சிவபெரு மான், பிரமன் முதலானோர்களாலும் வெல்ல முடியாத வல்லமை பொருந்திய சூரபதுமனை, வடிவேலினால் தேகங் கிழித்து இரு கூறு செய்து - கூர்மையான வேற்படையினால் உடலை இரு பங்குகளாகப் பிளந்து, அமரர் சிறை தவிர்த் தும் - தேவர்களின் சிறையை ஒழித்து விடுவித்தும், நேமிக் குள் அன்பர் இடர் உற்ற சமயந்தன்னில் - உலகத்தில் பக்தர்கள் துன்பம் உற்ற நேரத்தில், நினைக்கும் முன் வந்து உதவியும் - அவர்கள் 'உதவிக்கு வரவேண்டும்' என்று நினைப்பதற்கு முன்னுக்கவே எழுந்தருளி வந்து இடையூறு போக்குவதாகிய உதவியைச் செய்தும், நிதமும் மெய் துணை ஆய் விளங்கலால் - நாள்தோறும் தவறாத உண்மையான துணைவன் ஆகத் திகழும் காரணத்தால், உலகில் உன்னை நிகர் ஆன தெய்வம் உண்டோ - இந்தப் பூவுலகத்தில் உனக்குச் சமமான தெய்வம் வேறு இருக்கிறதோ? (இல்லை), மா மிக்க தேன் பருகு பூ கடம்பு அணியும் மணி மார்பனே - வண்டுகள் தேனை மிகவும் உண்ணும் அழகிய

கடப்ப மலரால் ஆன மாலையை அணிந்திருக்கும் அழகிய மார்பை உடையவனே!, வள்ளி கணவா - வள்ளி நாயகியாரின் தலைவனே!, மயில் ஏறி விளையாடும் குகனே - மயில் வாகனத்தின் மீது ஏறி விளையாடுகின்ற அன்பரின் இதயக் குகையில் வசிக்கும் முருகக்கடவுளே!, புல்வயல் நீடு மலை மேவு குமார ஈசனே - திருப்புல்வயல் என்னும் க்ஷேத்திரத்தில் நீண்ட மலையின் மீது எழுந்தருளி இருக்கும் என்றும் இளமையோ டிருக்கும் கடவுளே!, எ - று.

(வி - ரை) போதன்=போது+அன். போது - தாமரை மலர். திருமாலின் உந்தித் தாமரையில் உதித்தவன். போதம்+அன் எனப் பிரித்தால் அறிவுக்கு உறைவிடமாகிய வேதத்தை யுடையவன் பிரமன் என்றுங் கொள்ளலாம்.

பிரமாதி என்றதால் இந்திரன் முதலானவர்களாலும் என்று கொள்க. அமரர் - அம்ருதம் சாப்பிட்டதால் அமரத்துவம் (சாகாமையை) உடைய தேவர்கள். நேமி - சக்கிரவாளக்கிரி, அதனால் சூழப்பட்ட உலகிற்கானது. உனை என்பது இடைக்குறை விகாரம். 'ஐ' இரண்டாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமைக்கு வந்த உருபு மயக்கம். அணி மார்பனே என்றும் பிரிக்கலாம்.

## 2. அந்தணரியல்பு

குறையாத காயத்ரி யாதிசெப மகிமையுங்
கூறுசுரு திப்பெ ருமையுங்

கோதிலா வாகமபு ராணத்தின் வளமையுங்
குலவுயா காதி பலவும்
முறையா நடத்தலாற் சகலதீ வினைகளையு
முளரிபோ லேத கிப்பார்
முதன்மைபெறு சிலைசெம்பு பிருதுவிக ளிற்றெ
மூர்த்தமுண் டாக்கு விப்பார் [ய்வ
நிறையாக நீதிநெறி வழுவார்க ளாகையால்
நீள்மழை பொழிந்தி டுவதும்
நிலமது செழிப்பது மரசர்செங் கோல்புரியு
நிலையுமா தவர்செய் தவமும்
மறையோர்க ளாலே விளங்குமிவ் வுலகத்தின்
மானிடத் தெய்வ மிவர்காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) குறையாத காயத்ரி ஆதி செப மகிமையும் - குறைதல் இல்லாத காயத்திரி முதலிய வேத மந்திரங்களைச் செபிக்கும் பெருமையும், கூறு சுருதிப் பெருமையும் - கேட்பதற்குச் சொல்லப்படும் வேதத்தின் மேன்மையும், கோது இல்லா (த) ஆகமம் புராணத்தின் வளமையும் - குற்றம் இல்லாத காமிகம் முதல் சைவாகமங்கள் மச்சியம் கூர்மம் முதலிய புராணங்கள் இவற்றின் மிகுதியும், குலவு யாகம் ஆதி பலவும் - கூட்டமான இராஜசூயம், அசுவ மேதம் முதலிய யாகங்களும், இன்னும் அந்தணர்க்குரிய

தொழில்கள் அனேகமும், முறை ஆ (க) நடத்தலால் - சாஸ்திரமுறை பிரகாரம் தவருது இயற்றுவதால், சகல தீ வினைகளையும் முளரி போலே தகிப்பார் - எல்லாப் பாவங் களையும் சூரியனைப்போல எரித்து விடுவார்கள், முதன்மை பெறு சில செம்பு பிருதுவிகளில் தெய்வ மூர்த்தம் உண் டாக்குவிப்பார் - தலைமை பெற்ற கல் செம்பு மண் முதலிய வற்ருல் செய்யப்படும் விக்கிரகங்களில் தெய்வ ஆவேசம் ஏற்றுவிக்குஞ் சக்தி உடையவர், நிறை ஆக நீதி நெறி வழு வார்கள் - நிறைவுள்ள சன்மார்க்கத்தில் தவருதவர்கள், ஆகையால் நீள் மழை பொழிந்திடுவதும் - ஆதலால் மிகுந்த மழை பெய்வதும், நிலம் அது செழிப்பதும் - பயிர்நிலம் வளமை உறுவதும், அரசர் செங்கோல் புரியும் நிலையும் - மன்னர்கள் செம்மையான அரசாட்சி செய்யும் நிலைமையும், மாதவர் செய் தவமும் - தவத்தோர் செய்யும் தவமும், மறையோர்களாலே (இவ்வுலகத்தில்) விளங்கும் - அந்த ணர்களினுல் இந்த உலகத்தில் நிலைபெற்று விளங்கும், இவர் இ உலகத்தில் மானிட தெய்வம் - இந்த அந்தணர்கள் இந்த உலகத்தில் மனித ரூபமான தெய்வம் ஆவார்கள், மயிலேறி விளையாடும் குகனே புல்வயல் நீடு மலை மேவு கும ரேசனே—, எ - று.

(வி - ரை) காயத்ரி - சந்தியாவந்தனஞ் செய்யும் போது அந்தணர் செபிக்கும் வேதமந்திரங்களில் ஒன்ருகும்.

"ஓம் பூர்புவஸுவஃ ஓம் தத்ஸ விதுர்வரேணியம் பர்க்கோ
தேவஸ்ய தீமஹி தியாயோனஃ பிரசோதயாத்"

அந்தணர் தொழில்களாவன - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல். "குறையாத காயத்திரி.......யாகம்" என்பதால் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் என்னும் நான்கும் சொன்னவர் "ஆதிபல" என்பதால் "ஈதல் ஏற்றல்" என்ற இரண்டையும் உள்ளடக்கினர். செங்கோல் - அரசனல் செய்யப்படும் முறையினது தன்மை. அம்முறை ஒரு பக்கம் கோணுது செம்மையான கோல் போன்றதால் செங்கோல் எனப்பட்டது. மறை - வேதம். அதனை உடையவர், மறையோர், அந்தணர். தீவினை - இங்குத் தீவினை செய்வதால் அனுபவிக்கும் பலன் அதாவது பாவம். காண் - முன்னிலை அசை.

## 3. அரசரியல்பு

குடிபடையி லபிமான மந்திரா லோசனை
குறிப்பறிதல் சத்ய வசனங் [றை
கொடைநித்த மவரவர்க் கேற்றமரி யாதைபொ
கோடாத சதுரு பாயம்
படிவிசா ரணையொடு ப்ரதானிதள கர்த்தரைப்
பண்பறிந் தேயமைத்தல்
பல்லுயி ரெலாந்தன் னுயிர்க்குநிக ரென்றே
பரித்தல்குற் றங்கள் களைதல்
துடிபெறு தனக்குறுதி யானநட் பகமின்மை
சுகுணமொடு கல்வி யறிவு

தோலாத காலமிட மறிதல்வினை வலிகண்டு
துஷ்டநிக் ரகசௌரியம்
வடிவுபெறு செங்கோ னடத்திவரு மரசர்க்கு
வழுவாத முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) குடி படையில் அபிமானம் - தன்கீழ் வாழும் குடிகள் சேனைமீது அன்புடையவனாய் இருத்தலும், மந்திர ஆலோசனை - இரகசியமாக இராச காரியங்களை ஆராய்ச்சி செய்தலும், குறிப்பு அறிதல் - குடிகள் மந்திரி முதலிய ஊழியர்கள் இவர்களின் மனக்குறிப்பை உணர்தலும், சத்திய வசனம் - உண்மை பேசுதலும், கொடை - தானமும், நித்தம் அவர் அவர்க்கு ஏற்ற மரியாதை - நாள்தோறும் ஊழியர்களுக்கு அவரவருக்குத் தகுந்தவாறு உயர்வு செய்தலும், பொறை - பொறுமையும், கோடாத சதுர் உபாயம் - கோணாத சாம தான பேத தண்டம் ஆகிய நான்கு உபாயங்களும், படி விசாரணையொடு பிரதானிதள கர்த்தரை பண்பு அறிந்தே அமைத்தல் - தனது நாட்டில் உள்ள மக்கள் கருத்துக்குத் தகுந்தவாறு இராஜ சபை முக்கியஸ்தன் படைத்தலைவன் முதலிய உத்தியோகஸ்தர்களைத் தகுதி அறிந்து நியமித்தலும், பல் உயிர் எல்லாம் தன் உயிர்க்கு நிகர் என்றே பரித்தல் - மனிதன் உள்ளிட்ட எல்லா உயிர்களையும் தனது உயிர் போலவே முக்கியம் என்று அவற்றைப் பாதுகாத்தலும், குற்றம் களைதல் -

தனது குற்றம் உத்தியோகஸ்தரின் குற்றம் குடிகளின் குற்றம் எல்லாவற்றையும் ஒழித்தலும், துடி பெறு தனக்கு உறுதி ஆன நட்பு - மேன்மை பெற்ற தனக்கும் தனது நாட்டிற்கும் நன்மையும் உறுதியும் தரும்படியான நண்பர் களைத் தேடிச் சேர்த்துக் கொள்வதும், அகம் இன்மை - 'தான்' என்ற எண்ணம் இல்லாது தனது நாட்டிற்கே நலம் புரிய இருக்கின்றேன் என்ற பரநலக் கொள்கையும், சுகுணமொடு கல்வி அறிவும் - நல்ல குணத்தோடு கல்வி அறிவும், தோலாத காலம் இடம் அறிதல் - தோற்கா திருக்குமாறு (வினை செய்வதற்கேற்றதும் பகைவரோடு போர் செய்வதற்கேற்றதும் ஆன) தகுந்த காலத்தையும் இடத்தையும் உணர்தலும், வினை வலி கண்டு துஷ்ட நிக்ரக சௌரியம் - காரியம் செய்வதற்குரிய மனவுறுதி பெற்றுத் தீயர்களை ஒழிக்கும் வலிமையும், (ஆகிய) இது - மேற் கூறிய இவை எல்லாம், வடிவு பெறு செங்கோல் நடத்தி வரும் அரசர்க்கு வழுவாத முறை - அழகு பெற்ற செங் கோல் செலுத்தி வரும்படியான மன்னவருக்குத் தவறாத முறைகளாகும். மயிலேறி—, எ - று.

(வி - ரை) குடி - அந்தணர், அரசர், வணிகர், வேளாளர். படை - தேர், குதிரை, யானை, காலாள். பரித் தல் - சுமத்தல், இங்குப் பாதுகாத்தல். படி - உலகம், இங்குத் தன் எல்லையுள்ளிட்ட நாட்டுமக்கள், ஆகுபெயர். குடிமக்களின் சம்மதத்திற் கேற்றவாறு உத்தியோகஸ்தரை நியமித்தால்தான் அரசாங்கம் செம்மையாக நடைபெறும்.

## 4. வணிகரியல்பு

கொண்டபடி போலும்விலை பேசிலா பஞ்சிறிது
கூடிவா நய முரைப்பார்
கொள்ளுமொரு முதலுக்கு மோசம் வராதபடி
குறுகவே செலவு செய்வார்
வண்டப் புரட்டர்தா முறிதந்து பொன்னடகு
வைக்கினுங் கடனீந் திடார்
மருவுநா ணயமுளோர் கேட்ட னுப் புகினுமவர்
வார்த்தையி லெலாங்கொ டுப்பார்
கண்டெழுது பற்றுவர வினின்மயிர் பிளந்தே
கணக்கில ணு வாகிலும் விடார்
காசுவீ ணிற்செலவி டாருசித மானதிற்
கன திரவி யங்கள் விடுவார்
மண்டலத் தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற
வணிகர்க்கு முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கொண்டபடி போலும் விலை பேசி - தாம் வியாபாரஞ் செய்வதற்குப் பொருள்களை வாங்கிய விலைக்குத் தக்கபடி விலை சொல்லி, சிறிது இலாபம் கூடி வர நயம் உரைப்பார் - கொஞ்சமே இலாபம் கொண்ட விலையுடன் கூடி வருமாறு பொருள் வாங்குபவருக்கு நஷ்டமாகாத

வகையில் கூறுவார்கள், கொள்ளும் ஒரு முதலுக்கு மோசம் வராதபடி - தாம் பொருள் வாங்க வேண்டுமென்று சேமித்து வைத்திருக்கும் முதல்தொகையில் துண்டு விழாத வகையில், குறுகவே செலவு செய்வார் - வரும் இலாபத்தைக் கொண்டே கொஞ்சமாகச் செலவு செய்வார்கள், வண்டப்புரட்டர் தாம் முறி தந்து பொன் அடகு வைக்கினும் கடன் ஈந்திடார் - திட்டர்கள் பொய்யர்கள் இவர்கள் வாக்குறுதிச் சீட்டு ஈவதுடன் பொன்னும் ஆபரணமும் ஈடாக வைத்தாலும் அவர்களுக்குக் கடன் கொடுக்க மாட்டார்கள், மருவு நாணயம் உள்ளோர் - சொன்ன சொற்படி ஒழுகுதலில் பொருந்தி உள்ள பெரியோர், கேட்டனுப்புகினும் - (முறிதராமற் போயினும் ஆபரணதிகள் ஈடாக வைக்காமற் போயினும்) யாவர் மூலமாகச் சொல்லி அனுப்பினுலும், அவர் வார்த்தையில் எல்லாம் கொடுப்பார் - அந்தப் பெரியோர் சொல்லி அனுப்பும் வாய்மொழி மாத்திரத்தில் நம்பிக்கை வைத்துக் கேட்ட பொருளெல்லாவற்றையும் தயங்காது கொடுப்பார்கள், கண்டு எழுது பற்று வரவினில் - ஒவ்வொரு பொருளையும் தவறாத முறையில் எழுதும்படியான பிறர் வாங்கிய பொருட்குறிப்புக் (கொடுக்கல்) தாம் வாங்கிய பொருட்குறிப்பு (வாங்கல்) முதலிய விவரங்களில், மயிர் பிளந்தே கணக்கில் அணுவாகினும் விடார் - மயிரைப் பிளப்பதால் உண்டாகும் துண்டுகள் போல் மிக நுட்பமான தொகையானுலுஞ் சேர்த்துக் கணக்கில் சின்னதானுலும் விடமாட்டார்கள், காசு வீணில் செலவு இடார் - பணத்தைப் பயன் இல்லாத

விதத்தில் செலவு செய்யமாட்டார்கள், உசிதமானதில் கன திரவியங்கள் விடுவார் - தகுந்த காரியங்களுக்காக ஏராள மான செல்வத்தைச் செலவு செய்வார்கள், இது - மேற் சொன்ன தன்மைகள் எல்லாம், மண்டலத்து ஊடு வர்த்த கம் செய்கின்ற வணிகர்க்கு முறைமை - உலகத்தில் வியா பாரம் செய்யும் வணிகர்களுக்கு உற்ற முறைமைகளாகும், மயிலேறி—, எ - று.

(வி - ரை) கொள்வது மிகையும் கொடுப்பது குறை வும் ஆகாமல் ஒப்பநாடிச் செய்வதே சிறந்த வாணிபமாகும். கொண்டபடி போலும் விலை பேசி லாபம் சிறிது கூடி வர நயம் உரைத்தல் - வாங்கிய விலையைச் சொல்லி இவ் வளவுதான் இலாபம் வைக்கப்பட்டது என்று கூறுதல் உத்தம வாணிபம்; வாங்கிய விலையோடு சேர்த்துச் சிறு இலாபத்தையும் விவரம் சொல்லாமலேயே ஒரு சேரக் கூட்டி உரைத்தல் மத்திம வாணிபம்; அதிக இலாபம் சேர்த்துக் கூறுதல் அதம வாணிபம்.

முதல் - வர்த்தகம் செய்வதற்கென வைத்த தொகை. இக் காலத்து முதலாளித்துவ முறைப்படி முதல் என்றால் பொருள் உற்பத்திக்குப் பயன்படுத்தும் தொகை அல்லது நிலம், யந்திரம் முதலிய பொருள் உற்பத்திச் சாதனங்கள் ஆகும். முதலுக்கு அதிகம் செலவு செய்யின் முழுதும் நாசம் என்றுணர்க. பணத்தைக் காட்டிலும் வாணிபர்க்கு நாண யமே பெரிதென்பதுணர்க.

## 5. வேளாளரியல்பு

நல்லதே வாலயம் பூசனை நடப்பது
நாடோறு மழைபொ ழிவதும்
நாடிய தபோதனர்கண் மாதவம் புரிவதும்
நவில்வேத வேதிய ரெலாஞ்
சொல்லரிய யாகாதி கருமங்கள் செய்வதுந்
தொல்புவி செழிக்கு நலமுஞ்
சுபசோப னங்களுங் கொற்றவர்கள் செங்கோ
லுலங்குமனு நெறிமு றைமையும்
வெல்லரிய சுகிர்தமொடு வர்த்தகன் கொள்விலையும்
விற்பனையு மதிக புகழும்
மிக்கவதி காரமுந் தொழிலாளர் சீவனமும்
வீரரண சூர வலியும்
வல்லமைகள் சகலமும் வேளாளர் மேழியின்
வாழ்வினால் விளைவ வன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) நல்ல தேவாலயம் பூசனை நடப்பதும் - புண்ணியம் தருகின்ற தேவாலய பூசைகள் நடைபெறுவதும், நாள்தோறும் மழை பொழிவதும் - பருவ நாட்களிலெல்லாம் தவறாமல் மழை பெய்வதும், நாடிய தபோதனர்கள் மாதவம் புரிவதும் - கடவுளை நாடும் தவம்

என்பதையே செல்வமாக உடைய முனிவர்கள் பெரிய தவம் இயற்றுவதும், நவில் வேதம் வேதியர் எல்லாம் - சிறப்பித்துக் கூறப்படும் வேதங்களை உடைய அந்தணர்கள் எல்லாரும், சொல் அரிய யாகம் ஆதி கருமங்கள் செய்வதும் - இன்னவை இவ்வளவு என்று சொல்லுவதற்கு அருமையாயிருக்கும் யாகம் செய்தல், செய்வித்தல், ஓதல், ஓதுவித்தல், ஈதல், ஏற்றல் ஆகிய ஆறு தொழில்களையும் செய்வதும், தொல் புவி செழிக்கும் நலமும் - பழமையான உலகம் செல்வத்தில் வளமையுற் றிருக்கும் நன்மையும், சுப சோபனங்களும் - நன்மை பொருந்திய மங்களகரமான காரியங்களும், கொற்றவர்கள் செங்கோல் துலங்கும் மனுநெறி முறைமையும் - அரசர்களது செங்கோல் விளங்குதற்குரிய மனுநீதி முறையும், வெல் அரிய சுகிர்தமொடு - செயிப்பதற்கு அரியதான தர்மத்துடன், வர்த்தகன் கொள்விலையும் விற்பனையும் - வியாபாரிகள் சாமான்களைக் கொள்ளும்விலையும் விற்பனையும், அதிக புகழும் - யாவரும் அரிய காரியங்கள் செய்து சேர்க்கும் மிகுந்த கீர்த்தியும், மிக்க அதிகாரமும் - அரசர்களும் அவன் கீழான அதிகாரிகளும் செலுத்தும் அதிகாரமும், தொழிலாளர் சீவனமும் - உழவு, சிற்பம், தொழில், சித்திரம், வாணிபம், வித்தை முதலிய ஆறு தொழில்களில் ஈடுபடும் தொழிலாளர் வாழ்க்கையும், வீர ரணசூரர் வலியும் - பராக்கிரமம் பொருந்திய போர் செய்யவல்ல வீரரின் வலிமையும், வல்லமைகள் பலவும் - பலவிதமான சக்திகள் யாவும், வேளாளர் மேழியின் வாழ்வினால் விளைவ அன்றோ -

உழவர்கள் கலப்பை இயக்கம் நிலைபெற்றிருப்பதால் உண்டாகின்றன அல்லவா? (ஆம்), மயிலேறி—, எ - று.

(வி - ரை) நாடோறும் மழை பொழிவதும், எல்லா நாட்களிலும் மழை பொழிதல் இயற்கைக்கு மாறானதால் பருவ நாட்களில் என்று பொருள் கொள்ளளப்பட்டது. இச் செய்யுளில் கூறிய எல்லாவற்றினும் கருத்து உழவே சிறப்பானது என்பஃது,

“ உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். ”

என்னும், திருக்குறள் மொழியோடு ஒப்பிட்டு நோக்குக.

பிற தொழில்களால் பொருள் எய்திய வழியும் உணவின்பொருட்டு உழுவார் இடத்தில்தான் செல்லுதல் வேண்டும். பிறதொழில்கள் வருத்தமிலவேனும் அவை உழவுபோல் அவ்வளவு சிறப்பின்மை உணர்க. உழவு செய்ய மாட்டாது பிற தொழில்கள்மேல் செல்வார் யாவரையும் தாங்குதலால் அத்தொழில் தேர்க்கு அச்சாணிபோல் உலகிற்கு மிகவும் இன்றியமையாதது. ஆதலின் உழவு இன்றேல் உலகு அழியும். கொற்றவர்கள் - வெற்றியையுடையவர், அரசர். அரசருக்கு வெற்றியைத் தருபவர் உழவரே.

“ பலகுடை நீழலுந் தங்குடைக் கீழ்க்காண்பர்
அலகுடை நீழ லவர். ” —(குறள்.)

உழவர்கள் தம் அரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண் முழுதும் அவனதாகக் கண்டிருப்பர்.

## 6. பிதாக்கள்

தவமதுசெய் தேபெற் றெடுத்தவன் மூதற்பிதா
        தனைவளர்த் தவனொரு பிதா
    தயையாக வித்தையைச் சாற்றினவ னொருபிதா
        சார்ந்தசற் குருவொரு பிதா
அவமறுத் தாள்கின்ற வரசொரு பிதாநல்ல
        வாபத்து வேளை தன்னி
    லஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோ னொருபி
        வன்புளமு னேனொரு பிதா [தா
கவளமிடு மனைவியைப் பெற்றுளோ னொருபிதா
        கலிதவிர்த் தவனொரு பிதா
    காசினியி லிவரைநித் தம்பிதா வென்றுளங்
        கருதுவது நீதி யாகும்
மவுலிதனின் மதியரவு புனைவிமல் ருதவுசிறு
        மதலையென வருகுரு பரா
    மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
        மலைமேவு குமரேச னே.

(இ - ள்) (ஒருவனுக்குத்) தவமது செய்தே பெற்றெடுத்தவன் முதற் பிதா - நல்ல வினைகள் புரிந்து பெற்றவன் தலைமைவாய்ந்த தந்தையாவான், தன்னை வளர்த்தவன் ஒரு பிதா - தந்தை தவறினால் அவனை வளர்ப்பவன் ஒரு தந்தையாவான், தயை ஆக வித்தையைச் சாற்றினவன் ஒரு

பிதா - கிருபையோடு கல்வியைக் கற்றுக்கொடுக்கும் ஆசான் ஒரு தந்தையாவான், சார்ந்த சற்குரு ஒரு பிதா - அறிவு ஒழுக்கம் முதலியன பொருந்தியவனும் நல்ல ஞானம் உபதேசிப்பவனும் ஆகிய குரு ஒரு தந்தையாவான், அவம் அறுத்து ஆள்கின்ற அரசு ஒரு பிதா - மனித வாழ்விற்குப் பயன்தராத குற்றங்களைக் களைந்து நல்ல முறையில் குடிகளை ஆள்கின்ற அரசன் ஒரு தந்தையாவான், நல்ல ஆபத்து வேளைதன்னில் 'அஞ்சல்' என்று - மிகுந்த கேடு சம்பவிக்கும் நேரத்தில் பயப்படாதே என்று அபயத்தம் தந்து, உற்ற துயர் தீர்த்துளோன் ஒரு பிதா - நேர்ந்த துன்பத்தை அகற்றியவன் ஒரு தந்தையாகும், அன்புள்ள முன்னோன் ஒரு பிதா - அன்புடைய மூத்த சகோதரன் ஒரு தந்தையாவான், கவளம் இடு மனைவியைப் பெற்றுள்ளோன் ஒரு பிதா - அன்போடு அன்னம் இடுகின்ற தனது பாரியையைப் பெற்றவன் ஒரு தந்தையாவான், கலி தவிர்த்தவன் ஒரு பிதா - தரித்திரத்தை நீக்கியவன் ஒரு தந்தையாவான், காசினியில் இவரை நித்தம் பிதா என்று உள்ளம் கருதுவது நீதி ஆகும் - உலகில் எப்போதும் இவர்களைத் தந்தைக்குச் சமானம் என்று மனத்தில் கொண்டு அதன்படி நடப்பது நல்ல நெறி ஆகும், மவுலிதன்னில் மதி அரவு புனை விமலர் உதவு - தமது திருமுடியில் ஒற்றைக்கலையுடைய இளஞ் சந்திரனையும் பாம்பையும் அலங்காரமாக அணிந்திருக்கும் பரிசுத்தமூர்த்தி ஆகிய சிவபிரான் ஈன்றருளிய, மதலை என வரு குருபரா - குமாரன் என்று எழுந்தருளும் மேன்மை பொருந்திய சற்குருமூர்த்தியே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) வித்தையைக் கற்பிப்பவன் இடத்து அருள் இன்றியமையாதது என்பார் 'தயையாக வித்தையைச் சாற்றினவன்' என்றார். குரு, கு - அஞ்ஞான இருளை, ரு - நீக்குபவன். 'அவம் அறுத்து ஆள்கின்ற அரசு' என்பதனோடு இவ் வாசிரியர் அரசர் முறைமையில் கூறிய "பல்லுயிர் எலாந்தன் உயிர்க்கு நிகர் என்றே பரித்தல், குற்றங்கள் களைதல்" என்று கூறி இருப்பதை ஒப்பிட்டு நோக்குக. அவம் - பயன் இன்மை, பயனில்லாதன வெல்லாம் குற்றத்தின்பாலே படும். 'அவம் அறுத்து' என்றதனால் கோடுங்கோலனை நீக்கினார். துயர் தீர்ப்பவன் - நண்பன். 'நல்ல' இங்கு நன்மையைக் குறிக்காது மிகுதி மாத்திரமாக நின்றது; நல்லபாம்பு என்பதுபோல. அன்புள்ள முன்னோன் பிதா - ஜ்யேட்ட பிராதா பித்ருசமஃ, இதனால் அன்பில்லாத மூத்த சகோதரனை நீக்கினார் என்க.

கவளமிடு மனைவியைப் பெற்றுள்ளோன் என்றதனால் அன்போடு அன்னமிடாத பிடாரியைப் பெற்றவனை நீக்கினார். ஏனையவற்றுக்கும் இவ்வாறே கொள்க. உண்மையில் பெற்றெடுப்பவனே பிதாவாகும். ஏனைய எட்டுப்பேரையும் தந்தை என்றது அவனது தன்மையை அவர்களிடத்துக் காண்பதால்தான்; இது உபசார வழக்கு என்பர்.

பிரம்மனுக்குப் பிரணவப்பொருள் தெரியாது போனதால் அவனை முருகக்கடவுள் சிறையிலிட, இஃதறிந்த சிவபெருமான் வந்து கேட்க அவருக்கு அதனை உபதேசித்ததாலும், தமிழுக்குத் தலைமையான இறைவன் ஆனதாலும்,

அகத்திய முனிவர்க்குத் தமிழ் உணர்த்தியதாலும் குருபரா என்ருர்.

## 7. ஒன்றை யொன்று பற்றியிருப்பன

சத்தியந் தவரு திருப்பவ ரிடத்தினிற்
சார்ந்துதிரு மாதிருக் குஞ்
சந்ததந் திருமா திருக்கும விடந்தனிற்
றனது பாக்கியமிருக் கும்
மெய்த்துவரு பாக்கிய மிருக்கும விடந்தனில்
விண்டுவின் கலையிருக் கும்
விண்டுவின் கலைபூண் டிருக்கும விடந்தனில்
மிக்கான தயையிருக் கும்
பத்தியுட னினியதயை யுள்ளவ ரிடந்தனிற்
பகர்தரும மிகவிருக் கும்
பகர்தரும முள்ளவ ரிடந்தனிற் சத்துரு
பலாயனத் திறலிருக் கும்
வைத்திசை மிகுந்ததிற லுள்ளவ ரிடத்தில்வெகு
மன் னுயிர் சிறக்குமன்ருே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) சத்தியம் தவருது இருப்பவர் இடத்தினில் - உண்மை பிசகாமல் நடப்பவரிடத்தில், சார்ந்து

திருமாது இருக்கும் - தனக்கு இஷ்டமானவரிடத்தில் பொருந்தி இலக்குமி வசிப்பாள், சந்ததம் திருமாது இருக்கும் இடந்தனில் தனது பாக்கியம் மிக இருக்கும் - எப்போதும் யாரிடத்தில் இலக்குமி வாசம் செய்கின்றளோ அவன் இடத்தில் எப்போதும் செல்வச்சம்பத்து மிகுந்து இருக்கும், மெய்த்துவரு பாக்கியம் இருக்கும் இடந்தனில் விண்டுவின் களை இருக்கும் - அழிதல் இல்லாத உண்மை யான பாக்கியம் இருக்கும் இடத்தில் திருமாலின் அழகான மூர்த்திகரம் இருக்கும், விண்டுவின் களை பூண்டு இருக்கும் இடந்தனில் மிக்கான தயை இருக்கும் - திருமாலின் மூர்த்தி கரம் நிலைபெற்று இருக்கும் இடத்தில் மிகுந்த அருள் இருக் கும், பத்தியுடன் இனிய தயை உள்ளவர் இடந்தனில் பகர் தருமம் மிக இருக்கும் - கடவுள்பக்தியுடன் சீவராசி களுக்கு இனிமையை உண்டாக்கும் அருள் இருக்கும் இடத்தில் நூல்களால் சிறப்பித்துக் கூறப்படும் தருமம் இருக்கும், பகர் தருமம் உள்ளவர் இடந்தனில் சத்துரு பலாயனம் திறல் இருக்கும் - நூல்களாற் கூறப்படும் தரு மத்தை உடையவர் இடத்தில் பகைவரைப் புறமுதுகு காட்டி ஓடச் செய்யும் வலிமையும் வெற்றியும் இருக்கும், எத்திசை மிகுந்த திறல் உள்ளவர் இடத்தில் வெகு மன்னுயிர் சிறக்கும் அன்றே - எல்லாத் திக்குகளிலும் பரவி விளங்குகின்ற வலிமையும் வெற்றியும் உள்ளவர் (அரசர்) இடத்தில் நிலைபெற்ற உயிரினங்கள் ஓங்கி வளரும் அல்லவா? (ஆம்), மயிலேறி—, எ - று.

## 8. இவர்க்கிவர் தெய்வமெனல்

ஆதுலர்க் கன்னங் கொடுத்தவர்க ளேதெய்வ
மன்பான மாணுக் கருக்
கரியகுரு வேதெய்வ மஞ்சினோர்க் காபத்
தகற்றினோ னேதெய்வ மாம்
காதலுறு கற்புடைய மங்கையர் தமக்கெலாம்
கணவனே மிக்க தெய்வங்
காசினியின் மன்னுயிர் தமக்கெலாங் குடிமாபு
காக்குமன் னவர்தெய்வ மாம்
ஓதரிய பிள்ளைகட் கன்னைதந் தையர்தெய்வ
முயர்சாதி மாந்தர் யார்க்கு [போர்க்
முறவின்முறை யார்தெய்வம் விசுவாச முள்ள
குற்றசிவ பத்தர் தெய்வம்
மாதயையி னுற்சூத் திரர்க்குமறை யோர்தெய்வ
வானவர்க் குத்தெய்வ நீ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) ஆதுலர்க்குத் தெய்வம் அன்னம் கொடுத்தவர்களே - தரித்திரருக்குச் சோறு இடுபவர்களே தெய்வமாவார்கள், அன்பான மாணுக்கருக்கு அரிய குருவே தெய்வம் - படிப்பின்மீதும் ஆசான்மீதும் மெய்யான அன்

புடைய மாணுக்கருக்குக் கிடைத்தற்கரிய குருவே தெய்வ மாவான், அஞ்சினோர்க்கு ஆபத்து அகற்றினோனே தெய் வம் ஆம் - கேடு உற்றபோது பயப்பட்டவருக்கு அவரது ஆபத்தை நீக்கியவனே தெய்வமாவான், காதல் உறு கற்புடைய மங்கையர் தமக்கெல்லாம் (காதல் உறு) கணவனே மிக்க தெய்வம் - அன்பு மிகுந்துள்ள கற்புள்ள மாதர்களுக்கெல்லாம் அன்பு மிகுந்துள்ள தத்தமது புருஷன்மாரே மிகுந்த தெய்வமாவார், காசினியின் மன் உயிர் தமக்கெல்லாம் குடிமரபு காக்கும் மன்னவர் தெய்வம் ஆம் - பூமியில் நிலைபெற்ற சீவர்களுக்கெல்லாம் அரசர்கள் குடிகளையும் அவரது குலப்பெருமையையும் காப்பாற்று வதால் தெய்வம் ஆவார்கள், பிள்ளைகட்கு அன்னை தந்தையர் ஓது அரிய தெய்வம் - புத்திரர்களுக்குத் தாய்தந்தையரே சொல்லுதற்கரிய தெய்வம் ஆவார் கள், உயர் சாதி மாந்தர் யார்க்கும் உறவின்முறை யார் தெய்வம் - நற்காரியம் புரிந்து உயர்வை அடை யும் மாந்தர் இனத்திற்கெல்லாம் உரிமையுடைய பந்துக் களே தெய்வம் ஆவார்கள், விசுவாசம் உள்ள பேர்க்கு உற்ற சிவபத்தர் தெய்வம் - நம்பிக்கை உள்ளவர்களுக் கெல் லாம் உண்மை மிகுந்த சிவனடியார்கள் தெய்வம் ஆவார் கள், மா தயையினல் சூத்திரர்க்கு மறையோர் தெய்வம் - மிகுந்த அருள் செய்வதால் உழைப்பாளிகளுக் கெல்லாம் அந்தணர் தெய்வம் ஆவார்கள், நீ வானவர்க்குத் தெய்வம் - நீ விண்ணுலகத்தவருக்குத் தெய்வம் ஆவாய், மயிலேறி—, எ - று.

(வி - ரை) 'காதல் உறு' மத்திம தீபமாகக் கணவனுக்கும் சென்று இயைந்தது. அன்புள்ள கணவனே தெய்வமாவான். கணவன் மனைவிக்குத் தெய்வம் என்றது அடிமைத்தனத்திற்குக் குறி அன்று. கணவன்மீது எல்லை அற்ற அன்பு செலுத்தும்போது அவள் கண்ணுக்கு அவன் தெய்வ சொரூபமாகக் காணப்படுகின்றான். கணவனும் அன்பு செலுத்தும்போது மனைவி பெண்தெய்வ வடிவமாகத் தோன்றுகின்றாள். அன்பில்லையேல் இவ்விதமாகாது.

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை." —(திருக்குறள்.)

கற்பு - பெண்மைக் குணங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்குப் பெண் தன்னுள்ளே உறுதியைக் கற்பித்துக் கொள்ளுதல்.

பிள்ளைகட்கு அன்னை தந்தையர் ஒது அரிய தெய்வம் - மாதாபிதா குரு தெய்வம் என்ற தொடரில் மாதா பிதா முதலில் வருவதால் அவர்கள் ஒது அரிய தெய்வம்; அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் அன்றோ. உறவின்முறையாரைத் தெய்வமாகக் கருதுபவர் எல்லாரும் உயர் சாதியினராகின்றனர்.

சூத்திரர் - நான்காவது தொழில் கூட்டத்தாராகிய வேளாளர்; இப் பெயர் மீது இக்காலத்து அதிக வெறுப்புண்டா யிருக்கின்றது; ஆதலின் தமிழ் மொழியாகிய 'வேளாளர்' குற்றமற்றது. மா தயை உடைய அந்தணரே

உழவருக்குத் தெய்வமாகும். தங்களது செந்தண்மை பூண்டொழுகும் ஒழுக்கத்தினல் மழை பெய்வித்தல் முதலியன செய்பவர்களே தெய்வம், இதனல் இதாரை நீக்கினர்.

## 9. இவர்க்கிதில் நினைவெனல்

ஞானநெறி யாளர்க்கு மோக்ஷத்தி லேநினைவு
நல்லறிவு ளோர் தமக்கு
நாடொறுந் தருமத்தி லேநினைவு மன்னர்க்கு
ராச்சியந் தன்னி னினைவு
ஆனகா முகருக்கு மாதர்மே லேநினைவு
அஞ்சாத திருடருக் கிங்
கனுதினங் களவிலே நினைவுதன வணிகருக்
காதாய மீது நினைவு
தானமிகு குடியாள ருக்கெலாம் வேளாண்மை
தனினினைவு கற்ப வர்க்குத்
தகுகல்வி மேனினைவு வேசியர்க் கினியபொரு
டருவோர்கண் மீது நினைவு
மானபர னுக்குமரி யாதைமே னினைவெற்கு
மாறுதுன் மீது நினைவு
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) ஞான நெறி ஆளர்க்கு மோக்ஷத்திலே நினைவு - முக்தி மார்க்கத்தில் ஈடுபடுபவருக்கு முக்தியி

லேயே தியானம் இருக்கும், நல்ல அறிவு உள்ளோர் தமக்கு நாள்தோறும் தருமத்திலே நினைவு - சிறந்த ஞானம் படைத்தவருக்குத் தினந்தோறும் அறநெறியிலேயே கவனம் இருக்கும், மன்னர்க்கு இராச்சியந் தன்னில் நினைவு - அரசருக்குத் தமது நாட்டைப் பாதுகாக்கும் தொழிலிலேயே கருத்திருக்கும், ஆன காமுகருக்கு மாதர் மேலே நினைவு - உண்டான காமப்பித்துடைய தூர்த்தருக்கு மங்கையர் மீதே ஞாபகம் இருக்கும், உள் அஞ்சாத திருடருக்கு இங்கு அனுதினம் (உம்) களவிலே நினைவு - நெஞ்சம் அஞ்சாத களவாடிகளுக்கு இங்குத் தினந்தோறும் களவு புரிதலிலேயே நாட்டம் இருக்கும், தனம் வணிகருக்கு ஆதாயம்மீது நினைவு - நிறைந்த செல்வம் உடைய வியாபாரிகளுக்கு இலாபத்தின் மேலேயே நோக்கம் இருக்கும், தானம் மிகு குடி ஆளருக்கெல்லாம் வேளாண்மை தனில் நினைவு - தானஞ் செய்வதில் மிகுந்த உழவர்களுக்கெல்லாம் பயிர்த்தொழிலிலேயே எண்ணம் இருக்கும், கற்பவருக்குத் தகு கல்விமேல் நினைவு - படிக்கும் மாணாக்கருக்குத் தகுந்த கல்விமீதே விருப்பம் இருக்கும், வேசியர்க்கு இனிய பொருள் தருவோர்கள்மீது நினைவு - வேசி மங்கையர்க்கு யார் தாம் விரும்பும் செல்வம் தருவர்களோ அவர்கள்மீதே மனம் இருக்கும், மானம் பரனுக்கு மரியாதை மேல் நினைவு - மானம் என்னும் மேன்மையையுடைய பெரியானுக்கு மரியாதைமீதே அபிமானம் இருக்கும், எற்கு மாறாது உன்மீது நினைவு - அடியேனுக்கு இடை விடாமல் உன்மீதே நினைவிருக்கின்றது, மயிலேறி—, எ - று.

(வி - ரை) தருமம் - அறம்; தானம் அன்று. அது தான் நல்ல நூல்களில் விதித்தது செய்தல் விலக்கியது விடுத்தலாகும். காமுகர் - காமப் பித்துடைய தூர்த்தர், இன்னவள்மீதுதான் மோகங்கொள்ளுதல் என்றவரையறை இல்லாதவர்; இன்ன நேரத்தில் தான் மோகம் பாராட்டுதல் என்ற வரையறையும் இல்லாதவர். "பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்ருல்," கம்ப ராமாயணம். உள் - நெஞ்சம்; தான் செய்யும் களவு, தீமை யென்று நெஞ்சு சாட்சியாகக் கூறினும் அதற்கும் அஞ்சாத வர் திருடர்கள். வேளாண்மை, உழவுத்தொழிலுடன் ஈகை உபகாரம் மெய் எல்லாங் கொள்க. வேசியர் - தங்கள் நலத்தை விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகார் என்னும் வரம்பு இல்லாத மகளிர். அவர்கள் பொருள் கொடுப்பாருக்கே இணங்குவர். பொருள் கொடுப்பவர்மீதும் அன்பு செலுத்தாது அவர்கள் கொடுக்கும் பொருள்மீதே நாட்டம் உடையவர். அன்புடையவர்போல் பாசாங்கு செய்யும் மனமும் உண்மையில் பொருள்மீதே செல்லும் மனமும் ஆக அவர்க்கு இரண்டுண்டு. அதனுலே திருவள்ளுவர் அவர்களை இருமனப் பெண்டிர் என்ருர். மேலும் அவர்களை அவர் "அன்பின் விழையாப் பொருள் விழையும் ஆய்தொடியார்" என்றும் "பொருள் பெண்டிர்" என்றும் கூறி, இருத்தல் நோக்குக.

## 10. இவர்க்கிது இல்லையெனல்.

வேசைக்கு நிசமில்லை திருடனுக் குறவில்லை
வேந்தற்கு நன்றி யில்லை
மிடியற்கு விலைமாதர் மீதுவங் கணமிலை
மிலேச்சற்கு நிறைய தில்லை
ஆசைக்கு வெட்கமிலை ஞானியா னவனுக்கு
ளகமில்லை மூர்க்கன் றனக்
கன்பில்லை காமிக்கு முறையில்லை குணமிலோற்
கழகில்லை சித்த சுத்தன்
பூசைக்கு நவிலங்க சுத்தியிலை யாவுமுணர்
புலவனுக் கயலோ ரிலை
புல்லனுக் கென்றுமுசி தானுசித மில்லைவரு
புலையர்க் கிரக்க மில்லை
மாசைத் தவிர்ந்தமதி முகதெய்வ யானையொடு
வள்ளிக் கிசைந்த வழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) வேசைக்கு நிசமில்லை - வேசிக்கு உண்மை இல்லை, திருடனுக்கு உறவில்லை - கள்ளனுக்குப் பந்துக் களும் நண்பர்களும் இல்லை, வேந்தற்கு நன்றி இல்லை - அரசனுக்கு (எவ்வளவு நன்மை செய்தவனாயினும் ஒருவன் அரசுக்கு விரோதமாயின் முன் செய்த) நன்றி (பாராட்

டுதல்) இல்லை, மிடியற்கு விலைமாதர்மீது வங்கணம் இல்லை - வறுமை உற்றவனுக்கு வேசிகள்மீது (பணம் கொடுக்க இயலாமையால்) நேசம் (பாராட்டுதற்கு) இல்லை, மிலேச்சற்கு நிறையது இல்லை - கீழ்மகனுக்கு நிறைகுணம் இல்லை, ஆசைக்கு வெட்கம் இல்லை - (பாராட்டுதற்கு உரியதா அன்று என்ற வரம்பின்மையால்) ஆசைக்கு நாணம் இல்லை, ஞானி ஆனவனுக்கு உள் அகம் இல்லை - ஞானியின் மனத்தில் 'நான்' என்ற அகங்காரம் இல்லை, மூர்க்கன் தனக்கு அன்பு இல்லை - (பிடிவாதஞ் செய்யுங் கொடிய) மூர்க்கனுக்கு அன்பு இல்லை, காமிக்கு முறை இல்லை - காமப் பித்துடையவனுக்குத் (தாயென்றும் தங்கை யென்றும் தன்மீது காதல் உடையவளா இல்லையா தகுந்த காலமா இல்லையா என்ற) வரம்பு இல்லை, குணம் இல்லோர்க்கு அழகு இல்லை - நற்குணமில்லாதவனுக்கு அழகு இல்லை, சித்த சுத்தன் பூசைக்கு நவில் அங்கசுத்தி இல்லை - மனம் பரிசுத்த முடையவனின் ஆராதனைக்குச் (செய்துதான் ஆக வேண்டும் என்று) சொல்லப்பட்ட (நீரினால் ஆகும்) சுத்தம் (அவ்வளவாகப் பாராட்டக் கூடியது) இல்லை, யாவும் உணர் புலவனுக்கு அயலோர் இல்லை - எல்லாம் தெரிந்த கவிவாணர்களுக்கு (இவர்) அயலார் (என்றும் சொந்தக்காரர் என்றும் பாகுபாடு) இல்லை (யாவரும் பொதுவாக உரியவரே), புல்லனுக்கு என்றும் உசிதம் அனுசிதம் இல்லை - அற்பனுக்கு எப்போதும் இது தகுந்தது இது தகாதது என்ற பகுத்தறிவு இல்லை, வரு புலையற்கு இரக்கம் இல்லை - (கொலைத் தொழிலும் புலால் தின்னலும்)

பொருந்திய புலையனுக்கு அருள் இல்லை, மாசைத் தவிர்த்த மதிமுகம் தெய்வயானை ஒரு வள்ளிக்கு இசைந்த அழகா - களங்கம் இல்லாத பூரண சந்திரனை ஒத்த முகமுடைய தெய்வயானை அம்மையாருக்கும் வள்ளி நாச்சியாருக்கும் இணக்கம் உடைய அழகனே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) வேசைக்கு நிசமில்லை - தன்னிடம் வந்தவனோடு தன்னுடல் பொருந்தினும் மனம் பொருந்தாள், பணத்தின்மீதே மனம்வைப்பாள். ஆதலின் வேசியிடத்தில், உண்மை கிடையாது. வேந்தர்க்கு நன்றி இல்லை. எவ்வளவு அன்புடைய நண்பனாயினும், எவ்வளவு உபகாரம் செய்தவனாயினும் ஒருவன் நாட்டிற்கு அவசியமில்லை என்று தோன்றினால் அரசன் அவனைத் தண்டித்து விடுவான், நாடு கடத்தி விடுவான், அல்லது முற்றும் ஒழித்து விடுவான்; அப்போது அவன் முன் செய்த நன்மையை அரசன் கருத மாட்டான். மிலேச்சன் - நீச்சன், ஈனன், கீழ்மகன்.

“ கடுக்கெனச் சொல்வற்றாங் கண்ணோட்ட மின்றா
மிடுக்கண் பிறர்மாட் டுவக்கும்—அடுத்தடுத்து
வேக முடைத்தாம் விறன்மலை நன்னாட
வேகுமா மெள்ளுமாங் கீழ்” —(நாலடியார்)

பாண்டியனே ! கீழ்மகன் கடுஞ்சொல் உரைப்பான், நட்பு செய்யான், பிறர் கஷ்டம் பார்த்துச் சந்தோஷிப்பான். சினங் கொள்வான், போவான், இகழ்ச்சி செய்வான். இத்தகைய கீழான குணங்களையே கீழ்மகன் உடையவனா

யிருப்பான் என்பார் 'மிலேச்சற்கு நிறைவில்லை' என்றார். சித்த சுத்தன் பூசைக்கு நவில் அங்கசுத்தி இல்லை,

"புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்" —(குறள்)

துறந்தவர்க்குப் புறத்தூய்மையும் அகத்தூய்மையும் வேண்டுமென்றாலும் இரண்டாவதே மிகவும் முக்கியம். அகத்தூய்மை இன்றிப் புறத்தூய்மை மட்டு உடையதாதல் சிறப்புடமை யாகாது. புலையற்கு இரக்கமில்லை.

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்" —(குறள்)

"அருளல்ல தியாதெனில் கொல்லாமை கோறல்" —(,,)

கொல்பவனுக்கும் மாமிசம் உண்பவனுக்கும் இரக்கமில்லை என்பதை இவற்றால் உணர்க. 'மாசைத் தவிர்த்த மதி முகம்' இது தெய்வயானைக்கும் வள்ளிக்கும் பொதுவாகும்.

## 11. இப்படிப்பட்டவர் இவரெனல்

நியாயநெறி தவறாம லுலகபரி பாலனை
நடத்துமவ னேயரச னும்
ராசயோ சனைதெரிந் துறுதியா கியசெய்தி
நவிலுமவ னேமந் திரி
நேயமுட னேதன் சரீரத்தை யெண்ணாத
நிர்வாகி யேசூர னும்

நிலைபெறு மிலக்கண மிலக்கிய மறிந்துசொலு
நிபுணகவி யேகவிஞனும்
ஆயதொரு வாகடந் தாதுவி னிதானமு
மறியுமுதி யோன் வைத்திய
னகமின்றி மெய்யுணர்ந் தைம்புல னொழித்துவி
டவனேமெய்ஞ் ஞானி யெனலாம் [ட்
மாயவர் சகோதரி மனோன்மணிக் கன்பான
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனே புல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) நியாயம் நெறி தவறாமல் உலக பரிபாலனம் நடத்தும் அவனே அரசனும் - நீதிமார்க்கத்தி னின்றும் பிசகாமல் செங்கோல் முறைமையோடு உலகத்தை அரசாட்சி செய்பவனே நல்ல அரசன் எனப்படுவான், நிருபர் யோசனை தெரிந்து உறுதி ஆகிய செய்தி நவிலும் அவனே மந்திரி - அரசனது ஆலோசனையுங் கேட்டு (அவனிடத்தில் குற்றம் இருக்குமாகில் அது நோக்கி) உறுதி ஆனவற்றைச் சொல்லுபவனே உத்தம மந்திரி ஆவான், நேயமுடனே தன் சரீரத்தை எண்ணாத நிர்வாகியே சூரன் ஆம் - தன் தலைவன்மீது நட்பு உடையவனாய்த் தன்னுடல் அழிந்து போவதாயினும் கருதாதவனாய் ஊழியஞ் செய்யும் போர்த் திறமை உடையவனே சிறந்த படைவீரன் ஆவான், நிலை பெறும் இலக்கணம் இலக்கியம் அறிந்து சொல்லும் நிபுண

கவியே கவிஞன் ஆம் - நிலைபெற்றுள்ள இலக்கணம் இலக்கியம் முதலிய நூல்களை ஆராய்ந்து தெளிவுடன் உணர்ந்து (அறம், பொருள், இன்பம், வீடு ஆகும் நான்கையும் உட்கொண்ட) நூல்களைப் பாட வல்லவனே புகழ்பெற்ற கவி ஆவான், ஆயது ஒரு வாகடம் தாதுவின் நிதானமும் அறியும் முதியோன் வைத்தியன் - ஆராய்வதற்கு உரிய ஒப்பற்ற வைத்திய நூல்களையும் நாடியின் தன்மையும் அப்படியே உணர்ந்து கொள்ளும் அனுபவமும் வளரப் பெற்றவனே மேலான வைத்தியனாகும், அகம் இன்றி மெய் உணர்ந்து ஐம்புலன் ஒழித்து விட்டவனே மெய்ஞ்ஞானி எனலாம் - தான் அல்லாத உடலைத் 'தான்' என நினைக்கும் அகங்காரம் இல்லாமல் மனத்தைச் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்ற ஐந்து புலன்கள் வழியாகச் செல்லுதலை நீக்கிவிட்டவனே மெய்ஞ்ஞானி எனப் படுவான், மாயவர் சகோதரி மனோன்மணிக்கு அன்பான வர புத்ர வடிவேலா - மகாவிஷ்ணுவின் உடன் பிறந்தவள் ஆன உமாமகேஸ்வரிக்கு அன்புள்ள சிரேட்டமான மகனே!, கூர்மையான வேற்படையை யுடையவனே!, மயிலேறி விளையாடும்—, எ - று.

(வி - ரை) முதியோன் வைத்தியன் என்பதைப் 'பால ஜோஸ்ய ஃ விருத்த வைத்ய ஃ' எனும் வடமொழிப் பழமொழியோடு ஒப்பிட்டு நோக்குக.

மெய்யுணர்தல் - பிறப்பு மோக்ஷங்களையும், அவற்றின் காரணங்களையும், விபரீத ஐயங்களால் அன்றி உண்மையால் உணர்தல்.

மாயவர் சகோதரி, கிருஷ்ணமூர்த்தியை வளர்த்தெடுத்த நந்தகோபருக்குப் பிறந்தவள் பார்வதியின் அம்சமாகிய துர்க்கை ஆகும். அக் குழந்தையை எடுத்துக்கொண்டுதான் வசுதேவர் கிருஷ்ணசிசுவை யசோதை பக்கம் வைத்தது. இதனுல் பார்வதி திருமாலின் தங்கை ஆகும் என்ற ஓர் முறைமை உண்டு.

மனோன்மணி என்பது மநோந்மநி என்னும் வடமொழியின் மரூஉ. மநோந்மநன், பகைவர் நெஞ்சத்தைக் கலக்குபவன் என்பது பொருள், சிவபிரான். மநோந்மநி என்பது பெண்பால்; ஈங்குப் பார்வதிக்காயிற்று. வரபுத்ரன் - மேன்மையான மகன், அல்லது பார்வதியின் அனுக்கிரகத்தால் உதித்த மகன். வரம் - மேன்மை, அனுக்கிரகம்.

அழகிலும் ஆண்மையிலும் சிறந்தவன் முருகன். வடிவேல் - காய்ச்சி அடித்துக் கூர்மையாக்கின வேல், அல்லது தேர்ந்தெடுத்த வேல்.

சிவபிரானல் முருகனுக்கு வேற்படை கிடைத்த விதத்தை,

"ஆயதன் பின்னர் ஏவின்மூ தண்டத்
தைம்பெரும் பூதமும் அடுவ
தேயபல் லுயிரு மொருதலை முடிப்பத்
தேவர்மேல் விடுக்கினு மவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி
மன்னுயி ருண்பதெப் படைக்கு

நாயக மாவ தொருதனிச் சுடர்வேல்
நல்கியே மதலைகைக் கொடுத்தான்."

என்னும் கந்தபுராணச் செய்யுளால் அறிக. வேல் கொண்டு சூரபன்மன் கொண்ட மாமர கிரௌஞ்சகிரிகளைப் பிளந்ததும் அவனது உடல் இரு கூறாகப் பிளந்ததும் ஆகிய வெற்றிகள் பெற்றமையால் முருகனுக்கு வேலன் என்றதோர் சிறப்புப்பெயரும் வழங்கும்.

## 12. விரைந்தடக்கத் தகுவன இவையெனல்

அக்கினியை வாய்முந்து துர்ச்சனரை வஞ்சமனை
யாளைவளர் பயிர்கொள் களையை
யஞ்சா விரோதிகளை யனியாய முடையோரை
யகிர்த்தியப் பெண்க ளார்ப்பைக்
கைக்கினிய தொழிலாளி யைக்கொண்ட வடிமை
களவுசெய்யுந் திருடரைக் [யைக்
கருதிய விசாரத்தை யடக்கமில் பலிகையைக்
கடிதான கோபந் தனை
மெய்க்கினித லாப்பிணியை யவையுதா சீனத்தை
வினைமூண்டி டுஞ் சண்டையை
விஷமேறு கோரத்தை யன்றடக் குவதலான்
மிஞ்சவிட லாகாது காண்
மைக்கினிய கண்ணிகுற வள்ளிதெய் வானையை
மணஞ்செய்த பேரழகனே

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) அக்கினியை-பற்றி மிகவும் எரியும் நெருப்பையும், வாய்முந்து துர்ச்சனை-எதர்க்கும் தூஷணை சொல்ல முந்தும் வாயுடைய துட்டனையும், வஞ்சம் மனையாளை - கொண்டவனுக்கு இரண்டகம் செய்யும் மனைவியையும், வளர் பயிர் கொள் களையை-வளர்கின்ற பயிரை அழிக்கின்ற இயல்புடைய களையையும், அஞ்சா(த) விரோதிகளை - (பழிபாவத்திற்குச் சற்றும்) பயப்படாத பகைவர்களையும், அனியாயம் உடையோரை - நீதி அற்றவர்களையும், அகிர்த்திய பெண்கள் ஆர்ப்பை - துட்ட நடவடிக்கையுடைய மாதர்கள் செய்யும் ஆரவாரத்தையும், கைக்கு இனிய தொழிலாளியை - சிறுமையை இனிதாகக் கொள்ளும் வேலைக்காரனையும், கொண்ட அடிமையை - தனது தொழிலைச் செய்விப்பதற்காகக் கொண்ட தாசனையும், களவு செய்யும் திருடரை - பிறர் பொருளை வஞ்சிக்கும் கள்ளரையும், கருதிய விசாரத்தை - மனத்தில் குடிகொண்ட துயரத்தையும், அடக்கம் இல் பலிகையை-பெரியோர்க்கு அடங்குதல் இல்லாத இளம் பெண்ணையும், கடிது ஆன கோபம் தன்னை - கொடிய சினத்தையும், மெய்க்கு இனிது அல்லா(த) பிணியை - உடலின் சுக இனிமையைப் போக்கும் நோயையும், அவை உதாசீனத்தை - சபையில் உள்ளோர் தன்மீது கொள்ளும் வெறுப்பையும், வினை மூண்டிடும் சண்டையை - பாபம் வளர்வதற்குக் காரணமாகிய சண்டையையும்,

கோரம் ஏறும் விஷத்தை - கடுமையும் ஏறுந் தன்மையும் பொருந்திய விஷத்தையும், அன்று அடக்குவது அல்லால் மிஞ்ச விடல் ஆகாது - அப்பொழுதே அடக்குவதற்கு உரியதாகும் அன்றி அவற்றை வளர விடுதல் தகாது, மைக்கு இனிய கண்ணி குறவள்ளி தெய்வானையை மணம் செய்த பேர் அழகனே - அழகு வாழ்வதற்கு இனிமையான கண்களையுடைய குறவர்குலத்து வளர்ந்த வள்ளிநாச்சியார் தெய்வயானை அம்மையார் இருவரையும் கலியாணஞ்செய்து கொண்ட அளவில்லாத அழகையுடைய முருகனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) வாய் முந்து துர்ச்சனர் - பிறரைத் தூஷணை செய்வதையே முதன்மையான தொழிலாகவுடையவர். இவரிடத்து 'அடக்குவது' என்பது அவர் கண்ணுக்குத் தெரியாமல் விலகிக் கொள்வது. வஞ்சமனையாள் :— தன்னைக் காத்துத் தன்னைக் கொண்டவனைக் காத்து பெருமை பொருந்திய தனது தாயகக்குடும்பம் புகுந்த குடும்பம் இரண்டின் நல்ல பெயரைக் காத்துச் சோர்வில்லாதவளே நல்ல மனைவி. இந்தத் தன்மை இல்லாது கைப்பிடி நாயகன் தூங்கையில் அவன் கையெடுத்து அப்புறம் அயல் வளவி வருபவளே வஞ்ச மனைவி ஆவாள். அவளை "அடக்குதல்" என்றது அவளை விட்டுப் பிரிதலாகும். "மாறுக இருப்பளேல் கூறுமல் சன்னியாசங்கொள்" என்ற மொழி நோக்குக. அகிர்த்தியம் - அ கிருத்யம்; தகாத செய்கை. கெட்ட நடக்கையுடைய மாதர்கள் ஒருவருக்கொருவர்

பூசல் இட்டுச் சச்சரவு புரிவர். பின்னர் அவர்கள் இடை மட்டும் இருக்கும் சண்டை ஆடவர்கள் இடையேயும் நிகழும். ஆதலின் விரைந்து அம்மாதர்கள் ஆரவாரத்தை அடக்குதலே நல்லது.

கைக்கு இனிய தொழிலாளி, (கை - சிறுமை), சிறு மையை மிகுதியாகவுடைய தொழிலாளி; இங்கு 'இனிமை' மிகுதி மாத்திரமாய் நின்றது. கீழ்மைக்குணமுடைய தொழிலாளியால் காரியம் சிதைந்துவிடும். அவனுடைய கீழ்மையை அடக்கவேண்டும். அல்லது அவனைத் தொழிலி லிருந்து அகற்ற வேண்டும். ஒருவன் கொண்ட அடிமை - விலை கொடுத்து வாங்கும் அடிமை; இந் நாள்களில் வழக்க மில்லை. முக்காலத்தில் வேலை வாங்கப் பணங் கொடுத்து அடிமைகளை வாங்குவர். அப்போது எப்போதும் அடிமை களை அடக்கத்திலேயே வைத்திருப்பர். அடக்கம் இல் பலிகை, பாலிகை முதற் குறைந்து நின்றது. அடக்கம் இல்லாத பதட்டமுள்ள பெண்களால் குடும்பத்துள் குழப்பம் உண்டாதலே அனுபவத்தில் அறிகின்றோம்.

கடிதான கோபம்,

"தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்." —(குறள்.)

பிணி - நோய், "நோய்க்கிடங்கொடேல்" நோயற்ற வாழ்வே இனிது. பிணியை அடக்குவதாவது, பிணி வராததற்கு உரிய ஏற்பாடுகள் செய்யவேண்டும். குளித்தல், நல்ல இடத்தில் வசி த்தல், உணவு, உடை, தண்ணீர் முதலியன சுத்தமாகவைத்தி

ருத்தல் நலம். நோய் கண்ட பின்னர் துரிதமாக யுக்த வைத்தியம் புரிந்து அடக்கவேண்டும். வினை - தீவினையின் பயனாகிய பாவம். மைக்கு இனிய கண் - மையிடுவதற்கு இனிமையாகிய கண். மை இட்டாலும் அழகு தோன்ருத கண்களும் உண்டு. வள்ளி தெய்வானை இவர்களின் கண்ணில் மை இட்டால் மைதான் இனிமை உறுகின்றது. அஃதின்றேனும் கண் அழகாக இருக்கும். கண்ணுக் கினிமையாவது பார்ப்பவர் உள்ளத்தில் அழகனுபவமாகிய குதூகலத்தை உண்டாக்குதல்.

தெய்வானை என்பது தெய்வயானையின் விகாரம்.

## 13. இவர்க்கிது துரும்பெனல்

தாராள மாகக் கொடுக்குந் தியாகிக
டமக்குநற் பொரு டுரும்பு
தன் னுயிரை யெண்ணுத சூர னுக் கெதிராளி
தளமெலா மொரு துரும்பு
பேரான பெரியருக் கற்பரது கையினிற்
பிரயோச னந் துரும்பு
பெரிதான மோக்ஷசிந் தனையுள் ளவர்க்கெலாம்
பெண்போக மொரு துரும்பு
தீராத சகலமும் வெறுத்ததுற விக்குவிறல்
சேர்வேந்த னொரு துரும்பு [ஞ்
செய்யகலை நாமகள் கடாக்ஷமுள் ளோர்க்கெலா
செந்தமிழ்க் கவி துரும்பாம்

**வாராரு மணிகொள்தன வள்ளிதெய் வானையை**
**மணம்புணரும் வடி வேலவா**
**மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு**
**மலைமேவு குமரேச னே.**

(இ - ள்) தாராளமாக கொடுக்கும் தியாகிகள் தமக்கு- இரப்போர்க்கு ஏராளமாகக் கேட்டது கொடுக்குந் தன்மை வாய்ந்த கொடையாளிகளுக்கு, நல் பொருள் துரும்பு - சிறந்த செல்வம் துரும்பாகும், தன்னுயிரை எண்ணுத சூரனுக்கு - தனது உயிரைத் துரும்பாக மதிக்கும் போர்வல்ல வீரனுக்கு, எதிராளி தளம் எல்லாம் ஒரு துரும்பு - பகைவனின் சைனியபல மெல்லாம் ஒரு துரும்புக்கு ஒப்பாகும், பேரான பெரியருக்கு அற்பரது கையினில் பிரயோசனம் துரும்பு - புகழ்பெற்ற பெரியோருக்குப் (பிறர் உதவியை எதிர்ப்பாராததால்) துச்சர்செய்யும் உபகாரம் துரும்புக்குச் சமானமாகும், பெரிதான மோக்ஷ சிந்தனை உள்ளவர்க்கு எல்லாம் - பெருமை வாய்ந்த முக்திப்பேற்றினில் தியானம் உடையவருக்கெல்லாம், பெண்போகம் ஒரு துரும்பு - மாதர்களால் வரும் இன்பம் துச்சமாகும், தீராத சகலமும் வெறுத்த துறவிக்கு - நீக்க முடியாத எல்லாப் பந்தங்களையும் வெறுத்து நீக்கிய முனிவனுக்கு, விறல் சேர்ந்த வேந்தன் துரும்பு - வெற்றி பொருந்திய அரசன் துரும்பாவான், செய்ய கலை நாமகள் கடாக்ஷம் உள்ளோர்க்கெல்லாம் - செம்மையான கலைகளை உடைய சரஸ்வதியின் கடைக்கண் பார்வையாகிய அருள் கிடைக்கப் பெற்றவருக்கெல்லாம்,

செந்தமிழ் கவி துரும்பு - செந்தமிழ்ச் செய்யுட்கள் (பாடுவது) துரும்பு (போன்று அவ்வளவு சுலபம்) ஆகும், வார் ஆரும் மணி கொள் முலை வள்ளி தெய்வானையை - கச்சு பொருந்தியதும் முத்துமாலை பொருந்தியதும் ஆன ஸ்தனங்களையுடைய வள்ளிநாயகியாரையும் தெய்வயானை அம்மையாரையும், மணம்புணரும் வடிவேலா - சேரும் கூரிய வேற்படையை யுடையவனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) தன்னுயிரை எண்ணாத சூரனுக்கு எதிராளி தளமெலாம் ஒரு துரும்பு:—திரியோதனன், கர்ணன், துரோணர் முதலிய பலாட்டியர்களும் மஹாசைனியமும் சூழ்ந்து கொண்டபோதும் இளங்காளையாகிய வீர அபிமன்யு தன்னந்தனியாய்ப் பகைவர் எண்ணிக்கையையும் அவர் போர்த்திறத்தையும் துரும்பென நினைந்து போர்புரிந்த தன்மையைச் சிந்தித்து நோக்குக.

போன பெரியருக்கு அற்பரது கையினில் பிரயோசனம் துரும்பு, இதனைப் பின்பருமவற்றுடன் ஒப்பிட்டு நோக்குக.

இராமபிரானின் கடாக்ஷம் பெற்ற பெரியவனாகிய அங்கதன் இராவணனிடம் தூது சென்றபோது அவன் "உன்னரசுனக்குத் தந்தேன் அளுதி ஊழிக் காலம்," (குரங்குகள் இராச்சியத்தை உனக்குத் தந்தேன் பலயுகங்களாக ஆண்டு வருவாயாக) என்ற பெரிய உபகாரம் செய்ய வந்தான். ஆனால் கைலைமலை எடுத்த இராவணன் அங்கதன்முன் அற்பனாகக் காணப்பட்டான். இது கேட்ட அங்கதன்,

"வாய்தாரத் தக்க சொல்லி என்னையுன் வசஞ்செய் வாயேல்
ஆய்தாரத் தக்க தன்றோ தூதுவந் தரச தாள்கை
நீதரக் கொள்வேன் யானே இதற்கினி நிகர்வே றெண்ணின்
நாய்தரக் கொள்ளுஞ் சீயம் நல்லர சென்று நக்கான்"

—(கம்பர்.)

உன் வாயில் வந்தபடி சொல்லி என்னை உன் வசமாக்கி விடுவாயாகில், அச்செயல் ஆராயத் தக்கதே. தூதாக வந்த யான் அரசாளும் பாக்கியம் பெறுவதும் நன்று; ஆராயத் தகுந்ததே. அற்பனாகிய நீ அரசாட்சி கொடுக்க நானோ வாங்குபவன்? இதற்குச் சமானம் எண்ணிப் பார்த்தால் இதற்குத்தான் ஒப்பாகும். நாய் நல்ல அரசாட்சி கொடுக்கச் சிங்கம் வாங்கிக் கொள்ளும்; எங்கேயாவது இது நேருமா? என்று நகைத்தான்.

தீராத சகலமும் வெறுத்த துறவிக்கு விறல் சேர்ந்த வேந்தன் துரும்பு, "துறவிக்கு வேந்தன் துரும்பு" என்ற பழமொழியையே விரித்துக் கூறினர். மணிகொள் முலை - இரத்தின மாலைகள் பொருந்திய, அல்லது 'அணி' எனப் பிரித்து அழகை உட்கொண்ட என்று கொள்ளினும் அமையும்.

## 14. இதனைவிளக்குவது இதுவெனல்

பகல்விளக் குவதிரவி நிசிவிளக் குவதுமதி
பார்விளக் குவது மேகம்

4

பதிவிளக் குவதுபெண் குடிவிளக் குவதரசு
பரிவிளக் குவது வேகம்
இகல்விளக் குவதுவலி நிறைவிளக் குவதுநல
மிசைவிளக் குவது சுதியூ
ரிடம்விளக் குவதுகுடி யுடல்விளக் குவதுண்டி
யினியசொல் விளக்குவ தருள்
புகல்விளக் குவதுகொடை தவம்விளக் குவதறிவு
பூவிளக் குவது வாசம் [நகை
பொருள்விளக் குவதுதிரு முகம்விளக் குவது
புத்தியை விளக்குவது நூல்
மகம்விளக் குவதுமறை சொல்விளக் குவதுநிசம்
வாவியை விளக்குவது நீர்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) பகல் விளக்குவது இரவி - பகல் நேரத்தை விளக்குவது சூரியனாகும், நிசி விளக்குவது மதி - இரவு நேரத்தை விளக்குவது சந்திரனாகும், பார் விளக்குவது மேகம் - பயிர்வளத்தால் பூமியை விளக்குவது மழை பொழியும் மேகமாகும், பதி விளக்குவது பெண் - கொண்ட புருஷனை விளக்குவது மனைவியாகிய பெண், குடி விளக்குவது அரசு - குற்றங் கடிந்து செல்வம் பெருக்கிக் குடியை விளக்குவது நல்லரசனாகும், பரி விளக்குவது வேகம் - குதிரைக்குச் சிறப்பளித்து விளக்குவது ஓடுதலில் வேகமாகும்,

இகல் விளக்குவது வலி - பகையை விளக்குவது பராக்கிரம மாகும், நிறை விளக்குவது நலம் - நிறையை விளக்குவது நன்மையாகும், இசை விளக்குவது சுதி - சங்கீதத்தை விளக் குவது சுதிலயமாகும், ஊரிடம் விளக்குவது குடி - ஊரிடத்தை விளக்குவது குடிகளாகும், உடல் விளக்குவது உண்டி - உடலைப் புஷ்டி தந்து விளக்குவது நல்ல உண வாகும், இனிய சொல் விளக்குவது அருள் - இனிய சொல்லை விளக்குவது கிருபையாகும், புகல் விளக்குவது கொடை - அபயப்பிரதானத் தத்துவத்தை விளக்குவது (இனிய உயிர் கேட்பினும் தரும் ஒப்பற்ற) ஈகையாகும், தவம் விளக்குவது அறிவு - தவத்தை விளக்குவது ஞான மாகும், பூ விளக்குவது வாசம் - பூவை விளக்குவது வாசனையாகும், பொருள் விளக்குவது திரு - ஐஸ்வரியத்தை விளக்குவது இலக்குமியாகும், முகம் விளக்குவது நகை - முகத்தை மலர்விப்பது சிரிப்பாகும், புத்தியை விளக்குவது நூல் - அறிவை விளக்குவது சாஸ்திரமாகும், மகம் விளக்கு வது மறை - யாகத்தை விளக்குவது வேத மந்திரமாகும், சொல் விளக்குவது நிசம் - சொல்லை விளக்குவது சத்திய மாகும், வாவியை விளக்குவது நீர் - குளத்தை விளக்குவது நீராகும், மயிலேறி—, எ - று.

(வி - ரை) பதி - வீடு என்று கொள்ளினும் அமை யும். நிறை விளக்குவது நலம் - பொருள் நிறைந்திருப் பினும் அது நன்மை நிரம்பி யிருத்தல் வேண்டும்; உதா ரணமாக வைக்கோல்நிறைவைக் காட்டினும் தீபஞ் சிறிய

தாயினும் இருளை ஒட்டும் ஒளி நிறைவுடைமையால் அதுவே சிறப்பாகும். இனிய சொல் விளக்குவது அருள் - இனிய சொல் சொல்லுபவரிடத்து அருள் இருந்தால்தான் நன்மை யாகும்; உள்ளே அருள் இல்லாது வாயில் மட்டும் இனிய சொல் வருவது வஞ்சகமாகும்.

## 15. பிறப்பிட நன்மையால் நன்மை பெருமை

சிங்கார வனமதி லுதிப்பினுங் காகமது
        தீஞ்சொல்புகல் குயிலாகு மோ
  திரையெறியும் வாவியிற் பூத்தாலு மேகொட்டி
        செங்கஞ்ச மலராகு மோ
அங்கான கத்திற் பிறந்தாலு முயலான
        தானையின் கன்றாகு மோ
  வாண்மையா கியநல்ல குடியிற் பிறந்தாலு
        மசடர்பெரி யோராவ ரோ
சங்காடு பாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
        சாலக்கி ராம மாமோ
  தடமேவு கடனீரி லேயுப்பு விளையினுஞ்
        சாரசர்க் கரையாகு மோ
மங்காத செந்தமிழ்க் குறுமுனிக் குபதேசம்
        வைத்தமெய்ஞ் ஞான குருவே
  மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
        மலைமேவு குமரேச னே.

(இ - ள்) சிங்காரம் வனம் அதில் உதிப்பினும் - அலங்கார அழகுடைய காட்டில் பிறந்தாலும், காகமது தீஞ்சொல் புகல் குயில் ஆகுமோ - காகமானது இனிய பாட்டுப் பாடும் குயிலுக்கு ஒப்பாகுமோ (ஆகாது), திரை எறியும் வாவியில் பூத்தாலும் கொட்டி - கொட்டிப் பூவானது அலை வீசும் தடாகத்தில் மலர்ந்தாலும், செங்கஞ்சமலர் ஆகுமோ - சிவந்த தாமரை மலருக்குச் சமானமாகுமோ (ஆகாது), அம் கானகத்தில் பிறந்தாலும் முயல் ஆனது ஆனையின் கன்றுகுமோ - அழகிய காட்டில் உதித்தாலும் முயலானது யானைக்குட்டி ஆகுமா (ஆகாது), ஆண்மை ஆகிய நல்ல குடியில் பிறந்தாலும் - வீரம் பொருந்திய புகழ் மிகுந்த குடும்பத்தில் பிறந்தாலும், அசடர் பெரியோர் ஆவரோ - கீழ்மக்கள் பெரியோரை ஒப்பாவாரோ (ஆகார்), சங்கு ஆடு பாற்கடல் பிறந்தாலும் - சங்குகள் திரிந்து விளையாடும் பாற்கடலில் பிறந்தாலும், நத்தை சாலக்கிராமம் ஆமோ - நத்தை பூசைக்குரிய சாளக்கிராமத்தின் பெருமை உடையதாமோ (ஆகாது), தடம் மேவு கடல் நீரில் உப்பு விளையினும் - விசாலம் பொருந்திய சமுத்திர ஜலத்தில் உப்பு விளைந்தாலும், சாரம் சர்க்கரை ஆகுமோ - இனிமை பொருந்திய சர்க்கரையாகுமோ (ஆகாது), மங்காத செந்தமிழ் குறுமுனிக்கு உபதேசம் வைத்த மெய்ஞ்ஞான குருவே - அழிதல் இல்லாத செந்தமிழ் முழுவதையும் அகத்திய மாமுனிவருக்கு உபதேசம் செய்த உண்மையான ஞான சொரூபியாகிய சற்குரு மூர்த்தியே !, மயிலேறி—, எ - று.

## 16. பலர்க்கும் பயன்படுவன

கொண்டல்பொழி மாரியு முதாரசற் குணமுடைய
 கோவுமூ ருணியி னீருங்
கூட்டமிடு மம்பலத் துறுதருவி னீழலுங்
 குடியாளர் விவசாய மும்
கண்டவர்க ளெல்லாம் வரும்பெருஞ் சந்தியிற்
 கனிபல பழுத்த மரமுங்
கருணையுட னேவைத் திடுந்தணீர்ப் பந்தலுங்
 காவேரி போ லூற்ற மும்
விண்டலத் துறைசந்தி ராதித்த கிரணமும்
 வீசுமா ருத சீதமும்
விவேகியெனு நல்லோ னிடத்திலுறு செல்வமு
 வெகுசனர்க் குபகார மாம் [ம்
வண்டிமிர் கடப்பமலர் மாலையணி செங்களப
 மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேச னே.

(இ-ள்) கொண்டல் பொழி மாரியும் - மேகம் பெய்யும் மழையும், உதாரம் நல் குணம் உடைய கோவும் - கேட்டதை இல்லை என்னாது கொடுக்கும் நல்ல குணத்தை யுடைய அரசனும், ஊருணியின் நீரும் - ஊரார் ஜலம் மொள்ளுதற்குரிய தடாகத்தின் தண்ணீரும், குடியாளர்

விவசாயமும் - வேளாளரின் பயிர்த்தொழிலும், கண்டவர்கள் எல்லாம் வரும் பெருஞ் சந்தியில் - தொழில் புரிந்து விட்டு ஒய்வெடுத்துக்கொள்ள வருபவர்கள் வந்து அமரும் பெரிய நாலுதெரு கூடும் இடத்தில், கனி பல பழுத்த மரமும் - உண்ணத் தகுந்த பழம் மிகுதியாகப் பழுத்த மரமும், கருணையுடன் வைத்திடும் தண்ணீர்ப் பந்தலும் - பிரயாணிகளின்மீது இரக்கங் கொண்டு அவர்களது தாகம் சாந்தி செய்ய வைக்கும் தண்ணீர்ப்பந்தலும், காவேரி போல் ஊற்றமும் - வழியில் காவேரிநதி போல் இடைவிடாது தண்ணீர் சுரக்கும் ஊற்றிடங்களும், விண் தலத்து உறை சந்திர ஆதித்த கிரணமும் - ஆகாய இடத்தில் சஞ்சாரம் செய்யும் சந்திர சூரியர்களின் நிலவும் வெய்யிலும், வீசு மாருத சீதமும் - வீசுகின்ற காற்றில் உள்ள குளிர்ச்சியும், விவேகி எனும் நல்லோன் இடத்தில் உறு செல்வமும் - அறிவுடைய நல்லவன் இடத்தில் வாய்க்கும் ஐஸ்வரியமும், வெகு சனர்க்கு உபகாரம் ஆகும் - பல மக்களுக்கு உதவியா யிருக்கும், வண்டு இமிர் கடப்ப மலர் மாலை அணி - வண்டுகள் மொய்த்துப் பாடுகின்ற கடம்பப் பூவினால் ஆன மாலையை அணிந்திருக்கும், செங்களப மார்பனே - சிவந்த சந்தனம் பூசப்பெற்ற மார்பை உடையவனே !, வடிவேலவா—, மயிலேறி—, எ - று.

(வி - ரை) ஊருணியின் நீர்; பெருஞ் சந்தியில் கனி பல பழுத்த மரம்; விவேகி எனும் நல்லோனிடத்தில் உறு செல்வம் என்ற இவற்றை,

" ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. " —(குறள்)

" பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வ
நயனுடை யான்கட் படின். " ,,

என்பவற்றோடு ஒப்பிட்டு நோக்குக.

இவன் இன்னான் இவன் இன்னாதான் என்ற வித்தியாசம் இல்லாது பிரதிபிரயோசனம் எண்ணாது மேகம் எல்லார்க்கும் மழை பொழியும். இதனை இக் குறளில் காண்க.

" கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்(டு)
என்னாற்றுங் கொல்லோ உலகு. " —(குறள்)

உயிர்கள் தமக்குத் தண்ணீர் உதவுகின்ற மேகங்களுக்கு என்ன பிரதி யுபகாரத்தைச் செய்து வருகின்றன? ஒன்றுமில்லை; ஆதலால் மேகங்கள் போன்ற பெரியோர் செய்யும் உதவியும் பிரதி உபகாரத்தை விரும்புவதன்று.

ஆதலின் பிரதிபிரயோசனம் கருதாமல் இவன் நல்லவன் இவன் கெட்டவன் என்ற பேதம் பாராட்டாமல் அனைவர்க்கும் நன்மை புரிய வேண்டும் என்பது இச் செய்யுளின் கருத்தாகும்.

## 17. தாம் அழியினுங் குணம் அழியாதவை

தங்கமா னதுதழலி னின்றுருகி மறுகினுந்
தன்னொளி மழுங்கி டாது

சந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமோ
தன்மணங் குன்றி டாது
பொங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமோ
பொலிவெண்மை குறை வுறு து
போதவே காய்ந்துநன் பால்குறுகி னாலும்
பொருந்துசுவை போய் விடா து
துங்கமணி சாணையிற் றேய்ந்துவிட் டாலுந்
துலங்குகுண மொழியாது பின்
றுன்மைதரு பெரியோர் மடிந்தாலும் மவர்கள
தூயநிறை தவறுகு மோ [து
மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
மருவுதிண் புயவாச னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) தங்கமானது தழலில் நின்று உருகி மறுகினும் - உயர்ந்த பொன் நெருப்பில் உருகியோடினாலும், தன் ஒளி மழுங்கிடாது - தனது ஒளி குறையப்பெறாது, சந்தனக்குறடு தான் மெலிந்து தேய்ந்தாலும் - சந்தனக்கட்டை தான் தேய்ந்து உருவங் குறைந்து போனாலும், தன் மணம் குன்றிடாது - தனது வாசனையில் குறைவு படாது, பொங்கம் மிகு சங்கு செம் தழலில் வெந்தாலும் - மிகவும் உயர்ந்த வகையான சங்கு சிவந்த நெருப்பில் வெந்துகொண் டிருந்தாலும், பொலி வெண்மை குறைவுறாது - தனது இயற்கை

ஒளி பொருந்திய வெண்மை நிறம் கொஞ்சமும் மங்காது, போதவே காய்ந்து நல் பால் குறுகினும் - மிகவுங் காய்ந்து நல்ல பால் அளவில் குறைந்து போன லும், பொருந்து சுவை போய்விடாது - அதனிடத்தில் பொருந்தியுள்ள இனிப்பு நீங்கிவிடாது, துங்கமணி சாணையில் தேய்ந்து விட்டாலும் - தூய்மையான மணி சாணைக்கல்லில் உராயப்பெற்று அளவில் குறைந்து விட்டா லும், துலங்கு குணம் ஒழியாது - இயற்கைப் பிரகாசமானது நீங்காது, பின் தொன்மை தரு பெரியோர் மடிந்தாலும் - பிறகு பழமையான பெரியோர் சாவதா யிருப்பினும், அவர்களது தூய நிறை தவறுகுமோ - அவர்களுடைய பரிசுத்தமான நிறைமனது பிசகுமோ (ஆகாது), மங்கள கல்யாணி குறமங்கை சுர குஞ்சரியை - சுபமயமான கலியாண குணம் நிறைந்தவர்களாகிய, குறவர் குல மங்கை வள்ளியையும் தெய்வயானையையும், மருவு திண் புய வாசனே - தழுவுகின்ற வலிய தோள்களையும் வாசனையையும் உடையவனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) மங்களம் - சுபம்; கலியாணம் - நன்மை.

## 18. நரகில் வீழ்வோர்

மன்னரைச் சமரில்விட் டோடினவர் குருமொழி
　　மறந்தவர் கொலைப் பாதகர்
மாதா பிதாவைநிந் தித்தவர்கள் பரதார
　　மருவித் திரிந்த பேர்கள்

அன்னங் கொடுத்தபே ருக்கழிவை யெண்ணினோ
ரரசடக் கிய வமைச்ச
ராலய மிகழ்ந்தவர்கள் விசுவாச காதக
ருந்தவர் தமைப்பழித் தோர்
முன்னுதவி யாய்ச்செய்த நன்றியை மறந்தவர்
முகஸ்துதி வழக் குரைப்போர்
முற்றுசிவ பத்தரை நடுங்கச் சினந்தவர்கண்
முழுதும்பொ யுரைசொல்லு வோர்
மன்னொருவர் வைத்தபொரு ளபகரித்தோ ரிவர்க
மா நரகில் வீழ்வ ரன்றோ [ண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) மன்னவரைச் சமரில் விட்டோடினவர் - யுத்தகளத்தில் தமது அரசனைத் தனியாக விட்டுவிட்டு உயிர் பிழைப்பதற்காக ஓடிய போர்வீரர்களும், குருமொழி மறந்தவர் - குரு செய்த உபதேச வார்த்தைகளை மறந்தவர்களும், கொலைப்பாதகர் - கொலையாகிய பாதகத் தொழிலையே யுடையவரும், மாதா பிதாவை நிந்தித்தவர்கள் - தாய் தந்தையரைப் பழித்தவர்களும், பரதாரம் மருவித் திரிந்த பேர்கள் - பிறர் மனைவியரைப் புணர்ந்து திரிந்தவர்களும், அன்னங் கொடுத்த பேருக்கு அழிவை எண்ணினோர் - பசியால் வருந்தியபோது தனக்குச் சோறிட்டவர்களுக்கு அழிவுதேட நினைத்தவர்களும், அரசு அடக்கிய அமைச்சர்-

குடிகளுக்கு நலம் செய்வதினின்றும் அரசனை தம் வசம் ஆக்கிய மந்திரிகளும், ஆலயம் இகழ்ந்தவர்கள் - தேவாலயங்களை இழிவு செய்தவர்களும், விசுவாச காதகர் - நம்பிக்கைத் துரோகஞ் செய்தவர்களும், அருந்தவர் தம்மைப் பழித்தோர் - அரிய தவஞ்செய்யும் முனிவர்களைப் பழி கூறியவர்களும், முன் உதவியாய்ச் செய்த நன்றியை மறந்தவர் - எதிர்பாராத முன்னே ஒருவன் தக்க காலத்து உபகாரம் செய்யவந்து தனக்கு உதவி செய்ததை மறந்தவர்களும், முகஸ்துதி உரைப்போர் - யார் முகத்தும் வீண் புகழ்ச்சி செய்பவர்களும், வழக்கு உரைப்போர் - பொய்யான வழக்கு சொல்லுபவர்களும், முற்று சிவபத்தரை நடுங்கச் சினந்தவர்கள் - மிகவும் வளர்ந்துள்ள சிவபக்தியுடையாரை நடுங்குமாறு கோபித்தவர்களும், முழுதும் பொய் உரை சொல்லுவோர் - ஒரு சிறிதும் சத்தியம் இல்லாது முழுவதும்பொய்யே பேசுபவர்களும், ஒருவர் வைத்த மன் பொருள் அபகரித்தோர் - ஒருவன் சேமித்துப் பத்திரமாக வைத்திரு என்று தம்மிடம் வைத்த மிகுதியான பொருளைக் கவர்ந்தவர்களும், ( ஆகிய ) இவர்கள் - இவர்களெல்லாம் மா நரகில் வீழ்வர் அன்றோ - பெரிய நரகத்தில் வீழ்வார்கள் அல்லவா ? ( ஆம் ), மயிலேறி—, எ - று.

( வி - ரை ) 'முன்னுதவி...........நன்றியை மறந்தவர்' இதனை,

"காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது." —( குறள் )

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் மாற்ற லரிது." —(குறள்)

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு." ,,

இவற்றோடு ஒப்பிட்டு நோக்குக. முகஸ்துதி வழக்குறைப்போர் என்பதற்குப் பக்ஷபாதமாகக் (கண்ணோட்டம், தாக்ஷண்யம்) உடையவர் பக்கமாக வழக்குச் சொல்லுதல் என்றும் உரைப்பர்.

## 19. சரீர சுகம்

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறுவி ரோசனந் தான்
வருஷத் திரண்டுவிசை தைலந் தலைக்கிடுதல்
வாரத் திரண்டு விசையாம்
மூதறிவி னெடுதன து வயதினுக் கிளையவொரு
மொய்குழ லுடன்சை யோகம்
முற்றுதயிர் காய்ச்சுபா னீர்மோ ருருக்குநெய்
முதிரா வழுக்கை யிளநீர்
சாதத்தி லெவ்வளவா னாலும் புசித்தபின்
ருகந் தனக்கு வாங்கல்
தயையாக வுண்டபி னுலாவலிவை மேலவர்
சரீரசுக மாமென்பர் காண்

மாதவகு மாரிசா ரங்கத் துதித்தகுற
வள்ளிக் குகந்த சரசா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) மாதத்து இரண்டு விசை மாதரைப் புல்குவது - ஓர் மாதத்திற்கு இருமுறையே தத்தம் மனைவியரோடு கூடுதலும், வருஷத்து இரண்டுவிசை - வருடத்திற்கு இரண்டு முறைகளில், மறு அறு விரோசனம் - குடலில் உள்ள அழுக்குமலம் நீங்குவதற்காகப் பேதிமருந்து எடுத்துக்கொள்ளுதலும், வாரத்து இரண்டுவிசை தலைக்குத் தைலம் இடுதல்-வாரத்தில் இரண்டு முறைகளில் எண்ணெய் தேய்த்துக் குளித்தலும், மூது அறிவினோடு தனது வயதினுக்கு இளைய ஒரு மொய்குழலுடன் சையோகம் - நிறைந்த அறிவுடையவளும் தனது வயசுக்குக் குறைந்த வயதுடைய இளையவளும் ஆகிய மொய்த்த கூந்தல் உடையவளாம் ஏக பத்தினியுடன் (மணந்து) புணர்வதும், முற்று தயிர் - முதிர்ந்த தயிரும், காய்ச்சு பால் - நீர் வற்றும்படி காய்ச்சின பாலும், நீர்மோர் - நீர் விட்டு விளாவின மோரும், உருக்கு நெய் - சாப்பிடும்போது உருக்கிய நெய்யும், முதிரா(த) வழுக்கை இளநீர் - முதிராத நிலையிலுள்ள வழுக்கையுடைய இளநீரையும், இவற்றுடனே சாதத்தில் எவ்வளவாயினும் புசித்தபின் - தனது வயிறு நிறையும் வண்ணம் சோறு எவ்வளவாயினும் உண்டபிறகு, தாகந் தனக்கு வாங்கல் - தாகந் தீர்வதற்குத் தண்ணீர் குடித்தலும், தயையாக உண்ட

பின் உலாவல் - கருத்துடனும் அன்புடனும் போஜனம் ஆன பிறகு சற்றே உலாவுதலும், (என்ற) இவை (எல்லாம்)—, மேலவர்கள் சரீரசுகம் என்பர் - உடலுக்கு ஆரோக்கியம் என்று பெரியோர் சொல்லுவர், மாதவகுமாரி - சிவமுனியின் புத்திரியும், சாரங்கத்துதித்த - மானுக்கு உதித்தவளும், குறவள்ளிக்கு - குறவர் குலத்து வளர்ந்தவளும் ஆகிய வள்ளி நாயகியாருக்கு, உகந்த சரசா - மகிழ்ச்சிக்கு-உரியவனாகிய இனிய குணம் படைத்தவனே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) 'மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது' என்று கூறிவிட்டு ஏன் மீண்டும் 'மொய்குழலுடன் சையோகம்' என்றார் என வினவினல்:—முதலில் சொன்னது புணர்வதற்குரிய முறைகள். பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை புணர்வதுதான் தேகாரோக்கியம்; இல்லையேல் விந்துடைந்து பலஹீனனாகி ஒருவன் நோய்வாய்ப்படுவான்.

மாதர் - தத்தமக்குரிய மாதர். ஒருவனுக்கு ஒருத்திதான் என்பதை 'ஒரு மொய்குழல்' என்றதால் அறிக. இரண்டாவது எத்தகைய மாதொடு புணர்தல் என்பதைக் குறிப்பிடுகின்றார். தனக்குரிய மனைவி ஒருவளிடந்தான் புணர்தல் நீதி. முதிர்ந்த அறிவும் வயதில் தன்னினும் இளமையும் உடையவளையே மணஞ்செய்தல் நலம். மொய்குழல் - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர்; அது மொய்த்த கூந்தலை உடைய பெண் என விரியும். ஒரு பெண் என்றதால் ஏகபத்தினி

அல்லது ஒப்பற்ற மனைவி என்றுங் கொள்க. அத்தகைய ஒப்பற்ற ஏக பத்தினியுடன் புணர்ந்து வாழ்ந்தால் இல்லறமே பேரின்பமாகும். இதனை,

“கருத்தொரு தன்மைய துயிரும் ஒன்றுதம்
அருத்தியும் அத்துணை ஆய நீரினர்
ஒருவனும் ஒருத்தியும் உடலும் ஒன்றெனப்
பொருத்தினர் இவரெனப் புல்லி னாரரோ.” —(கம்பர்)

அறிவு எண்ணம் ஒன்றாகவும் உயிர் ஒன்றாகவும் தம்மிடை உள்ள அன்பும் ஒன்றாகவும் உடைய ஒருவனும் ஒருத்தியும் தம் மிருவர்க்கும் உடலும் ஒன்றுதான் என்று காட்டுபவர்போலக் கூடினர்,” என்றதால் புணர்வதாயின் மேற்கண்ட குணங்களுடைய ஒருவனும் ஒருத்தியுந்தான் புணர்தல் வேண்டும், அது தான் இல்லறம் பேரின்பமாகும் வழி.

எவ்வளவாயினும் - என்பது பெருந்திண்டி அன்று, போதிய அளவிற்கு எவ்வளவாயினும் என்க. தயையாக உண்ணல் - சாப்பாட்டின்மீது அன்பு இருத்தல் வேண்டும். துக்கம் வெறுப்பு இவற்றுடன் புசித்தல் சுகவீனமாகும். சாப்பிடும்போது சாப்பாட்டின்மீதே கருத்திருக்கவேண்டும். வேறு விஷயங்கள்மீது மனம் செலுத்தினல் அன்னம் குடற்குழாய் வழி செல்லுவது விடுத்துச் சுவாசக் குழாய்க்குள் செல்ல முயலும், அப்போது ‘புரைக்கேறுதல்’ விக்கல் முதலியன தோன்றி ஆபத்திற்கிடமாக்கும். மேலும் சாப்பிடும்போது கண்ணும் மனமும் சாப்பாட்டில்

செலுத்தினால்தான் தக்கது ஏற்றுத் தகாதது தள்ள முடியும். உண்டபின் உலாவல் என்பது இரவுப் போசனம் உண்டபின்தான். காலையுணவு தீர்ந்ததும் தொழில் புரியச் செல்கின்றோம் உலாவல் அனாவசியம்; பகற் போசனம் கழிந்தபின் உட்கார்ந்து ஒய்வெடுத்தலே நலம்.

பகலுண்டி கழிந்தபின் சற்றே பரிந்தமர்
சுகமாக இராவுண்டி சுவைத்தபின் உலாப்போ

என்பது ஆங்கிலப் பழமொழி மொழிபெயர்ப்பு.

## வள்ளி சிவமுனி குமாரியாதல் மான் வயிற்றுதித்தல் முதலியவற்றின் வரலாறு.

அமுதவல்லி சுந்தரி என்ற திருமாலின் குமாரிகள் குமரனை மணக்கக் கடுந்தவஞ் செய்தனர். கந்தன் தோன்றி "இந்திரன் மகளானால் மணப்போம்" என்று அமுதவல்லிக்கு அருள் செய்து சுந்தரிக்குச் "சிவமுனியின் குமாரி ஆனால் மணப்போம்" என்று பணித்தான். சுந்தரி வள்ளி மலைச்சாரலில் தவஞ் செய்துகொண்டிருந்த சிவமுனியின் அனுக்கிரகத்தால் மான் வயிற்றில் உதித்துக் குறத்தியர் வள்ளிக்கிழங்கு கல்லி யெடுத்த குழியில் சிசுவாய்க்கிடந்தனள். அதனால் வள்ளி என்ற திருநாமம் பெற்றனள். அதைக் கண்டெடுத்து வேடர் தலைவன் நம்பி பரிவுடன் வளர்த்து வந்தான். அம்மையார் பருவ மடைந்து தினைப் புனங் காத்திருந்த சமயம் முருகக்கடவுள் பல திருவிளையாடல்கள் புரிந்து மணந்தனன் என்பது கந்தபுராண வரலாறு.

சாரங்கம் - மான், யானை. சாரங்கத்துதித்த என்றுகூறி யிருத்தலில் யானைக் குதித்த என்று கொண்டு தெய்வயானைக்கும் உகந்த சரசா என்ற பொருள் தொனிக்கின்றதை நோக்குக. 'குற' என்பதற்குப் பதிலாக 'மட' என்றிருந்தால் 'மாதவ குமாரி வள்ளிக்கும் சாரங்கத் துதித்த மட வள்ளி', யானையிடத்துதித்த மடப்பம் பொருந்திய வள்ளி சாதக்கொடி போன்ற இடையுள்ள தெய்வயானை என்ற பொருள் கொள்ளலாம்.

## 20. யார்க்கும் அனுபோகம் விடாமை

தேசுபெறு மேருப்ர தக்ஷிணஞ் செய்துமதி
தேகவடு நீங்கவில்லை
திருமா லுறங்கிடுஞ் சேடனுக் குவணன்
செறும்பகை யொழிந்த தில்லை
ஈசன் கழுத்திலுறு பாம்பினுக் கிரைவே
றிலாமலே வாயு வாகு
மினியகண் ணாகிவரு பரிதியா னவனுக்கி
ராகுவோ கனவி ரோதி
ஆசிலாப் பெரியோ ரிடத்தினி லடுக்கினு
மமைத்தபடி யன்றி வருமோ
அவரவர்க ளனுபோக மனுபவித் திடல்வேண்
மல்லால் வெறுப்ப தெவரை [டு

வாசவனு மும்பரனே வரும்விசய சயவென்று
வந்துதொழு தேத்து சரண
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) தேசுபெறு மேரு பிரதக்ஷிணம் செய்தும் - ஒளி பொருந்திய மேருமலையை வலமாகச் சுற்றிவந்தாலும், மதி தேக வடு நீங்கவில்லை - சந்திரனது முயற்கறைக்களங்கம் நீங்கியபாடில்லை, திருமால் உறங்கிடும் சேடனுக்கு - மஹா விஷ்ணு பாற்கடலின்கண்ணே படுத்து உறங்கிடும் பாம்பாகிய ஆதிசேடனுக்கு, உவணன் செறும்பகை ஒழிந்ததில்லை - கருடனது கொல்லும் விரோதம் அகன்றபாடில்லை, ஈசன் கழுத்தில் உறு பாம்பினுக்கு - பரமசிவன் கழுத்தில் ஆபரணமாகச் சுற்றி இருக்கும் பாம்புக்கு, வேறு இரை இல்லாமல் வாயுவாகும் - வேறுவகையான இரை இல்லாததால் காற்றையே உணவாகக் கொள்ளும், இனிய கண் ஆகி வரும் பரிதி ஆனவனுக்கு - சீவான்மாக்களுக்குக் கண் போன்று அரிய பொருளாக இருக்கும் சூரியனுக்கு, இராகுவோ கன விரோதி - கிரகண காலத்தில் விழுங்கும் இராகு வென்னும் பாம்புவோ பெரும் பகையாக இருக்கின்றது, ஆசு இல்லா பெரியோர் இடத்தினில் அடுக்கினும் அமைத்தபடி அன்றி வருமோ - குற்றமற்ற பெரியோரை (வினைப் பயன் வருங்காலத்தில் அதின் நின்றும் விடுபெற) அடுத்தாலும் நிர்ணயித்தபடியே அல்லாமல் வேறாக நேருமோ? (நேராது), அவர் அவர்கள் அனுபோகம் அனு

பவித்திடல் வேண்டும் அல்லால் - அவர் அவர்கள் செய்த வினைகளுக்குற்ற பயனை அனுபவித்திட வேண்டுமே அல்லாமல், வெறுப்பது எவரை - யாரை வெறுத்துக்கொள்வது (வெறுத்தாலும் வினைப்பயன் தீராது), வாசவனும் உம்பர் அனைவரும் - இந்திரனும் இதர தேவகணங்கள் எல்லாரும், விசயசயவென்று - விஜயா! ஜய! என்று கூறிக்கொண்டு, வந்து - அணுகி, தொழுது ஏத்தும் சரண - வணங்கிப் புகழும் திருவடிகளை யுடையவனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) தேவேந்திராதிகளை வருத்திய சூரபதுமனை வென்றதால் முருகனை அனைவரும் போற்றுகின்றனர்.

இதை,

"மன்ற அவுணர் வருத்திடஇந் நாள்வரையும்
பொன்றினவர் என்னப் புலம்பித் திரிந்தனமால்
இன்று பகைமாற்றி எமக்கருள்நீ செய்கையினால்
சென்றவுயிர் மீண்ட திறம்பெற் றனமையா ?"

என்ற கந்தபுராணம் தேவர்கள் போற்றும் படலத்தில் உள்ள ஆறும் செய்யுளால் அறிக.

## 21. இதுவின்றி இது சிறவாதெனல்

குருவிலா வித்தைகூ ரறிவிலா வாணிபங்
குணமிலா மனைவி யாசை
குடிநல மிலாநாடு நீதியில் லாவரசு
குஞ்சரமி லாத வெம்போர்

திருவிலா மெய்த்திறமை பொறையிலா மாதவந்
தியானமில் லாத நிஷ்டை
தீபமில் லாதமனை சோதரமி லாதவுடல்
சேகரமி லாத சென்னி
உருவிலா மெய்வளமை பசியிலா வுண்டிபுக
ழுண்மையில் லாத வசனம்
யோசனையி லாமந்த்ரி தைரியமி லாவீர
முதவியில் லாத நட்பு
மருவிலா வண்ணமலர் பெரியோ ரிலாதசபை
வையத் திருந்தென் பயன்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) குரு இல்லா(த) வித்தை - உபதேசிக்க நல்ல ஆசிரியன் இல்லாத கல்வியும், கூர் அறிவு இல்லா(த) வாணிபம் - நுண்ணிய அறிவு இல்லாத வர்த்தகமும், ஆசை குடி நலம் இல்லா(த) நாடு - அன்புள்ள குடிகளின் நலம் இல்லா(த) தேசமும், நீதி இல்லா(த) அரசு - செங்கோல் முறைமை இல்லாத அரசாட்சியும், குஞ்சரம் இல்லா(த) வெம்போர் - யானைப்படை இல்லாத கொடிய போரும், திரு இல்லா(த) மெய்த் திறமை - செல்வம் இல்லாத உடல் வலிமையும், பொறை இல்லா(த) மாதவம் - பொறுமை இல்லாத பெரிய தவமும், தியானம் இல்லாத நிஷ்டை - ஒருமனக்குவிவு ஆகிய தியானம் இல்லாத யோக

நிஷ்டையும், தீபம் இல்லாத மனை - விளக்கு இல்லாத வீடும், சோதரம் இல்லாத உடல் - உடன்பிறந்தவர் இல்லாதவனின் உடல், சேகரம் இல்லா (த) சென்னி - முடி இல்லாத சிரசும், உரு இல்லா (த) மெய்வளமை - அழகு இல்லாத உடலின் பருமையும், பசி இல்லா (த) உண்டி - பசி இல்லாதபோழ்து உண்ணும் உணவும், புகல் உண்மை இல்லாத வசனம் - பெரியோரால் சிறப்பித்துக் கூறப் படும் சத்தியம் இல்லாத பேச்சும், யோசனை இல்லா(த) மந்திரி - வரும் பொருள் உரைக்கும் தீவிர ஆலோசனை இல்லாத மந்திரியும், தைரியம் இல்லா(த) வீரம் - தைரியம் இல்லாத ஆண்மையும், உதவி இல்லாத நட்பு - யுக்த சமயத்தில் உபகாரம் செய்தல் இல்லாத சிநேக மும், மரு இல்லா(த) வண்ணம் மலர் - வாசனை இல்லாத அழகிய பூவும், பெரியோர் இல்லாத சபை - கல்வி அறிவு குணம் இவற்றில் வல்ல பெரியோர் கூடி இல்லாத சபையும், வையத்து இருந்து என் பயன் - பூவுலகத்தில் இருந்தும் என்ன பிரயோஜனம்? (ஒரு பிரயோஜனமும் இல்லை), மயிலேறி—, எ - று.

## 22. பகைக்கப்படாதவர் இவரெனல்

அரசர்பகை யுந்தவம் புரிதபோ தனர்பகையு
மரியகரு ணீகர் பகையு
மடுத்துக் கெடுப்போர் கொடும்பகையு முட்பகையு
மருளிலாக் கொலைஞர் பகையும்

விரகுமிகு மூரிலுள் ளோருடன் பகையுமிகு
விகடப்ர சங்கி பகையும்
வெகுசனப் பகையுமந் திரவாதி யின்பகையும்
விழைமருத் துவர்கள் பகையும்
உரமருவு கவிவாணர் பகையுமா சான்பகையு
முறவின்முறை யார்கள் பகையு
முற்றதிர வியமுளோர் பகையுமந் திரிபகையு
மொருசிறிது மாகாது காண்
வரநதியின் மதலையென வினியசர வணமிசையில்
வருதருண சிறு குழவியே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்.) அரசர் பகையும் - மன்னர்களின் பகையும், தவம்புரி தபோதனர் பகையும் - தவஞ்செய்கின்ற முனிவர்களின் பகையும், அரிய கருணீகர் பகையும் - சொல்லுதற்கரிய நுட்பம் பொருந்திய கணக்கர்களின் பகையையும், அடுத்துக் கெடுப்போர் கொடும் பகையும் - நட்பாளர் போன்று அடுத்துப் பின் சமயம் வரும்போது அழிவுதேட நினைப்பவரின் கொடிய பகையும், உட்பகையும் - தம்கூட்டத்திற்குள் இருந்து கொண்டே தெரியாத வகையில் வஞ்சனை புரிபவரின் பகையும், அருள் இல்லா(த) கொலைஞர் பகையும் - தய்ய சிறிதும் இல்லாத கொலைத்தொழில் புரிபவரின் பகையும், விரகு மிகும் ஊரில் உள்ளோருடன் பகை

யும் - (பகை நேர்ந்தால்) அழித்தல் மிகுந்த ஊர்ஜனங்களுடன் செய்து கொள்ளும் பகையும், மிகு விகடப்ரசங்கி பகையும் - சாமர்த்தியம் மிகுந்த விகடப்பிரசங்கியின் பகையும், வெகு ஜனப்பகையும் - பலபேரின் பகையும், மந்திரவாதியின் பகையும்—, விழை மருத்துவர்கள் பகையும் - பணத்தின் விருப்பம் உள்ள வைத்யர்களின் பகையும் - உரம் மருவு கவிவாணர் பகையும் - வலிமை பொருந்திய கவிஸ்வரர்களின் பகையும், ஆசான் பகையும் - எழுத்தறிவிப்பவன் பகையும், உறவின்முறையார்கள் பகையும் - சுற்றத்தார்கள் பகையும், உற்ற திரவியம் உள்ளார் பகையும்- மிகுந்த செல்வம் படைத்தவரின் பகையும், மந்திரி பகையும்- மந்திரியின் பகையும், ஒரு சிறிதும் ஆகாது - கொஞ்சமும் ஆகாது, வர நதியின் மதலே என - மேன்மையான கங்காநதியின் புத்திரன் என்று, இனிய சரவணமிசையில் வரு - குளிர்ச்சியால் இனிமை மிகுந்த சரவணப்பொய்கையில் உதித்த, தருண - இளமையுடையவஞ்கிய, சிறு குழவியே - சிறு பாலகனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) மிகுந்த பராக்கிரமம் படைத்தவன் ஆதலின் அரசன் பகை கூடாது. "அரசன் அன்று கொல்லும்" என்னும் பழமொழி நோக்குக தபோதனர் பகை, முனிவர் தவமிகுதியால் சாபம் இட்டு அழிப்பர்.

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது." —(குறள்)

மலைபோன்ற குணம் படைத்த முனிவர்களின் கோபத்தினின்றும் க்ஷணமாத்திரமும் காத்துக் கொள்ளுதல் அரிதாகும். அரிய கருணிகர் - அவரிடம் பகைத்துக் கொண்டால் கணக்கில் புரட்டு செய்து கெடுப்பர். அடுத்துக் கெடுப்போர் கொடும்பகை - ஒருவன் சிலகாலம் சிநேகஞ் செய்து பின்னர் அழிவு தேடினுல் அது மிக மனோவேதனை தரும்; அதனுல் 'கொடும்பகை' என்றார். உட்பகை - புறப்பகையினும் கொடியது; பரிகாரம் தேடிக்கொள்ள இடங்கொடாது உள்ளேயே தெரியாத வகையில் நிகழும் பகை மிக ஆபத்தானது.

"உடன் இருந்தே கொல்லும் வியாதி"

என்ற பழமொழி நோக்குக.

விரகுமிகு ஊரில் உள்ளோர் பகை-கோபம் வந்துவிடின் ஊர்மக்கள் அனைவரும் திரண்டு அழித்தலை வெகு சீக்கிரத்தில் புரிந்துவிடுவர்; நல்லது கெட்டது ஆராயமாட்டார் ஆதலின் ஊரார் பகையும் கேடானது. "ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்." விழை மருத்துவர்பகை, விரும்புதற்குரிய வைத்தியரின் பகை என்றுங் கொள்க. நோய் தீர்த்தற்குப் பதிலாக நஞ்சிட்டுங் கொல்லக்கூடும். கவிவாணர் - கவிபாடி வாழ்வோரின் அதிருப்தியைச் சம்பாதித்தால் அறம்பாடி அழிப்பர். ஆசான் பகை - 'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்,' ஆதலின் ஆசானின் பகை இம்மை மறுமைகளுக்கும் ஆகாது.

## 23. பேயெனப்படுவோர் இவரெனல்

கடனுதவு பேர்வந்து கேட்கும்வே ளையின்முகங்
கடுகடுக் கின்ற பேயும்
கனமருவு பெரியதனம் வந்தவுட னிறுமாந்து
கண்விழிக் காத பேயும்
அடைவுடன் சத்துருவின் பேச்சைவிசு வாசித்
தகப்பட் டுழன்ற பேயு
மாசைமனை யாளுக்கு நேசமா யுண்மைமொழி
யானதை யுரைத்த பேயும்
இடரிலா நல்லோர்கள் பெரியோர்களைச் சற்று
மெண்ணு துரைத்த பேயு
மினியபரி தானத்தி லாசைகொண் டொருவற்
கிடுக்கண்செய் திட்ட பேயும்
மடமனை யிருக்கப் பரத்தையைப் புணர்பேயும்
வசைபெற்ற பேய்க ளன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கடன் உதவு பேர் - அவசியமான சமயத்தில் கடன் கொடுத்து உதவியவர்கள், வந்து கேட்கும் வேளையில் - தன்னிடம் வந்து கொடுத்ததைக் கொடுவெனக் கேட்கும் சமயத்தில் சினந்து சுடச்சுடச் சொல்லும் பேயும், கனம் மருவு பெரிய தனம்-பெருமை பொருந்திய மிக்க செல்

வம், வந்தவுடன்—, இறுமாந்து கண் விழிக்காத பேயும்- செருக்குற்றுத் தன்னிடம் யாசித்து வந்த இரவலர்முன் கண் விழித்தும் பார்க்க மறுக்கும் பேயும், சத்துருவின் பேச்சை அடைவுடன் விசுவாசித்து - நம்பிக்கைக்குப் பாத்திரம் இல் லாத பகைவனின் பேச்சை நெறியுடைத்தென நம்பி, அகப் பட்டு உழல்கின்ற பேயும் - பகைவரிடத்துச் சிக்கி வருந்தி அலேகின்ற பேயும், ஆசை மனையாளுக்கு - தான் அன்பு செலுத்தும் மனைவியிடத்து, நேசமாய் - அவளிடத்தில் தான் கொண்ட நேசத்தால், உண்மை மொழியானதை உரைத்த பேயும் - (சொல்லத் தகாத இரகசியமான சில) யதார்த்த விஷயங்களைச் சொன்ன பேயும், இடர் இல்லா(த) நல்லோர்கள் பெரியோர்களை - காமம் குரோதம் முதலிய குற்றங்களால் வரும் துன்பம் தம்மிடம் சேரப்பெறாத நல்லவர்களாகிய பெரியவர்களை, சற்றும் எண்ணாது உரைத்த பேயும் - சிறிதும் ஆலோசியாது அவமதித்துப் பழி வார்த்தைகள் சொன்ன பேயும், இனிய பரிதானத்தில் ஆசை கொண்டு - (நினைத்த மாத்திரத்தில் நாவில் நீர் சொட்டுமாறு) 'இனியது' (என்று நினைத்து) இலஞ்சத் தின்மீது விருப்பங்கொண்டு, ஒருவற்கு இடுக்கண் செய் திட்ட பேயும் - ஒருவனுக்குத் துன்பம் உண்டாகக்கூடிய செயல்செய்த பேயும், மடம் மனை இருக்க பரத்தையைப் புணர் பேயும் - இளமை பொருந்திய மனைவி இருக்கும் போது வேற்றுமாதினைக் கூடுகின்ற பேயும், (எல்லாம்) வசைபெற்ற பேய்கள் அன்றோ - இகழ்ச்சி பெற்றவர் களாகிய பேய்கள் அல்லவா? (ஆம்), மயிலேறி—, எ - று.

(வி - ரை) ஆண்களின் மனம் போன்று இரகசிய மொழிகளை அகத்தே மறைத்துவைக்கும் அவ்வளவு வன்மையுடைய மனம் பெண்களிடம் எதிர்பார்க்க முடியாது. காமத்தால் பெண்களின் வசமாகிச் சொல்லத் தகாத இரகசியங்கள் கூறுதல் மிக ஆபத்தாகும்.

மடமனை இருக்கப் பரத்தையைப் புணர்பேய்,

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று." —(குறள்)

பணத்திற்காகத் தழுவ இசையும் வேசையர் செய்யும் பொய்யான புணர்ச்சி கூலிக்காகப் பிணந் தூக்குவோர் சென்று இருட்டறையில் இருக்கும் முன்பின் அறியாத பிணத்தைத் தழுவி எடுத்தற்குச் சமானமாகும். பிணத்தைத் தின்னத் தழுவுவது பேய். அதுபோலவே முன்பின் அறியாதவரை வேசையர் புணர்கின்றனர். எனவே வேசையர் செய்வது பேய்ப்புணர்ச்சி; அதனை நாடுவோர் பேய்கள் அன்றோ.

## 24. அவ்வவ் வினத்தில் உயர்ந்தவை

தாருவிற் சந்தான நதியினிற் கங்கைவிர
தத்தனிற் சோம வாரந்
தகைபெறு நிலத்தினிற் காஸ்மீரகண்டந்
தலத்திற் சிதம்பரத் தலம்

சீருலவு ரிஷிகளில் வசிட்டர்பசு விற்காம
　　தேனுமுனி வரிஞ ரதன்
　செல்வநவ மணிகளிற் றிகழ்பதும ராகமணி
　　தேமலரி லம்போ ருகம்
பேருலவு கற்பினி லருந்ததி கதித்திடு
　　பெலத்தின்மா ருதம் யானையிற்
　பேசிலை ராவதந் தமிழினி லகத்தியம்
　　பிரணவம் மந்திரத் தில்
வாரிதியி லேதிருப் பாற்கடல் குவட்டினின்
　　மகாமேரு வாகு மன்றோ
　மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
　　மலைமேவு குமரேச னே.

(இ-ள்) தாருவில் சந்தானம் - மரங்களில் சந்தன மரமும், நதியினில் கங்கை-ஆறுகளில் கங்காநதியும், விரதத்தினில் சோமவாரம் - விரதங்களில் திங்கட்கிழமையின் விரதமும், நிலத்தினில் தகை பெறு காஸ்மீர கண்டம்-நாடுகளில் பெருமை பெற்ற காஸ்மீர நாடும், தலத்தினில் சிதம்பரத் தலம் - க்ஷேத்திரங்களில் சிதம்பரமும், ரிஷிகளில் சீர் உலவு வசிட்டர் - ரிஷிகளில் பெருமை பொருந்திய வசிட்ட முனியும், பசுவில் காமதேனு - பசுக்களுள் காமதேனுவும், முனிவரில் நாரதன் - முனிவர்களில் நாரத முனிவனும், செல்வ நவ மணிகளில் திகழ் பதும ராக மணி - செல்வம் என்று மதிக்கப்படும் ஒன்பது இரத்தினங்களில் ஒளி

பொருந்திய பதுமராக இரத்தினமும், தே மலரில் அம் போருகம் - வாசனை பொருந்திய பூக்களில் தாமரைப் பூவும், கற்பினில் பேர் உலவு அருந்ததி - கற்புள்ள மாதர் களில் புகழ் பரவப் பெற்ற அருந்ததியும், பலத்தில் மாரு தம் - பலம் உள்ள பொருள்களில் மேன்மேலும் எழுகின்ற பலம் பொருந்திய காற்றும், யானையில் ஐராவதம் - யானை களில் இந்திரனுக்கு உரிய ஐராவதமும், தமிழினில் அகத் தியமும் - தமிழ் நூல்களில் அகத்திய நூலும், மந்திரத்தில் பிரணவம் - மந்திரங்களில் 'ஓம்' என்ற ஓரெழுத்துப் பிரணவ மந்திரமும், வாரிதியில் திருப்பாற்கடல் - கடல் களில் திருப்பாற்கடலும், குவட்டினில் மகாமேரு - மலை களில் மேரு மலையும், ஆகும் அன்றோ - சிறப்புடையதாகும் அல்லவா ? ( ஆம் ), மயிலேறி—, எ - று.

(வி - ரை) கங்கை :— திருமால் உலகளந்த போது சத்திய லோகத்திற்குச் சென்ற சீர்பாதத்தைப் பிரமன் கமண்டல தீர்த்தத்தால் கழுவி விளக்கினன். அதுவே ஆகாய கங்கையாகப் பெருகியது. பின்னர் பகீரதன் தவத்தால் பூமிக்கு இறங்கும்போது சங்கரன் சடையில் அமர்ந்தது ; மீண்டும் சடையினின்றும் பெருகி மன்னுயிர் நலம் பெறப் பெருகாநின்றது. "சதுமுகன் கையிற் சதுப் புயன் தாளில் சங்கரன் சடையினில் தங்கிக் கதிர்முக மணி கொண்டிழி புனற்கங்கை" என்று பெரியாழ்வாரும், "கங்கையென் றுலகேத்துங் கடவுள் மாநதி" என்று

அதிவீரராமபாண்டியரும் கூறி யிருத்தல் காண்க. தன்னில் மூழ்குவோரின் பாபங்களை நீக்கிப் பரிசுத்தமாக்குகின்றது.

காஷ்மிரம்:—இந்தியாவின் வடகோடியில் சிறிது மேற்குப் பக்கமாக இமய மலையிலும் சாரலிலும் உள்ளது. இயற்கை அழகில் ஒப்பற்றது.

சிதம்பரம் - பொன்னம்பலம், சித் - ஞானம், அம்பரம் ஆகாசம். சங்கரபிரான் ஞானநடனம் புரியும் தலமாகும். இது பிருதியு, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்தனுள் ஆகாய க்ஷேத்திரமாகும்.

வசிட்டன்:—சூரிய குலத்தரசர்க்குக் குருவும் மந்திரியும் ஆவான். பிரம்மனின் மானச புத்திரன். இந்திரியங்களை வென்றவன் என்று பொருள். கம்பர் வசிட்டனை "அயனையே நிகர் தூய மாமுனிவன்" என்றார்.

காமதேனு - சுரபி, பாற்கடல் கடைந்தபோது அதிலிருந்து தோன்றியது. வேண்டுவார் விரும்பும் எல்லாவற்றையும் உடனே சுரந்து அளிப்பது.

நாரதன் - தத்துவ ஞானத்தை உபதேசிப்பவன்; உலகத்தாரின் அஞ்ஞானத்தைப் போக்குபவன்; நன்மையுண்டாகவே கலகம் விளைவிப்பவன்.

அம்போருகம் - நீரில் முளைப்பது என்ற காரணப் பொருள் படும்.

அருந்ததி:—வசிட்டன் மனைவி, நக்ஷத்திர நிலையிலும் கணவனை விட்டு நீங்காதவள் ஆதலின் கற்பு நிலையில் மிகச்

சிறந்தவள்; பாதிவிரத்தியத்திற்கு இவளையே மகளிர் எல்லார்க்கும் உவமையாக எடுத்துக் கூறுவர்.

பலத்தில் மாருதம்:—எடுத்துக் காட்டு:—ஆதிசேட னுக்கும் வாயுவுக்கும் பலத்தில் சிறந்தவர் யார் எனப் போட்டி யுண்டாகலும் ஆதிசேடன் மேருகிரியைத் தனது ஆயிரம் பணாமகுடங்களால் கவிந்து பற்றிக் கொள்ளலும் வாயு தனது முழுப் பலத்தையுங் கொண்டு வீச மேருகிரிச் சிகரங்களில் ஓர் ஐந்து பெயர்ந்து சென்று தென் கடலில் விழுந்ததென்ற வரலாறுண்டு. இதிலிருந்து காற்றின் வேகம் உணர்க.

## 25. அவரவர்க்குப் பெலமாவன

அந்தணர்க் குயர்வேத மேபெலங் கொற்றவர்க்
கரியசௌ ரியமே பெல
மானவணி கர்க்குநிதி யேபெலஞ் சூத்திரர்க்
காயினே ருழவே பெலம்
மந்திரிக் குச்சதுரு பாயமே பெலநீதி
மானுக்கு நடுவே பெலம்
மாதவர்க் குத்தவசு பெலமடவி யர்க்குநிறை
மானமிகு கற்பே பெலம
தந்திர மிகுத்தகன சேவகர் தமக்கெலாஞ்
சாமிகா ரியமே பெலஞ்

சான்றவர்க் குப்பொறுமை யேபெலம் புலவோர்
தமக்குநிறை கல்வி பெலமாம்
வந்தனை செயும்பூசை செய்பவர்க் கன்புபெலம்
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

(இ-ள்) அந்தணர்க்கு உயர் வேதமே பலம் - முதல் வகுப்பினராகிய அந்தணர்களுக்கு அளவில்லாதிருக்கும் வேதங்களைப் பயில்வதே பலமாகும், கொற்றவர்க்கு அரிய சௌரியமே பலம் - வெற்றியுடைய அரசருக்கு அருமையான வீரமே பலமாகும், ஆன வணிகர்க்கு நிதியே பலம் - பொருள் ஈட்டுவதற்கே உண்டான வணிகருக்குச் செல்வமே பலமாகும், சூத்திரர்க்கு ஆயின் ஏர் உழவே பலம் - வேளாளருக்கோ வெனில் ஏர் உழுதலே பலமாகும், மந்திரிக்குச் சதுருபாயமே பலம் - மந்திரிக்குச் சாம தான பேத தண்டங்கள் ஆகிய நான்கு உபாயங்களே பலம், நீதிமானுக்கு நடுவே பலம் - நியாயாதிபதிக்குப் பக்ஷபாதமில்லாத நடுவுநிலையே பலமாகும், மாதவர்க்கு தவசு பலம் - பெரிய இருடிகளுக்குத் தவஞ் செய்வதே பலமாகும், மடவியர்க்கு நிறை மான மிகு கற்பே பலம் - மாதர்களுக்கு நிறைகுணமும் மானமும் கற்புமே பலம் ஆகும், தந்திரம் மிகுந்த கனசேவகர் தமக்கெல்லாம் சாமி காரியமே பலம் - உபாயநயம் மிகுந்திருக்க வேண்டிய நல்ல பெரிய வேலைக்காரர்களுக் கெல்லாம் தம்மைத் தொழிலில் படுத்திய

6

தொழில் தலைவர்கள் இட்ட தொழில் புரிவதே பலமாகும், சான்றவர்க்கு பொறுமையே பலம் - பெரியோருக்குப் பொறுமைதான் பலமாகும், புலவோர் தமக்கு நிறை கல்வி பலமாம் - கவி பாடுபவர்க்கு நிறைந்த கல்வி அறிவே பலமாகும், வந்தனை செய்யும் பூசை செய்பவர்க்கு அன்பு பலம் - துதிப்பதற்குச் செய்யும் ஆராதனை புரிபவர்க்கு எல்லாம் அன்பு பலமாகும், வால வடிவான வேலா - குழந்தை ரூபமான வேலாயுதம் படைத்தவனே !, மயி லேறி—, எ - று.

(வி - ரை) அந்தணர் - அழகிய தண்மை (அருள்) உடையவர். உயர் வேதம், அளவில்லாது வியாபித்திருக் கும் வேதம்; ருக்கு, யஜுர், 'சாமம், அதர்வணம் என்ற நான்கு சாகையுடையது. வேதம் - விதி விலக்குகளை அறி விப்பது என்று காரணப்பொருள் படும்.

மந்திரி, மந்தரம் - ஆலோசனை, அதனை யுடையோன் மந்திரி.

நீதிமானுக்கு நடுவு - ஒரு நியாயாதிபதிக்கு நடுவு நிலைமை இன்றியமையாதது. அதாவது, பகை, அயல், நண்பு என்னும் மூன்று பகுதியினும் அறத்தின் நின்றும் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை.

" சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி." —(குறள்)

பெரியோர்க்கு அழகு யாதெனில் முன்னே தான் சமமாக நின்று பின் தன்னிடம் வைத்த பாரத்தை வரையறுக்கும்

தராசு போல இலக்கணங்களால் அமைந்து ஒருபக்கம் கோணுமையாகும். நிறை - பெண்களுக்குள்ள மனவுறுதி. மனத்துள்ளேயே அடக்க வேண்டியவைகளை அடக்கி வைக்கும் வலிமை. பொறுமை - காரம்பற்றியேனும் மடமைக் குணத்தினாலேனும் ஒருவன் தமக்குக் கேடு செய்த வழித் தானும் அவனிடம் கேடு செய்யாது பொறுத்தல். நெறியின் நீங்கிய செய்தாரையும் பொறுக்க வேண்டும்.

"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை" —(குறள்)

தன்னைத் தோண்டுவாரையுந் தாங்கும் பூமிபோல் தம்மை இகழ்ச்சி செய்வாரையும் பொறுத்தல் நல்லதாம்; அப்போதுதான் பெரியோருக்குப் பலமாகும்.

## 26. இருந்தும் பயன்படாதவை

தருணத்தி லுதவிசெய்யாத நட்பாளர்பின்
றந்தென தராம லென்ன
தராதர மறிந்து முறைசெய்யாத மன்னரைச்
சார்ந்தென்ன நீங்கி லென்ன
பெருமை யுடனுண்மை யில்லாதவொரு பிள்ளையை
பெற்றென பெறும லென்ன [ப்
பிரியமா யுள்ளன் பிலாதவர்க ணேசம்
பிடித்தென்ன விடுக்கிலென்ன

தெருளாக மானமில் லாததொரு சீவனஞ்
செய்தென செயாம லென்ன
தேகியென வருபவர்க் கியாத செல்வஞ்
சிறந்தென முறிந்து மென்ன
மருவிளமை தன்னிலில்லாத கன்னிகை பின்பு
வந்தென வராம லென்ன
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) தருணத்தில் உதவி செய்யாத நட்பாளர் - தகுந்த சமயத்தில் உதவி புரியாத சினேகிதர், பின் - பிற்காலத்தில், தந்தென்ன - அப்பொருளைத் தந்தாலும் என்ன இலாபம்? (இல்லை), தராமல் என்ன - தராமற் போயினும் நஷ்டம் என்ன (இல்லை), தராதரம் அரிந்து முறை செய்யாத மன்னரை - சிறுமை பெருமை அறிந்து அவரவர்க்குரிய மரியாதைகளைச் செய்யாத அரசரை, சார்ந்தென்ன நீங்கில் என்ன - அடுத்தாலும் அல்லது நீங்கினாலும் என்ன (பிரயோசனம்? ஒன்றுமில்லை), பெருமையுடன் ஆண்மை இல்லா(த) ஒரு பிள்ளையை - பெருமையும் வீரமும் இல்லாத ஓர் பிள்ளையை, பெற்றென்ன பெறாமல் என்ன - பெற்றாலும் பெறாமற் போயினும் பிரயோஜனம் என்ன? (இல்லை; பிள்ளை இல்லாதிருத்தலே நலம்), பிரியமாய் உள்ளன்பு இல்லாதவர்கள் நேசம் - ஆவலும் உள்ளே ஊறிய அன்பும் இல்லாத சினேகிதரை, பிடித்து என்ன விடுக்கில் என்ன -

சேர்ந்தாலும் என்ன அல்லது அவர்களுடைய சினேகி தத்தை விடுத்தாலும் என்ன (ஒரு நஷ்டமும் இல்லை), தெருள் ஆக மானம் இல்லாத ஒரு சீவனம் - தெளிவுடன் மானமும் இல்லாத உயிர் வாழ்க்கை, செய்து என்ன செய் யாமல் என்ன - வைத்திருந்தாலும் போக்கினுலும் ஒரு பிரயோஜனமும் இல்லை, தேகி என வருபவர்க்கு ஈயாத செல்வம் - 'வேண்டும் கொடுப்பாயாக' என்று யாசித்து வருபவருக்கு வேண்டியபடி கொடுக்காதவனின் ஐஸ்வரி யம் சிறந்தென்ன முறிந்தும் என்ன - வளர்ந்தாலும் அழிந் தாலும் என்ன? (ஒரு நஷ்டமும் உண்டாகாது), மருவு இளமை தன்னில் இல்லாத கன்னிகை - கூடுவதற்குரிய இளம் பிராயத்தில் கிடைக்காத மனைவியாகிய கன்னி, பின்பு வந்து என்ன வராமல் என்ன - பின்னர் முதுமைப்பருவத் தில் கிடைத்தாலும் கிடைக்காமற் போயினும் என்ன? (ஒரு நஷ்டமும் இல்லை), மயிலேறி—, எ - று.

(வி - ரை) தெருளாக மானமில்லாத சீவனம்:—

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்" —(குறள்)

உயிர் நீங்கத் தன் மானம் எய்தும் எல்லை வருவ தாயின் தன் மயிர்த்திரளின் ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமானை ஒப்பான பெரியார், மானங் கெடுதலைத் தாங்காது இறப்பர். கீழ்மக்களே மானம் போயினும் உயிர் வாழ்வர்.

## 27. உபகாரம் இல்லாதவை

கடனீர் மிகுந்தென்ன வோதிதான் பெருத்தென்ன
காட்டிலவு மலரி லென்ன
கருவேல் பழுத்தென்ன நாய்ப்பால்சுரந்தென்ன
கானின்மழை பெய்து மென்ன
அடர்கழுதை லத்திநில மெல்லாங் குவிந்தென்ன
வரியகுண மில்லாத பெண்
அழகா யிருந்தென்ன வாஸ்தான கோழைபல
அரியநா லோதி யென்ன
திடமினிய பூதம்வெகு பொன் காத்திருந்தென்ன
திறன்மிகுங் காடி மயிர்தான் [லாஞ்
செறிவாகி நீண்டென்ன வஸ்த்ரபூ ஷணமெ
சித்திரத் துற்று மென்ன
மடமிகுந் தெவருக்கு முபகார மில்லாத
வம்பர்வாழ் வுக்கு நிகராம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கடல் நீர் மிகுந்தென்ன - சமுத்திர ஜலம் அதிகமாக இருப்பதால் என்ன பிரயோஜனம் (உப்பாய் இருப்பதால் பருக முடியாது), ஓதி பெருத்தென்ன - ஓதிய மரம் பெரியதாய் வளர்ந்திருப்பினும் பலன் இல்லை, காட்டு இலவ மலரில் என்ன - காட்டிலவம் மலர் பூத்தால்

என்ன பிரயோஜனம்? (இல்லை), கருவேல் பழுத்து என்ன - கருவேல மரம் பழுத்தால் அதன் பழம் பிரயோ ஜனமாகுமா? (ஆகாது), நாய்ப்பால் சுரந்து என்ன - நாய் பால் மிகுதியாகவும் சுரந்தாலும் என்ன இலாபம் (அருந்த முடியாது), கானின் மழை பெய்தும் என்ன - காட்டிடத்தே மழை பெய்தாலும் என்ன இலாபம்? (பயிர் செய்வதற்குதவாது), அடர் கழுதை லத்தை நிலம் எல்லாம் குவிந்தென்ன - அடர்த்தியாகக் கழுதை இலத்தி பூமியிடம் முழுதும் குவிந்தாலும் என்ன பயன் (ஒன்றுமில்லை), அரிய குணம் இல்லாத பெண் - அருமையான ஒழுக்கம் இல்லாத மங்கை, அழகாய் இருந்து என்ன - உடல் அழகு மட்டும் பெற்றிருந்தால் என்ன நன்மை? (ஒன்றுமில்லை), ஆஸ்தான கோழை பல அரிய நூல் ஓதில் என்ன - சபைக் கோழை பலவிதமான அருமையான சாத்திரங்கள் பயின் றுணர்ந்தாலும் என்ன பலன் (ஒன்றுமில்லை), திடம் இனிய பூதம் வெகு பொன் காத்திருந்து என்ன - வலிமை மிகுந்த பூதம் மிகுந்த செல்வத்தைக் காத்திருந்தாலும் யாருக் குதவி? (ஒருவருக்குமில்லை), திறல் மிகு கரடி மயிர் செறி வாகி நீண்டு என்ன - பலம் மிகுந்த கரடி உடலில் நெருக்க மாக மயிர் நீண்டு வளர்ந்திருந்தாலும் என்ன உபகாரம்? (ஒன்றுமில்லை), வஸ்திரம் பூஷணம் எல்லாம் சித்திரத்து உற்றும் என்ன - ஆடை ஆபரணங்கள் எல்லாம் சித்திரத் தில் எழுதி யிருந்தாலும் என்ன பலன்? (இல்லை), (அவை யாவும்), மடம் மிகுந்து எவருக்கும் உபகாரம் இல்லாத வம்பர் வாழ்வுக்கு நிகராம் - அறியாமை மிகுந்து யாருக்

கும் உதவி இல்லாத வீணரின் ஐஸ்வரியத்திற்கு ஒப்பாகும், மயிலேறி—, எ - று.

## 28. பதரெனப்படுவோர்

தன்பெருமை சொல்லியே தன்னைப் புகழ்ந்தபதர்
சமர்கண் டொளிக்கும் பதர்
தக்க பெரியோர் புத்திகேளாத பதர்தோழர்
தம்மொடு சலிக்கும் பதர்
பின்பு காணு விடந்தன்னிலே புறணிபல
பேசிக் களிக்கும் பதர்
பெற்றதாய் தந்தை துயர்பட வாழ்ந்திருந்தபதர்
பெண்புத்தி கேட்கும் பதர்
பொன்பண மிருக்கவே போயிரக்கின்ற பதர்
பொய்சாட்சி சொல்லும் பதர்
புவியோர் நடத்தையை யிகழ்ந்த பதர்தன் மனை
புணர்தல் வெளியாக்கும் பதர் [வி
மன்புணரும் வேசையுடன் விபசரிக்கின்ற பதர்
மனிதரிற் பதரென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

(இ - ள்) தன் பெருமை சொல்லியே தன்னைப் புகழ்ந்த பதர்-தனது பெருமையைப் பாராட்டிக்கொண்டே

தன்னைப் புகழ்ந்துகொள்ளும் பதரும், சமர் கண்டு ஒளிக்கும் பதர் - யுத்தம் வந்தது கண்டு ஓடி ஒளிக்கும் பதரும், தக்க பெரியோர் புத்தி கேளாத பதர் - நற்குண நற்செய்கைகளில் தகுதியையுடைய பெரியவரின் ஆலோசனை கேளாத பதரும், தோழர் தம்மோடு சலிக்கும் பதர் - சினேகிதர்களோடு பிணங்கும் பதரும், பின்பு காணு(த) இடந்தன்னில் புறணி பல பேசிக் களிக்கும் பதர் - ஒருவனுக்குப் பின்னால் அவன் பார்க்காத இடத்தில் பல நிந்தை சொல்லிச் சந்தோஷிக்கும் பதரும், பெற்ற தாய்தந்தை துயர்பட வாழ்ந்து இருந்த பதர் - தன்னைப் பெற்றெடுத்த மாதா பிதாக்கள் அன்னம் இல்லாது வருத்தப்பட்டுக்கொண்டிருக்கையில் தான் மட்டும் நன்ருக வாழ்ந்திருந்த பதரும், பெண் புத்தி கேட்கும் பதர் - தன் மனைவி சொல்லும்படியெல்லாம் கேட்டு நடக்கும் பதரும், பொன் பணம் இருக்க போய் இரக்கின்ற பதர் - செல்வம் தன்னிடம் இருக்கும் போது பிறரிடம் சென்று யாசிக்கும் பதரும், பொய்சாட்சி சொல்லும் பதர்—, புவியோர் நடத்தையை இகழ்ந்த பதர் - உலகத்தாரின் செய்கையை இகழ்ச்சியாகச் சொல்லும் பதரும், தன் மனைவி புணர்தல் வெளியாக்கும் பதர் - தனது பாரியை தன்னேடு கூடும் விஷயத்தைப் பிறரிடஞ் சொல்லும் பதரும், மன் புணரும் வேசையுடன் விபசரிக்கின்ற பதர் - பல்லோருடனும் மிகுதியாகப் புணரும் விபசாரிகள் இடை விபசாரஞ் செய்கின்ற பதரும், மனிதரில் பதர் என்பர் - மனித சமூகத்தில் துச்சமானவர் எனப் படுபவர், மயிலேறி—, எ - று.

(வி - ரை) சலித்தல் - இளைத்தோய்தல்; இங்கு நட்பில் இளைத்தல் பிணங்குதல். அறிவில் முதிர்ந்த மனையாளிடம் ஆலோசனை அவசியம் கேட்கவேண்டும் காம மிகுதியால் ஒருவன் தனது முட்டாள்தன்மை வாய்ந்த மனைவியின் சொல் கேட்டு அறிவீனச் செயல்களைச் செய்பவரையே இவர் பதர் என்றார்.

மன் புணரும் வேசை. மன் - மிகுதி. மன் - அரசன் எனக்கொண்டு அரசன் புணருதற்கு வைத்திருக்கும் வேசையரோடு விபசரிக்கும் பதர் என்று பொருளுங் கொள்ளுகின்றனர். அரசனுடைய வேசியரோடு சம்பந்தம் வைத்துக்கொள்ளுதல் உயிருக்கு உடனே ஆபத்து விளைவிப்பதாகும் என்று தெரிந்தும் அவ்விதம் செய்பவர் பதர்கள் என்றுகும். ஆனல் மன்னனின் வேசையரிடம் பயிலாது வேற்று வேசையிரிடம் பயிலலாம் என்று பொருளாமே என்றால், மன் - மிகுதியெனக் கொண்டு யாவரிடத்தும் மிகுதியாகப் புணரும் வேசையரிடம் சஞ்சரிப்பவர் பதர்கள் என்று கொண்டால் குற்றமற்றதாகும்.

## 29. காணுவிடில் துயரப்படுமவை

இரவி காண வனச மாரிகாணுதபயி
  ரிந்து காணாத குமுதம்
எந்தல் காண நாடு கரைகள் காண வோடம்
  இன்சொல் காண விருந்து

சுரபி காணுதகன் றன்னை காணு மதலை
சோலை காணுத வண்டு
தோழர் காணு நேயர் கலைகள் காணுத மான்
சோடு காணுத பேடு
குரவர் காணுத சபை தியாகி காணுவறிஞர்
கொழுநர் காணுத பெண்கள்
கொண்டல் காணுத மயில் சிறுவர் காணுத வாழ்
கோடை காணுத குயில்கள் [வு
வரவு காணுத சில விவையெலாம் புவிமீதில்
வாழ்வு காணு விளமையாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) இரவி காணு(த) வனசம் - சூரியனைப் பார்க்காத தாமரைமலரும், மாரி காணுத பயிர் - மழையைக் காணுத பயிரும், இந்து காணுத குமுதம் - சந்திரனைக் காணுத அல்லிமலரும், எந்தல் காணு(த) நாடு - அரசனைக் காணுத தேசமக்களும், கரைகள் காணு(த) ஓடம் - சமுத்திரக் கரைகளைக் காணுத கப்பல் முதலிய ஓடங்களும், இன்சொல் காணு(த) விருந்து - இனிய முகமன் வார்த்தைகளைக் கேளாத விருந்தாளிகளும், சுரபி காணுத கன்று - தாய்ப்பசுவைக் காணுத கன்றும், அன்னை காணுத மதலை - தாயைக் காணுத குழந்தையும், சோலை காணுத வண்டு - தேன் பருகுவதற்கு மலர் நிறைந்த பூஞ்சோலையைக் காணுத

வண்டும், தோழர் காணு(த) நேயர் - தமது நட்பினரைக் காணாத சிநேகிதர்களும், கலைகள் காணாத மான் - ஆண் மான்களைக் காணாத பிணைமான்களும், சோடு காணாத பேடு - ஆண் ஜதையைக் காணாத பெட்டையும், குரவர் காணாத சபை - பெரியவர்கள் இல்லாத சபையும், தியாகி காணாத வறிஞன் - கொடுப்பவனைக் காணாத தரித்திரனும், கொழுனர் காணாத பெண்கள் - தத்தமது புருஷன்மாரைக் காணாத மாதர்கள், கொண்டல் காணாத மயில் - மேகத்தைப் பாராத மயிலும், சிறுவர் காணு(த) வாழ்வு - மக்களைப் பெறாத ஒருவனின் வாழ்வும், கோடை காணாத குயில்கள் - வேனிற் காலத்தைக் காணாத குயில்களும், வரவு காணாத செலவு - பொருள் வருவாய் இல்லாத செலவும், இவை எல்லாம்—, புவிமீதில் - பூமியின் கண்ணே, வாழ்வு காணு(த) இளமையாம் - செல்வம் இல்லாத இளமைப்பருவம்போலப் பயன் இல்லாதனவாம், மயிலேறி—, எ - று.

(வி - ரை) சூரியனைக் கண்டபோதுதான் தாமரை மலரும்; சந்திரனைக் கண்டபோதுதான் குமுதம் மலரும்; மேகத்தைக் கண்டபோதுதான் மயில் தோகை விரித்தாடும்; வசந்தகாலம் வந்தபோதுதான் குயில் பாடும். இன்சொல் காணாத விருந்து.

"அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்." —(குறள்)

முகம் இனியனாய்த் தகுந்த விருந்தினரைக் காப்பவனது வீட்டில் திருமகள் மனமகிழ்ந்து வாழ்ந்துகொண்டிருப்பாள்.

## 30. வியாதி மூலங்கள்

கல்லினுன் மயிரினுன் மீதூண் விரும்பலாற்
கருதிய விசாரத்தினுற்
கடுவழி நடைக்கையான் மலசல மடைக்கையாற்
கனிபழங் கறியுண்ணலாற்
நெல்லினு லுமியினு லுண்டபின் மூழ்கலா
னித்திரைக ளில்லாமையா
னீர்ப்பகையினுற் பனிக் காற்றிலுட னேதலால்
னீடுசரு கிலையூறலால்
மெல்லிநல் லார்கலவி யதிகமுள் விரும்பலால்
வீழ்மலஞ் சிக்குகையினுன்
மிகுசுமை யெடுத்தலா லிளவெயிற் காய்தலான்
மெய்வாட வேலை செயலால்
வல்லிரவிலே தயிர்கள் சருகாதி யுண்ணலால்
வன்பிணிக் கிடமென்பர்காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரே சனே.

(இ - ள்) கல்லினுல் மயிரினுல் - சோற்றில் கலந்திருக்கும் கல் மயிர் இவற்ருலும், மீதூண் விரும்பலால் - பெருந்திண்டி விரும்பி உண்பதாலும், கருதிய விசாரத்தினுல் - மிகவும் பாராட்டப்படும் துக்கத்தினுலும், கடுவழி நடக்கையால்-நெடுந்தூரம் நடப்பதாலும், மலசலம் அடைச்

கையால் - மலசலங்கள் இயற்கையாக வருவனவற்றைத் தடுப்பதாலும், (பழங்) கனி பழங்கறி உண்ணலால் - மிக வும் பழுத்த பழங்களையும் சமைத்த பழைய கறிகளையும் சாப்பிடுவதாலும், நெல்லினல் உமியினல் - சோற்றில் கலந் திருக்கும் நெல் உமி இவற்றினலும், உண்டபின் மூழ்கலால்- சாப்பிட்ட பின்னர் குளிப்பதாலும், நித்திரைகள் இல்லா மையால் - நெடுநேரம் தூக்கமில்லாதிருத்தலாலும், நீர்ப்பகை யினல் - தண்ணீர் மாறுபாட்டினலும், பனிக்காற்றினல் உடல் நோதலால் - பனியினலும் காற்றினலும் தேகம் நோவதாலும், நீர் சருகு இலை ஊறலால் - குடிக்கும் நீரில் இலை சருகு முதலியன ஊறுவதாலும், மெல்லியலார் கலவி அதிகமும் விரும்பலால் - மெல்லிய தன்மையுடையவராகிய மாதர் போகத்தை அதிகஞ் செய்வதாலும், வீழ் மலஞ் சிக்கு கையினல் - கழிவதற்குரிய மலம் சிக்கிப் போவதாலும், மிகு சுமை எடுத்தலால் - தாங்கமாட்டாத பாரம் சுமப்பதா லும், இளவெயில் காய்தலால் - காலை வெய்யிலில் காய்வதா லும், மெய்வாட வேலை செய்வதால் - உடல் இளைக்க வேலை செய்வதாலும், வல் இரவில் தயிர்கள் சரகாதி உண்ணலால் - மிகுந்த இராத்திரியில் தயிர்களும் கிரைகளும் உட்கொள்ளுவ தாலும், வன் பிணிக்கு இடம் என்பர் - கொடிய நோய்களுக் குக் காரணம் என்று வைத்திய நூலுடைய பெரியோர் கூறு வர், மயிலேறி—, எ - று.

(வி - ரை) நீர்ப்பகை :—நீந்தத் தெரியாதவனுக்கு நீர் பகையாகும்; தெரிந்தவனுக்கும் அதிகதூரம் நீந்தினலும்

நீர்ப்பகையாகும். இதுவும் அன்றி ஓர் இடத்துத் தண்ணீர் மற்றோர் இடத்துத் தண்ணீருடன் மாறுபடுகின்றது.

மாதர் போகத்தை அதிகம் மனத்திடத்துப் பாராட்டுவதும் நோய்க்கிடம் என்பார் 'கலவி அதிகமும் விரும்பலால்' என்றார்.

## 31. செத்தும் சாகாதவர்

அனைவர்க்கு.முபகார மாம்வாவி கூவமுண்
டாக்கினோர் நீதி மன்ன
ரழியாத தேவால யங்கட்டி வைத்துளோ
ரகரங்கள் செய்த பெரியோர் [து
தனையொப்பி லாப்புதல்வ னைப்பெற்ற பேர்பொரு
சமர்வென்ற சுத்த வீரர்
தரணிதனி னிலைநிற்க வெந்நாளு மாறுத
தருமங்கள் செய்த பேர்கள் [ளர்
கனவித்தை கொண்டவர்க ளோயாத கொடையா
காவியஞ் செய்த கவிஞர்
கற்பினின் மிகுந்தவொரு பத்தினி மடந்தையைக்
கடிமணஞ் செய்தோர்க ளிம்
மனிதர்கள் சரீரங்கள் போகினுஞ் சாகாத
மனிதரிவ ராகு மன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) அனைவர்க்கும் உபகாரம் ஆம் வாவி கூவும் உண்டாக்கினோர் - எல்லாருக்கும் உதவியாகும் குளங் கிணறுகள் வெட்டினவர்களும், நீதி மன்னர் - செங்கோல்முறை தவறாது ஆண்ட அரசரும், அழியாத தேவாலயங் கட்டி வைத்துளோர் - அழியாத வகையில் தேவர் கோயில் கட்டி வைத்தவரும், அறங்களைச் செய்த பெரியோர் - அறநூல்களை இயற்றிய பெரியோரும், தன்னை ஒப்பு இல்லா(த) புதல்வனைப் பெற்ற பேர் - தனக்கு நிகர் இல்லாத மகனைப் பெற்ற பேர்களும், பொருது சமர் வென்ற சுத்த வீரர் - புறமுதுகு காட்டாது யுத்தம் புரிந்து ஜெயித்த குற்றம் இல்லாத வீரரும், தரணி தன்னில் நிலைநிற்க எந்நாளும் மாறாத தருமங்கள் செய்த பேர்கள் - பூமியில் நிலைபெற்றிருக்கும்படியான எப்போதும் மாறாதிருக்கும்படியான தரும காரியங்களைச் செய்தபேர்களும், கனவித்தைகொண்டவர்கள்-அபாரமான சாஸ்திரக்கலைகளில் மிகுந்த ஞானம் படைத்தவர்களும், ஓயாத கொடையாளர் - தம் கைவசம் உள்ள பொருள்களை இல்லை யென்று இளைக்காது தானஞ் செய்தவர்களும், காவியஞ் செய்த கவிஞர் - சிறந்த காவிய நூல்கள் இயற்றிய கவிவாணர்களும், கற்பினின் மிகுந்த ஒரு பத்தினி மடந்தையை - பாதிவிரத்திய தருமத்தில் சிறந்த ஓர் பத்தினிப் பெண்ணை, கடிமணஞ் செய்தோர்களும் - கலியாணஞ்செய்து கொண்டவர்களும், மனிதர்கள் சரீரங்கள் போகினும் - மனிதரூபமான பூதவுடல்கள் அழிந்து போனாலும், சாகாத மனிதரிவர் ஆகும் அன்றோ - இறவாத பெரிய மனிதர் ஆவார்கள் இவர்கள் அல்லவா? (ஆம்) மயிலேறி—, எ - று.

(வி - ரை) அறநூல் - திருக்குறள், நாலடியார் போன்ற அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களைக் கொண்ட நூல்கள். சுத்தவீரர், வீரத்தில் சுத்தமாவது, ஆயுதம் உடைய தனக்கு நிகரானவரோடு போர்புரியும் ஆண்மை. இராமபிரான் முதல் நாள் யுத்தத்தில் இராவணன் நிராயுதபாணியாக நிற்பதைக்கண்டு அவன் மீது பாணப் பிரயோகஞ் செய்து அழிக்கவில்லை.

“ஆளை யாவுனக் கமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை இன்றுபோய் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை பாயுறு கோசல நாடுடை வள்ளல்”

என்று கம்பர்பிரான் சொன்னதில் ராமபிரான் “ஆள் ஐயா! இன்று போய் போர்க்கு நாளை வா” என்று அருளிச் செய்து இராவணனைத் தம் வசம் இருந்தும் விடுத்தார் என்றால் அதுவே சுத்த வீரம் ஆகும்.

## 32. சாகாதிருந்துஞ் செத்தவர்

மாறாத வறுமையோர் தீராத பிணியாளர்
வருவேட் டகத்தி லுண்போர்
மனைவியை வழங்கியே சீவனஞ் செய்குவோர்
மன்னுமொரு ராச சபையில்
தூறாக நிந்தைசெய் துய்குவோர் சிவிகைகள்
சுமந்தே பிழைக்கின்ற பேர்

தொலையா விசாரத் தழுந்துவோர் வார்த்தையிற்
சோர்வுபட லுற்ற பெரியோர்
வீருக மனையா டனக்கஞ்சி வந்திடு
விருந்தினை யொழித்து விடுவோர்
வீம்புடன் செல்லாத விவகார மதுகொண்டு
மிக்கசபை யேறு மசடர்
மாருக விவரெலா முயிருடன் செத்தசவ
மாகியொளி மாய்வர் கண்டாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) மாருத வறுமையோர் - நீங்காத தரித்திரத்தில் உழப்பவரும், தீராத பிணியாளர் - ஒழியாத நோ[ய்] அனுபவிப்பவரும், வரும் வேட்டகத்தில் உண்போர் - (தன் மனைவி சம்பந்தத்தால்) வந்த மாமியார் வீட்டில் காயமாய் இருந்து சாப்பிட்டுக்கொண் டிருப்பவரும், மனைவியை வழங்கியே சீவனம் செய்குவோர் - தமது பாரியைகளின் மானத்தைத் தாமே பிறருக்கு விற்று அதனால் வரும் பணத்தில் வாழ்பவரும், மன்னும் ஒரு ராஜ சபையில் தூருக நிந்தை செய்து உய்குவோர் - நிலைபெற்ற அரச சபையில் பிறரைப்பற்றிப் பழி சொல்லி நிந்தித்து வாழ்பவரும், சிவிகைகள் சுமந்தே பிழைக்கின்ற பேர் - (மனிதன் மனிதனைத் தூக்குதல் பாபமா யிருக்கப்) பல்லக்குத் தூக்கி வாழ்பவரும், தொலையாத விசாரத்து அழுந்துவோர் - நீங்

காத துன்பக்கடலில் ஆழ்ந்துவிடுபவரும், வார்த்தையில் சோர்வு படல் உற்ற பெரியோர் - சொல்லும் பேச்சில் குற்றம் உண்டாகும்படி பேசும் பெரியவரும், மனையாள் தனக்கு அஞ்சி வீறு ஆக வந்திடு விருந்தினை ஒழித்துவிடு வோர் - தனது பாரியைக்குப் பயந்து பெருமையுடன் தன் வீடு வந்த விருந்தாளிகளை அனுப்பிவிடுவோரும், வீம் புடன் செல்லாத விவகாரம் அது கொண்டு - பிடிவாதத் துடன் ஜெயிக்கத் தகுதி யில்லாத பொய்வழக்குகளை எடுத் துக்கொண்டு, மிக்க சபை ஏறும் அசடர் - பெரிய பெரிய நீதிசபைகளுக்குப் போகும் அறிவீனரும், மாறாக இவர் எல்லாம் உயிருடன் செத்த சவமாகி ஒளி மாய்வர் - இவர் யாவரும் எல்லாருக்கும் விரோதியாகி உயிரோடிருந்தும் செத்த பிணத்திற்குச் சமானமாகிப் புகழ் குறையப் பெறுவர்.

## 33. சிறிதும் பயன்படாதவர்

பதராகி னுங்கன விபூதிவிளை விக்கும்
பழமைபெறு சுவராகிலும்
பலருக்கு மறைவாகு மாடுரிஞ் சிடுமலம்
பன்றிகட் குபயோக மாம்
கதமிகு கடாவென்னி லுழுதுபுவி காக்கும்வன்
கழுதையும் பொதி சுமக்குங்
கல்லெனிற் றேவர்களு மாலயமு மாம்பெருங்
கான்புற்று மரவ மனையாம்

இதமிலாச் சவமாகி லுஞ்சிலர்க் குதவிசெயு
மிழிவுறு குரங்கா யினு
மிரக்கப் பிடித்தவர்க் குதவிசெயும் வாருகோ
லேற்றமா ளிகை விளக்கும்
மதமது மிகும்பாம லோபரா லுபகார
மற்றொருவ ருக்கு முண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) பதராகிலும் கன விபூதி விளைவிக்கும் - நெல் பதராகிலும் பெருமை பொருந்திய திருநீறு உண்டாக்கும், பழமை பெறு சுவராகிலும் பலருக்கும் மறைவாகும் மாடு உரிஞ்சிடும் - பழைய (குட்டிச்) சுவராகிலும் பலருக்கும் மறைவாவதோடு தினவு தீர மாடு உராய்வதற்கு உபயோகமாகும், மலம் பன்றிகட்கு உபயோகம் ஆம் - மலமானது பன்றிகட்கு உணவாகப் பயன்படும், கதம் மிகு கடா என்னில் உழுது புவி காக்கும் - கோபம் மிகுந்த எருமைக் கிடாவாகிலும் ஏர் உழுது பூவுலகத்தவரை (அன்னம் அளித்துப்) பாதுகாக்கும், வன் கழுதையும் பொதி சுமக்கும் - மெதுவாக நடப்பதில் வலிய கழுதையாகிலும் வண்ணான் துணிச்சுமை முதல் இதர பாரமான சுமைகளை ஏற்றிச் செல்லும், கல் எனில் தேவர்களும் ஆலயமும் ஆம் - கல்லாகிலும் தெய்வ விக்கிரகங்களாகவும் தேவர்கோயிலாகவும் கட்ட உபயோகமாகும், பெருங் கான்புற்று அர

வம் மனை ஆம் - பெரிய காட்டுப்புற்றாகிலும் பாம்பு குடியிருக்க வீடாகும், இதம் இல்லா(த) சவமாகிலும் சிலர்க்கு உதவி செய்யும் - நன்மையே இல்லாத சவமாகிலும் பேய் கழுகு முதலியவற்றிற்கு உணவாக அமைந்து உதவி புரியும், இழிவுறு குரங்காயினும் பிடித்தவர்க்கு இரக்க உதவி செய்யும் - இழிவு மிகுந்த குரங்காகிலும் தன்னைப் பிடித்தவருக்குப் பிச்சை எடுத்தலில் உதவி செய்யும் (குரங்காட்டிக்குச் சோறு போடுவது குரங்கு), வாருகோல் ஏற்றம் மாளிகை விளக்கும் - துடைப்பமாகிலும் பெருமை பொருந்திய மாளிகையை விளக்கிச் சுத்தமாக்கும், மதம் அது மிகும் பரம உலோபரால் உபகாரம் மற்றொருவருக்கும் உண்டோ - ஈயாமையில் வலிமை மிகுந்த பெரிய உலோபிகளால் எவருக்கேனும் உதவி இருக்கின்றதா? (இல்லை), மயிலேறி—, எ - று.

## 34. உலுத்தர் இயல்பு

திரவியங் காக்குமொரு பூதங்கள் போற்பணந்
தேடிப் புதைத்து வைப்பார்
சீலநல மாகவுங் கட்டார்க ணல்லமுது
செய்துண ரறமுஞ் செயார்
புரவலர்செய் தண்டந் தனக்கும்வலு வாகப்
புகுந்திருட ருக்கு மீவார்
புலவரைக் கண்டவுட னோடிப் பதுங்குவார்
புராணிகர்க் கொன்று முதவார்

விரகறிந் தேபிள்ளை சோறுகறி தினுமளவில்
வெகுபணஞ் செலவாக லால்
விளையாடு கிழவனும் பிள்ளையே பிள்ளையென
மிகுசெட்டி சொன்ன கதைபோல்
வரவுபார்க் கின்றதே யல்லாது லோபியர்கண்
மற்றொருவ ருக்கீவரோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) திரவியம் காக்குமொரு பூதங்கள் போல் பணம் தேடி புதைத்து வைப்பார் - புதைப்பணத்தைக் காத்துக் கொண்டிருக்கும் ஒப்பற்ற பூதங்களைப் போல் பணத்தைச் சம்பாதித்துப் புதைத்து வைத்துக் காத்துக்கொண் டிருப் பார்கள், சீலை நலமாகவும் கட்டார்கள் - நல்ல துணியுங் கட்டமாட்டார்கள், நல்லமுது செய்து உண்ணார் - நல்ல சாப்பாடும் செய்வித்துச் சாப்பிட மாட்டார்கள், அறமும் செய்யார் - வேத நூல்களில் விதித்தன செய்தல் விலக்கியவை விடுத்தல் ஆகிய தரும காரியங்கள் செய்ய மாட்டார்கள், புரவலர் செய் தண்டம் தனக்கும் - அரசர்கள் தண்டனைக்காக விதிக்கப்படும் அபராதத்திற்கும், வலுவாகப் புகுந் திருடருக்கும் ஈவார் - பலாத்காரமாக உள்ளே புகும் திருடர்களுக்கும் கொடுப்பார்கள், புலவரைக் கண்ட உடன் ஓடிப் பதுங்குவார் - கவி பாடுபவர் வந்தக் கால் அவர்களைப் பார்த்ததும் ஓடி ஒதுங்கி ஒளித்துக் கொள்வார்கள், புராணிகர்க்கு ஒன்றும் உதவார் - புராணஞ்

சொல்லுவோர் வந்தாலும் அவர்களுக்கும் ஒரு காசும் கொடுத்துதவ மாட்டார்கள், விரகு அறிந்து பிள்ளை சோறு கறி தின்னும் அளவில் - உணர்வுடன் மிதமாகவே தனது மகன் சோறு கறிகள் தின்னும்போதும், வெகு பணம் செலவாகலால் - அப் பிள்ளை தின்பதாலேயே மிகுந்த பணம் செலவாகிவிடுகின்றதென்ற எண்ணத்தால், கிழவனும் பிள்ளையே விளையாடு பிள்ளையென - கிழப்பருவத்தவனே விளையாடுவதற்குரிய பிள்ளையாவான் என்று, மிகு செட்டி சொன்ன கதைபோல் - யுக்தி மிகுந்த செட்டி ஒருவன் கூறிய கதை போலே, வரவு பார்க்கின்றதே அல்லாது - தனக்குப் பணவருவாயைக் கவனிப்பதே அல்லாமல், உலோபியர்கள் மற்றொருவருக்கு ஈவரோ - உலோபிகள் பிறருக்குப் பணம் உதவுவாரோ? (இல்லை), மயிலேறி—, எ - று.

(வி - ரை)

" பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்த
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போனபின் யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம் "

## 35. திருவாழ் இடங்கள்

கடவா ரணத்திலுங் கங்கா சலத்திலுங்
கமலாச னந்தன்னி லுங்
காகுத்தன் மார்பிலுங் கொற்றவ ரிடத்திலுங்
காவியின் கூட்டத்தி லும்

நடமாடு பரியிலும் பொய்வார்த்தை சொல்லாத
நல்லோ ரிடந்தன்னிலு
நல்லசுப லக்ஷண மிகுந்தமனே தன்னிலும்
ரணசுத்த வீரர்பாலும்
அடர்கே தனத்திலுஞ் சுயம்வரந் தன்னிலு
மருந்துளசி வில்வத்திலு
மலர்தரு கடப்பமலர் தனிலுமிர தத்திலும்
மதிகுண மான ரூப
மடவா ரிடத்திலுங் குடிகொண்டு திருமாது
மாறு திருப்ப ளன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) கடம் வாரணத்திலும் - மதம் பொருந்திய யானை யிடத்திலும், கங்கா சலத்திலும் - கங்கையில் ஓடும் தண்ணீரிலும், கமலாசனந் தன்னிலும் - தாமரையாகிய பீடத்திலும், காகுத்தன் மார்பிலும் - ஸ்ரீ ராமபிரான் மார்பிலும், கொற்றவர் இடத்திலும் - வெற்றியையுடைய அரசர் இடத்திலும், காலியின் கூட்டத்திலும் - பசுமந்தையிலும், நடமாடு பரியிலும் - வேகமாகப் பாய்ந்தோடும் குதிரையினிடத்திலும், பொய் வார்த்தை சொல்லாத நல்லோர் இடந் தன்னிலும் - பொய் சொல்லாத பெரியோரிடத்திலும், நல்ல சுபலக்ஷண மிகுந்த மனே தன்னிலும்-அழகிய மங்களகரமான லக்ஷணம் மிகுந்த வீட்டிலும், ரணம் சுத்த வீரர் பாலும் -

யுத்தகளத்தில் குற்றமற்ற போர் புரியும் வீரர் இடத்திலும், அடர் கேதனத்திலும் - நெருக்கமான வெற்றிக்கொடி யிடத்திலும், சுயம்வரம் தன்னிலும் - (தமக்குரிய ஆடவர் களைத் தேர்ந்தெடுப்பதற்குப் பெண்களுக்காக இயற்றப் படும்) சுயம்வரம் நடக்கும் இடத்திலும், அரும் துளசி வில்வத்திலும் - அருமையான துளசியும் வில்வமும் இருக் கும் இடத்திலும், அலர்தரு கடப்ப மலர் தனிலும் - மலர் கின்ற கடம்பப்பூவிடத்திலும், இரதத்திலும் - தேரிலும், அதி குணம் மானம் ரூபம் மடவார் இடத்திலும் - நிறை குணமும், மானமும், அழகும் பொருந்திய மாதர்கள் இடத்திலும், திருமாது குடி கொண்டு மாருதிருப்பள் அன்றோ - இலக்குமி வாசஸ்தலமாகக் கொண்டு நீங்கா திருப்பாள் அல்லவா ? (ஆம்), மயிலேறி—, எ - று.

(வி - ரை) காகுத்தன், ஸ்ரீ ராமன். முன்னொரு சம யத்தில் வானவருக்கும் அரக்கருக்கும் கொடிய யுத்தம் உண்டாகி அதில் அசுரரால் தேவர் வெல்லப்பட்டனர். அவர்கள் நாராயணனை வேண்டினர். பெருமான் தோன்றி, "பூமியில் புரஞ்சயன் என்னும் அரசனது உருவத்தில் புகுந்து அசுரரைச் சங்கரிப்பேன் ; நீங்கள் அவனைத் துணை யாகக் கொள்ளுங்கள்" என்றார். அவ்விதமே தேவர்கள் இட்சுவாகு குமாரனான சசாதன் என்பவனின் குமாரனான புரஞ்சயனிடம் வேண்டினர். அவன் "தேவேந்திரன் வாகனமாக எனக்கு வந்தால் பொருது அசுரரை வெல்வேன்" என்றான். அவ்விதமே இந்திரன் ரிஷப

வாகனமாக நிற்றலும், அதன் முசுப்பின்மீதேறி அசுரரை எளிதில் வென்ருன். இந்திரனை வாகனமாகக் கொண்ட தால் இந்திரவாகனன் என்றும், ரிஷபரூபமான இந்திரனது 'ககுத்' என்னும் முசுப்பின்மீது ஏறியதால் 'ககுஸ்த்தன்' என்ற பேரும் உண்டாயிற்று. இவன் வமிசத்தில் பிறந்த தால் ஸ்ரீ ராமபிரானுக்குக் காகுத்தன் என்ற பேர் வழங் குவதாயிற்று. இங்குக் காகுத்தன் விஷ்ணு என்னும் பொருளில் நின்றது. மஹாவிஷ்ணுவின் மார்பில்தான் இலக்குமி வாசம் செய்கின்றனள்.

துளசி, விஷ்ணுவுக்குரியது. வில்வம், சங்கரனுக் குரியது. கடப்பம், முருகனுக்குரியது.

## 36. மூதேவி வாழிடங்கள்

சோரமங் கையர்கணிச முரையார்கள் வாயினிற்
சூதகப் பெண்க ணிழலில்
சூளையிற் சூழ்தலுறு புகையிற்க ளேபரஞ்
சுடுபுகையி னீசர் நிழலில்
காரிரவி லரசுநிழ லிற்கடா நிழலினெடு
கருதிய விளக்கு நிழலில்
காமுகரி னிஷ்டையில் லாதவர் முகத்திற்
கடுஞ்சினத் தோர் சபையினில்
ஈரமில் லாக்களர் நிலத்தினி லிராத்தயிரி
லிழியுமது பானர் பாலி

**இலைவேல் விளா நிழலி னிதமமூக் கடைமனையி**
**லேனநா யசகரத் தூள்**
**வாரிய முறத்தூள்பெருக்கு தூண் மூதேவி**
**மாறு திருப்ப ளென்பார்**
**மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு**
**மலைமேவு குமரேச னே.**

(இ - ள்) சோரமங்கையர் - வியபிசாரிகளிடத்திலும், நிசம் உரையார்கள் வாயினில் - சத்திய வார்த்தை பேசாதவர் வாயிலும், சூதகப் பெண்கள் நிழலில் - மாதவிடாய் ஆகிய தீட்டுடைய பெண்களின் நிழலிலும், சூளையில் சூழ்தல் உறு புகையில் - செங்கல் சூளையில் சூழ்ந்து கொள்ளும் புகையிலும், நீசர் நிழலில் - கீழ்மக்கள் நிழலிலும், கார் இரவில் - இருண்ட இராத்திரியிலும், கடா நிழலினொடு கருதிய விளக்கு நிழலில் - எருமைக்கிடா நிழலினோடு யாவராலும் மதிக்கப்படும் விளக்கு நிழலிலும், காமுகரினில் - காமத்தையே பாராட்டும் துச்சரிடத்திலும், நிஷ்டை இல்லாதவர் முகத்தில்-யோகநிஷ்டை இல்லாதவர் முகத்தினும், கடும்சினத்தோர் சபையினில் - கொடிய கோபம் உள்ளவர் கூட்டத்திலும், ஈரம் இல்லா(த) களர் நிலத்தினில் - தண்ணீர்ப்பசை இல்லாத களர் நிலத்திலும், இராத் தயிரில் - இரவு வேளையில் உண்ணப்படும் தயிரிலும், இழியும் மதுபானர்பாலில் - ஒழுக்கநெறியினின்றும் வீழ்ந்த கட்குடியினர் இடத்திலும், இலைவேல் விளா நிழலினில் - சிறிய இலை பொருந்திய வேலமரத்து நிழலிலும், விளாமர நிழலி

னும், நிதம் அழுக்கு அடை மனையில்-சுத்தப் படுத்தாததால் நாள்தோறும் குப்பை சேரும் வீட்டிலும், ஏனம் - பன்றி யிலும், நாய் - நாயிலும், அசம்- ஆட்டிலும், கரம் - கழுதை யிலும், தூள் - தூசியிலும், வாரிய முறத்தூள் - அசுத்த குப்பையை வாரிய முறத்தூளிலும், பெருக்கு தூள் - துடைப்பத்தால் பெருக்கிய தூளிலும், மூதேவி மாறுதிருப் பள் என்பார் - மூதேவி நீங்காது வாசம் செய்வாள் என்று சொல்லுவர் பெரியோர், மயிலேறி—, எ - று.

## 37. திருத்தினுந் திருந்தாமை

கட்டியெரு விட்டுச் செழுந்தேனை வார்க்கினுங்
காஞ்சிரங் கைப்பு விடுமோ
கழுதையைக் கட்டிவைத்து ஓமம் வளர்க்கினுங்
கதிபெறுங் குதிரை யாமோ
குட்டியர வுக்கமுது அளித்தே வளர்க்கினும்
கொடுவிட மலாது தருமோ
குக்கனெடு வாலுக்கு மட்டையைக் கட்டினுங்
கோணுமலே நிமிருமோ
கிட்டியே தாரகைக் கூட்டங்கள் மின்னினும்
கிரண சந்திர னாகுமோ
வுலவுகன கர்ப்பூர வாடைபல கூட்டினு
முள்ளியின் குணமாறுமோ

மட்டிகட் காயிரம் புத்திசொன்ன லுமதின்
மார்க்க மரியாதை வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) கட்டி எருவிட்டுச் செழுந்தேனை வார்க்கினும்-பாத்தி வரம்பு கட்டிப் பின் நல்ல எருவைப் பெய்து செழுமையான தேனைப் பாய்ச்சினாலும், காஞ்சிரம் கைப்பு விடுமோ - எட்டிக்காய் தனது கைப்புத் தன்மையை நீக்குமோ? (இல்லை), கழுதையைக் கட்டிவைத்து ஓமம் வளர்க்கினும் - கழுதையை யாகத்தம்பத்தில் கட்டிவைத்து யாகஞ் செய்து ஓமம் வளர்த்தாலும், கதிபெறும் குதிரை ஆமோ-மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, இடபகதி என்ற பலவித நடைகளையுடைய குதிரையாகி விடுமோ? (இல்லை), குட்டி அரவுக்கு அமுது அளித்தே வளர்க்கினும் - பாம்புக் குட்டிக்குப் பால் மட்டும் குடிப்பித்து வளர்த்தாலும், கொடு விடம் அல்லாது தருமோ - கொடுமையான நஞ்சு தவிர்த்து வேறொன்று தருமோ? (தராது), குக்கன் நெடு வாலுக்கு மட்டையைக் கட்டினும் - நாயினது கோணிய நீண்ட வாலுக்கு மட்டையை வைத்துக் கட்டினாலும், கோணாமலே நிமிருமோ - கோணாது நேராகுமோ? (ஆகாது), கிட்டியே தாரகைக் கூட்டங்கள் - நெருங்கி நட்சத்திரக் கூட்டங்கள், மின்னினும் கிரண சந்திரனாகுமோ - மின்னினாலும் ஒளிபொருந்திய சந்திரனுக்கு ஒப்பாகுமோ? (ஆகாது), உலவு கன கர்ப்பூரம்

வாடை பல கூட்டினும், கர்ப்பூரத்தின் பரவுகின்ற கனத்த மணத்தை மிகுதியாகச் சேர்த்தாலும், உள்ளியின் குணம் மாறுமோ - வெண்காயத்தின் (அல்லது வெள்ளைப் பூண்டின்) நாற்றக் குணம் நீங்குமோ? (நீங்காது), மட்டிகட்கு ஆயிரம் புத்தி சொன்னாலும் - முட்டாள்களுக்குப் பலவித புத்தி மொழிகள் உரைத்தாலும், அதின் மார்க்கம் மரியாதை வருமோ - அதனாலும் மரியாதையான வழி உண்டாகுமோ? (இல்லை), மயிலேறி—, எ - று.

(வி - ரை) மட்டிகட்கு ஆயிரம்............கபம்பர் பிரானும் "கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள்" என்றார். கல்வியறிவு இல்லாத மூடர்களுக்குப் பெரியோர் இடித்திடித்துப் பொருள் கூறினாலும் ஒரு காதால் கேட்டு ஒரே வினாடியில் மற்றோர் காது வழியாக விட்டிடுவர்.

## 38. குறிப்பறிதல்

மனதிற் கடும்பகை முகத்தினா லறியலா
  மாநிலப் பூடுகளெலாம்
மழையினா லறியலா நல்லார்பொ லார்தமை
  மக்களா லறியலா கும்
கனமருவு சூரரைச் சமரினா லறியலாங்
  கற்றவொரு வித்துவானைக்
கல்விப்ர சங்கத்தி னாலறிய லாங்குணங்
  களைநடையி னாலறிய லாம்

தனதக மடுத்தது பளிங்கினு லறியலாஞ்
சாதிசொல் லாலறிய லாந்
தருநீதி கேள்வியா லறியலாம் பிணிகளைத்
தாதுக்க ளாலறிய லாம்
வனசவிக சிதவதன பரிபூர ணனந்த
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) மனதில் கடும்பகை - ஒருவனின் மனத்திற்குள்ளே இருக்கும் கொடிய விரோதத்தை, முகத்தினுல் அறியலாம் - அவனது முகக்குறிப்பினுல் உணரலாம், மாநிலம் பூடுகள் எல்லாம் - பெரிய நிலத்துப்பூண்டு வகைராக்கள் எல்லாம் செழிப்புடன் வளரும் விதத்தை, மழையினுல் அறியலாம் - பொழிந்த மழையின் அளவினுல் தெரிந்து கொள்ளலாம், நல்லார் பொல்லார் தம்மை - இவர் நல்லவர் இவர் தீயவர் என்பதை, மக்களால் அறியலாம் - அவர் புத்திரர்களால் அறிந்து கொள்ளலாம், கனம் மருவு சூரரை - பெருமை பொருந்திய சூரவீரரின் ஆண்மையை, சமரினுல் அறியலாம் - அவர் செய்யும் போர்த்திறனுல் தெரிந்து கொள்ளலாம், கற்ற ஒரு வித்துவானை - நூல்களை ஓதி உணர்ந்த பண்டிதன் திறமையை, கல்வி பிரசங்கத்தினுல் அறியலாம் - அவன் கல்வி சம்பந்தமாகச் செய்யும் பிரசங்கத்தின் மூலமாகக் கண்டு கொள்ளலாம், குணங்

களை நடையினல் அறியலாம் - அவரவர் குணங்களை நடைக்கையினல் காணலாம், தனது அகம் அடுத்தது பளிங்கினல் அறியலாம் - தன்னுடைய மனத்தில் உள்ளதைக் கண்ணுடியில் முகம் பார்த்துத் தெரிந்துக் கொள்ளலாம், சாதி சொல்லால் அறியலாம் - அவனவன் மரபு இன்னவகைத் தென்பதைச் சொல்லும் சொற்களின் தன்மையால் அறிந்து கொள்ளலாம், தரும் நீதி கேள்வியால் அறியலாம் - சாஸ்திரங்களால் போதிக்கப்பெறும் நீதிகளின் தன்மைகளைப் பெரியோரிடம் கேட்டறியலாம், பிணிகளைத் தாதுக்களால் அறியலாம் - நோய்களின் தன்மையை நாடிகளைப் பரிசோதித்து உணரலாம், வனச விகசித வதன - தாமரைமலர் போன்று மலர்ந்துள்ள திருமுகத்தை யுடையவனே !, பரிபூரண ஆனந்த - மிகவும் நிறைந்துள்ள ஆனந்த வடிவமானவனே !, வால வடிவான வேலா - குழந்தை வடிவமானவனும் வேலாயுதம் படைத்தவனும் ஆன முருகப் பிரானே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) மனதிற் கடும்பகை முகத்தினல் அறியலாம்; தனதகம் அறிந்தது பளிங்கினல் அறியலாம் என்னும் இரண்டையும்,

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்"

என்னும் திருக்குறள் வாக்கியத்தோடு ஒப்பிட்டு நோக்குக.

## 39. குணம் மாறுமை

குணமிலாத் துஷ்டமிரு கங்களையு நயகுணங்
கொண்டுட் படுத்தி விடலாங்
கொடியபல விடநோய்க ளியாவுமௌ ஷதமது
கொடுத்துத் திருப்பிவிடலாம்
உணர்விலாப் பிரமராட் சசமுதற் பேய்களை
யுகந்துகூத் தாட்டி விடலா
முபாயத்தி னாற்பெரும் பறவைக்கு நற்புத்தி
யுண்டாக்க லாமுயிர் பெறப்
பிணமதை யெழுப்பலா மக்கினி சுடாமற்
பெரும்புன லெனச்செய்ய லாம்
பிணியையு மகற்றலாங் காலதூ துவரையும்
பின்புவரு கென்று சொலலாம்
மணலையுங் கயிறாத் திரிக்கலாங் கயவர்குண
மட்டுந் திருப்ப வசமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) குணம் இல்லா(த) துஷ்ட மிருகங்களையும் - நல்ல குணம் இல்லாத மூர்க்க விலங்குகளையும், நயம் குணம் கொண்டு உட்படுத்திவிடலாம் - இனிமையான குணத்தினால் நம் வசம் ஆக்கிவிடலாம், கொடிய பல விஷம் நோய்கள் யாவும் - பல கொடிய விஷங்களையும் பல கொடிய

வியாதிகளையும் எல்லாம், ஔஷதமது கொடுத்துத் திருப்பி விடலாம் - மருந்து தந்து குணமாக்கிவிடலாம், உணர்வு இல்லா(த) பிரம்ம ராக்ஷசி முதல் பேய்களை - அறிவு இல்லாத பிரம்மராக்ஷசி முதலிய பிசாசுகளையும், உகந்து கூத்தாட்டிவிடலாம் - களித்து ஆட்டம் ஆடச்சொல்லலாம், உபாயத்தினால் பெரும் பறவைக்கும் நற்புத்தி உண்டாக்கலாம் - தந்திரத்தினால் கிளி முதலிய பெருமை பெற்ற பக்ஷிகளுக்கும் நல்ல அறிவு ஊட்டி விடலாம், உயிர் பெற பிணம் அதை எழுப்பலாம் - பிணத்திற்கு உயிர் கொடுத்து எழுப்பி விடலாம், அக்கினி சுடாமல் பெரும் புனல் எனச் செய்யலாம் - நெருப்பைச் சுடாமல் குளிர்ந்து பெரிய தண்ணீர் போல் இருக்கும்படி செய்யலாம், பிணியையும் அகற்றலாம்- பிறவிநோயையும் நீக்கி விடலாம், கால தூதுவரையும் பின்பு வருக என்று சொல்லலாம் - உயிர் பிடிக்க வரும் எமதூதர்களையும் சில நாட்கள் கழித்து வருவீராக என்று சமாதானப்படுத்தி அனுப்பி விடலாம், மணலையும் கயிரா(க) திரிக்கலாம்—, கயவர் குணம் மட்டும் திருப்ப வசமோ - கீழ்மக்கள் குணத்தை மட்டும் மாற்றுவது நம்மால் ஆகுமோ? (ஆகாது), மயிலேறி—, எ - று.

## 40. இத்திக்குணத்தோர் இவ்விலங்கு போல்வரெனல்

தான்பிடித் ததுபிடிப் பென்றுமே லவர்புத்தி
 தள்ளிச்செய் வோர் குரங்கு

சபையிற் குறிப்பறிய மாட்டாம னின்றவர்
தாம்பய னிலாத மரமாம் [ரு
வீம்பினு லெளியவரை யெதிர்பண்ணி நிற்குமொ
வெறியர்குரை ஞமலி யாவார்
மிகநாடி வருவோர் முகம்பார்த் திடாலோபர்
மேன்மையில் லாத கழுதை
சோம்பலொடு பெரியோர் சபைக்குட் படுத்திடுந்
தூங்கலே சண்டிக் கடா
சூதுட னடுத்தோர்க் கிடுக்கணே செய்திடுந்
துஷ்டனே கொட்டு தேளாம்
மாம்பழந் தனைவேண்டி யந்நாளி லீசனை
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) தான் பிடித்தது பிடிப்பு என்று - தான் பற்றியதே பற்று என்று நினைத்து, மேலவர் புத்தி தள்ளி செய்வோர் குரங்கு - பெரியவரின் ஆலோசனையை உதா சினஞ் செய்து விட்டுத் தாம் நினைத்ததையே செய்பவர் குரங்குக்குச் சமானமாவார், சபையில் குறிப்பு அறிய மாட் டாமல் நின்றவர் - கற்றவர் சபையில் சிறுசீட்டும் படிக்க முடியாமல் நின்றவர், பயன் இல்லாத மரம் ஆம் - பழம் பழுக்காத மரத்திற்கு ஒப்பாவார், வீம்பினுல் எளியவரை எதிர்பண்ணி நிற்கும் ஒரு வெறியர் - செருக்கினுல் ஏழை

மக்களை எதிர்த்து நிற்கும் ஒப்பற்ற மயக்கமுடையவர், குரை ஞமலி ஆவார் - குரைக்கும்படியான நாய்போன்றவர் ஆவார், மிக நாடி வருவோர் முகம் பார்த்திடா(த) உலோபர் - வறுமையால் பொருளை மிகவும் விரும்பி வரும் தரித்திரர்களை முகம்பார்க்காதிருக்கும் உலோபிகள், மேன்மை இல்லாத கழுதை - பெருமை இல்லாத கழுதை அனையர் ஆவார், சோம்பலோடு பெரியோர் சபைக்குள் படுத்திடும் தூங்கலே - கற்ற பெரியவரின் சபையில் சோம்பலுடன் படுத்துக்கொள்ளும் தூங்குமூஞ்சியே, சண்டிக்கடா - முரட்டுக்கடாவுக்குச் சமானமாவான், அடுத்தோர்குச் சூதுடன் இடுக்கணே செய்திடும் துஷ்டனே - தன்னை வந்து அடுத்தவர்களுக்குத் துன்பத்தையே செய்யும் தீயவனே, கொட்டு தேள் ஆம் - கொட்டுதலையே தொழிலாகவுடைய நஞ்சுடைய தேளுக்கு ஒப்பாகும், மாம்பழம் தன்னை வேண்டி அந்நாளில் - மாம்பழத்தைத்தான் பெற விரும்பி அந்த நாளில், ஈசனை வலமாக வந்த முருகா - பரம சிவனை வலம் வந்த முருகப்பிரானே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) தான் பிடித்தது பிடிப்பென்று....குரங்கு, தான் கொண்ட கருத்தே சரி எனச் சலஞ்சாதித்தல்; "குரங்குப்பிடி," "மர்க்கடமுஷ்டி" என்றும் வழங்குவதைக் காண்க.

சபையில் குறிப்பறிய மாட்டாமல் நின்றவர்................ இதனை, 'சபை நடுவே நீட்டோலை வாசியாதவன் குறிப்பறிய மாட்டாதவன் மரம்' என்பதனோடு ஒப்பிட்டு நோக்குக.

மாம்பழம் வரலாறு:—தமக்கு நாரதமுனி ஓர் மாம் பழம் கொடுக்கவும் அதனைப் பரமசிவனார் விநாயகர் முருகர் இருவருக்கும் எவ்விதம் கொடுப்பது என்று ஆலோசித்து "யார் உலகைச் சீக்கிரம் வலம்வருகின்றனரோ அவருக்குப் பழம்" என்று அருளிச் செய்ய முருகப்பிரான் மயிலேறி உலகத்தை வலம் வரத் தொடங்கினார். விநாயகரோ உடனே எழுந்து பரமசிவனாரை மட்டும் வலமாக வந்து மாங்கனி பெற்றனர்.

## 41. அற்பர் வாழ்வால் குணம் வேறுபடுதல்

அற்பர்க்கு வாழ்வுசற் றதிகமா னால்விழிக்
கியாவருரு வுந்தோன் றிடா
தண்டி நின் றேநல்ல வார்த்தைக ளுரைத்தாலு
மவர்செவிக் கேறி டாது
முற்பக்ஷ மானபேர் வருகினும் வாருமென
மொழியவும் வாய் வராது
மோதியே வாதப் பிடிப்புவந் ததுபோல
முன்காலை யகல வைப்பார்
விற்பன மிகுத்தபெரி யோர்செய்தி சொன்னாலும்
வெடுவெடுத் தேசி நிற்பார்
விருதா மகத்துவப் பேயது சவுக்கடி
விழும்போது தீரு மென்பார்
மற்புயந் தனினீப மாலையணி லோலனே
மார்பனே வடிவேல வா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) அற்பர்க்கு வாழ்வு சற்று அதிகமானல் - அற்பருக்குச் சிறிது ஐஸ்வரியம் அதிகமானல், விழிக்கு யாவர் உருவும் தோன்றிடாது - கண்ணுக்கு, எவருடைய ரூபமும் காணப்படாது (தலைகால் தெரியாது), அண்டி நின்று நல்ல வார்த்தைகள் உரைத்தாலும் - அந்த அற்பருக்கு அருகே நின்று நல்ல நீதி மொழிகள் சொன்னலும், அவர் செவிக்கு ஏறிடாது - அவருடைய காதுகளில் நுழையாது, முன் பக்ஷமான பேர் வருகினும் - முன்னே அன்புடைய சினேகிதர் வந்தாலும், வாரும் என மொழியவும் வாய் வராது - வாருங்கள் என்று சொல்லவும் மாட்டார்கள், வாதம் பிடிப்பு வந்தது போல - வாதநோய் வந்தது போலவே, மோதிய முன் காலை அகல வைப்பார் - முன்னங் காலை மோதி மோதி அகலமாக வைப்பார், விற்பனம் மிகுத்த பெரியோர் செய்தி சொன்னலும் - கல்வி அறிவு மிகுந்த பெரியவர்களின் விஷயம் உரைத்தாலும், வெடுவெடுத்து ஏசி நிற்பார் - கடுகடுத்துத் திட்டி நிற்பார்கள், விருதா மகத்துவப் பேய் அது - வீணன பெரிய பிசாசானது, சௌக்கடி விழும்போது திரும் என்பர் - சாட்டை அடி விழும்போது நீங்கிவிடும் என்று சொல்லுவார் (பலாத்காரம் நிகழ்ந்தால் அற்பர் வழிக்கு வருவர் என்பதாம்), மல்புயம்தனில் நீப மாலை அணி லோலனே - மற்போருக்கு உரிய தோளில்

கடப்பமாலை அணிந்திருக்கும் லீலாவினோதனே, மார்பனே- அழகிய மார்பையுடையவனே !, மயிலேறி—, எ - று.

## 42. இத்தீங்குளோர் இக்கோள் போல்வரெனல்

அன்னைதந் தையர்புத்தி கேளாத பிள்ளையோ
வஷ்டமச் சனியாகு வான்
அஞ்சாம லெதிர்பேசி நிற்குமனை யாள்வாக்கி
லங்கார கச்சன்ம மாம்
தன்னைமிஞ் சிச்சொன்ன வார்த்தைகே ளாவடிமை
சந்திராஷ் டகமென்ன லாம்
தன்பங்கு தாவென்று சபையேறுந் தம்பியோ
சார்ந்தசன் மச்சூரி யன்
நன்னயமி லாதவஞ் சனைசெய்த தமயன்மூன்
ருமிடத் தில்வியா ழம்
நாடோறும் விரோதமிடு கொண்டோன் கொடுத்
ராகுகே துக்க ளெனலாம் [துளோன்
மன்னையனை யன்றுசிறை தனிலிட்டு நம்பற்கு
மந்திர முரைத்த குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) அன்னை தந்தையர் புத்தி கேளாத பிள்ளையோ - தாய் தகப்பன் புத்திமதிகளைக் கேட்டு நடவாத புத்திரனே, அஷ்டம சனி ஆகுவான் - அஷ்டமத்தில்

சனியை ஒப்பாவான், அஞ்சாமல் எதிர் பேசி நிற்கும் மனையாள் - பயப்படாமல் எதிர்த்து நின்று பேசி நிற்கும் மனைவியானவள், வாக்கு அங்காரகச் சன்மம் ஆம் - வாக்கில் அங்காரகச் சன்மத்திற் கொப்பாகும், தன்னை மிஞ்சிச் சொன்ன வார்த்தை கேளா(த) அடிமை - தொழில் கொடுப்பான் சொல்லும் பேச்சு கேளாதவனும் தன்னை மீறி நடப்பவனும் ஆகிய அடிமை, சந்திராஷ்டகம் என்னலாம் - சந்திராஷ்டகத்திற்குச் சமானம் என்று சொல்லலாம், தன் பங்கு தா என்று சபை ஏறு தம்பியோ - என்னுடைய பங்கு எனக்குக் கொடு என்று அண்ணனோடு மாறுபட்டு ஊரார் சபைமுன் ஏறும் தம்பியோ, சார்ந்த சன்மச் சூரியன் - பொருந்திய சன்மச் சூரியன் போன்றவன் ஆவான், நல் நயம் இல்லாத வஞ்சனை செய்த தமையன் - நல்ல அன்பு இல்லாது சதி செய்த முன்பிறந்தவன், மூன்றும் இடத்தில் வியாழம் - மூன்றும் இடத்தில் வியாழனுக்குச் சமானம் ஆவான், நாள்தோறும் விரோதமிடு கொண்டோன் கொடுத்துளோன் - தினந் தவறாது பகைத்துச் சண்டையிடும் பெண்கொடுத்தவனும் பெண்கொண்டவனும் ஆகிய சம்பந்திகள் இருவரும், இராகு கேதுக்கள் என்னலாம் - இராகு கேதுக்கள் என்று சொல்லலாம், மன் அயனை அன்று சிறைதன்னில் இட்டு நம்பற்கு மந்திரம் உரைத்த குருவே - நிலைபெற்ற பிரம்மதேவனை (பிரணவப் பொருள் சொல்லாத) அந்த நாளில் மலைக்குகையில் சிறை வைத்துச் சிவபிரானுக்குப் பிரணவப்பொருள் உபதேசித்த சற்குரு மூர்த்தியே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) அஷ்டம சனி, சந்திர இலக்கினத்திற்கு எட்டாவது ஸ்தானத்தில் சனீஸ்வரன் இருப்பது.

பலன் :—இரஷபம், துலாம், மகரம், கும்பம் இவைகளைத் தவிர்த்து இதர இலக்கினங்களில் ஏற்படும் அஷ்டம சனி துன்பத்தைக் கொடுக்கும்.

வாக்கில் அங்காரகச் சன்மம், ஜனன இலக்கினத்திற்கு இரண்டாவது வீடாகிய இலக்கினஸ்தானத்தில் அங்காரகன் இருப்பது.

பலன்:—ஜாதகன் இலக்ஷியமில்லாமல் கெட்டவார்த்தைகள் பேசுவான்.

சந்திராஷ்டகம், சந்திரனுக்கு எட்டாவது வீடு. சந்திரனுக்கு எட்டாவது வீட்டிற்கு உடைய கிரகம் தன் வீட்டுக்குரியவரா யில்லாமலும் பகையாளியாயிருந்தாலும் ஏற்படும் துன்பம் சொல்ல முடியாது.

சன்மச் சூரியன், சன்ம இலக்கினத்தில் சூரியன் இருப்பது.

பலன் :—உடல்நோயும் மனோவேதனையும் உண்டாகும்.

மூன்றும் இடத்தில் வியாழம், இலக்கினத்திற்கு மூன்றுவது வீட்டில் குரு இருப்பது.

பலன் :—நற்பயனை கொடுப்பது கஷ்டம்.

ராகு கேது, எப்போதும் ஒருவருக்கொருவர் ஏழாவது ஸ்தானங்களில் எதிரெதிராக இருப்பது.

பலன்:—இலக்கினத்தைப் பொருத்தியது. காயமான ஸ்தானம் உடையவர் அன்று. எந்தச் சமயத்தும் ஒரு வீட்டில் ராகுவும் கேதுவும் தங்குவதில்லை; எப்போதும் எதிராகவே இருப்பர். இந்த நிலையையே எப்போதும் பகைக்கும் சம்பந்திகளுக்கு ஒப்பிட்டார்.

## 43. நல்லினஞ் சேர்பயன்

சந்தன விருக்ஷத்தை யண்டிநிற் கின்றபல
 தருவுமவ் வாசனை தருந்
 தங்கமகமேருவை யடுத்திடுங் காக்கையுஞ்
 சாயல்பொன் மயமே தரும்
பந்தமிகு பாலுடன் விளாவிய தண்ணீரெலாம்
 பால்போ னிறங்கொடுக் தும்
 படிகமணி கட்குளே நிற்கின்ற வடமுமப்
 படியே குணங்கொடுக் கும்
அந்தமிகு மரகதக் கல்லைத் தரித்திடி
 லடுத்ததும் பகமை யாகு
 மானபெரியோர்களொடு சகவாச மதுசெயி
 லவர்கள்குணம் வருமென்பர்காண்
மந்தர நெடுங்கிரியின் முன்கடல் கடைந்தவரி
 மருகமெய்ஞ் ஞான முருகா
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேச னே.

(இ - ள்) சந்தன விருக்ஷத்தை அண்டி நிற்கின்ற - சந்தன மரத்தை அடுத்து வளர்ந்து நிற்கும், பல தருவும் அவ்வாசனை தரும் - பல மரங்களும் அதே சந்தன வாசனையைக் கொடுக்கும், தங்க மகமேருவை அடுத்திடும் - பொன்மயமான மகா மேருகிரியை அணுகும், காக்கையும் சாயல் பொன்மயமே தரும் - காக்கையின் வர்ணமும் பொன் வர்ணமாகவே இருக்கும், பந்தம் மிகு பாலுடன் விளாவிய தண்ணீரெல்லாம் - ஆவலைப் பெருக்கும் பாலுடன் கலந்த தண்ணீர் எல்லாம், பால்போல் நிறங் கொடுக்கும் - பாலைப் போலவே வெண்மை வர்ணங் கொள்ளும், படிக மணிகட்குள்ளே நிற்கின்ற வடமும் - பளிங்கு மணிகளுக்குள்ளே இருக்கும் நூல் வடமும், அப்படியே குணங் கொடுக்கும் - அவ்விதமாகவே வெண்மை வர்ணம் கொள்ளும், அந்தம் மிகு மரகதக் கல்லைத் தரித்திடில் - அழகு மிகுந்த பச்சைக்கல்லை அணிந்தால், அடுத்ததும் பசுமை ஆகும் - அக் கல்லை நெருங்கும் வஸ்துவும் பச்சைவர்ணம் ஆகும், மான பெரியோர்களோடு சகவாசம் அது செயில் - மானம் மிகுந்த பெரியவர்களுடன் நட்பு பாராட்டிக் கூடி வாழ்ந்தால், அவர்கள் குணம் வரும் என்பர் - அப்பெரியோரின் நற்குணங்களே அடையப் பெறுவோம் என்று அறிவுடையோர் கூறுவர், மந்தரம் நெடுங்கிரியின் முன் கடல் கடைந்த அரி மருக - மந்தரமாகிய நீண்ட மலையை மத்தாக்கி முன்னொருகாலத்தில் தேவர்க்காகப் பாற்கடல் கடைந்த திருமாலின் மருமகனே!, மெய்ஞ்ஞான முருகா -

மெய்ஞ்ஞான சொரூபியான முருகனே!, மயிலேறி—, எ - று.

## 44. வலியோரையும் ஊழ்விடாமை

அன்றுமுடி சூடுவ திருக்கரகு ராமன்மு
 னருங்கா டுரைந்த தென்ன
வண்டரெல் லாமமிர்த முண்டிடப் பரமனுக்
 காலம் லபித்த தென்ன
வென்றிவரு தேவர்சிறை மீட்டநீ களவில்வே
 டிச்சியைச் சேர்ந்த தென்ன
மேதினி படைக்குமய னுக்கொரு சிரம்போகி
 வெஞ்சிறையி லுற்ற தென்ன [ன
என்றுமொரு பொய்சொலா மன்னவன் விலைபோ
 தென்னகாண் வல்லமையி ஞ
லெண்ணத்தி ஞலொன்றும் வாராது பரமசிவ
 னெத்தனப் படிமுடியு மாம்
மன்றுதனி னடனமிடு கங்கா தரன்பெற்ற
 வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேச னே.

(இ - ள்) அன்று முடி சூடுவது இருக்க - அக்காலத்தில் மகுடாபிஷேகம் செய்து கொள்வதா யிருக்கையில், இரகுராமன் முன் அருங்காடு உறைந்த தென்ன - இரகு

குலத்தில் உதித்த இராமபிரான் முற்காலத்தில் (புலி கரடி முதலியவை வசிக்கும் கடத்தற்கு) அரிய காட்டில் வசித்தது என்ன காரணம் பற்றி? (விதியினால்), அண்டர் எல்லாம் அமிர்தம் உண்டிட - தேவர்கள் எல்லாம் அமுதத்தைச் சாப்பிட, பரமனுக்கு ஆலம் லபித்தது என்ன - பரமசிவனுக்கு விஷமே கிடைத்தது என்ன காரணத்தால்? (விதியினால்), வென்றி வரு தேவர் சிறை மீட்ட நீ - தேவர்களைச் சூரபதுமன் இட்ட சிறையினின்றும் விடுவித்த வெற்றி பொருந்திய முருகக்கடவுளாகிய நீ, வேடிச்சியைக் களவில் சேர்ந்த தென்ன - வேடவர் குலத்து வளர்ந்த வள்ளிநாயகியாரைக் கள்ள முறையில் மணம் புணர்ந்தது எக்காரணத்தால்? (ஊழினால்), மேதினி படைக்கும் அயனுக்கு ஒரு சிரம் போகி - உலகங்களைச் சிருட்டிக்கும் பிரம்மனுக்கு ஒரு தலை போனதுடன், வெஞ் சிறையில் உற்ற தென்ன - உன்னால் கொடிய சிறையில் பட்ட தெக்காரணம் பற்றி? (விதிப்பயன்), என்றும் ஒரு பொய் சொல்லா(த) மன்னவன் - எந்த நாளிலும் ஒரு பொய் வார்த்தையும் சொல்லி அறியாத அரிச்சந்திர மன்னன், விலைபோகியது என்ன - தோட்டிக்கு அடிமையாக விற்கப்பட்ட தென்ன காரணம்பற்றி? (ஊழ்), (ஆதலின்) வல்லமையினால் - பராக்கிரமத்தாலும், எண்ணத்தினால் - ஆராய்ச்சியினாலும், ஒன்றும் வராது - ஒன்றும் சித்திக்காது, (எல்லாம்), பரமசிவன் எத்தனப்படி முடியும் ஆம் - பரமசிவனின் கருத்துப் பிரகாரம் ஏற்படுவதாகும், மன்று தனில் நடனம் இடு கங்காதரன் பெற்ற வர புத்ர - பொன்

னம்பலத்தில் ஆனந்தக் கூத்திடும் கங்கையைச் சிரசில் தரித்த சங்கரபிரான் பெற்றெடுத்த மேன்மையான மகனே!, வடிவேலவா - கூர்மையான வேலாயுதம் படைத்தவனே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) இரகு, ரகுமகாராசன் ; இந்திரனும் உட்படும்படி திக்விஜயம் செய்தவன். இவன் பெயரால் சூரிய வம்சத்திற்கு 'ரகுகுலம்' என்று வழங்குகின்றது. இக் குலத்துதித்த ராமன் ரகுராமன் எனப்படுகின்ருன்.

ராமன் - தனது அழகாலும் குணத்தாலும் பிறரை ரமிக்கச் செய்பவன். ராமனைப் பற்றியதே இராமாயணம். இதிகாசங்களுள் இதுவே மிகச் சிறந்தது.

திருமுடி சூடிக்கொள்ள விருக்கக் கைகேசி சூழ்ச் சியால் ஒரு வரத்தால் இராமன் காடேகவும் மற்ருெரு வரத்தால் பரதன் நாடாளவும் பெற்றனள். சிற்றன்னை விருப்பப்படி ராமன் பதினுன்கு வருடம் காடுறைந்தான்.

அமிர்தம் - (அ, மிருத்யு) சாகாமையைத் தரும் மருந் தாகும்.

ஆலம் :—மந்தரகிரியை மத்தாகவும் வாசுகியைக் கயி ருகவும் தேவரும் தானவரும் பாற்கடல் கடைய வாசுகி இளைத்து விஷம் கக்கினன். அதுதான் ஹாலம் என்பது. அது தேவர்கள் யாவரையும் பக்ஷிக்க வரும்போது பரம சிவன் அபயத்தம் அளித்துத் தான் பருகினன்.

கற்பொழுக்கம் களவொழுக்கம் என்ற இரண்டினுள் களவொழுக்கமாவது ஒத்த அழகு குணம் படைத்தவரும் மூப்பு பிணி இன்றி வேட்டல்மேல் செல்லும் தலைமகனும் புனங்காக்கும் தலைமகளும் கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றி ஒருமனப்பட்டு மணம் புணர்தல்.

பரமசிவனுக்கும் பிரம்மனுக்கும் முறையே ஐந்து சிரங்கள் இருந்தன. வித்தியாசம் உணரமாட்டாமைபின் பரமசிவன் பிரம்மனின் சிரங்களில் ஒன்றைக் கொய்தருளினன்.

## 45. பெரியோர் வாக்யபரிபாலனஞ் செய்தோர்

தந்தைதாய் வாக்யபரி பாலனஞ் செய்தவன்
தசரத குமார ராமன்
றமையனருள் வாக்யபரி பாலனஞ் செய்தோர்க
டருமனுக் கிளைய நால்வர்
சிந்தையி லுணர்ந்துகுரு வாக்யபரி பாலனஞ்
செய்தவ னரிச்சந் திரன்
றேகியென் றோர்க்கிலையெ னுவாக்ய பாலனஞ்
செய்தவன் றுன கன்னன்
நிந்தை தவிர் வாக்யபரி பாலனஞ் செய்தவ
னீள்பெல மிகுந்த வநுமா
னிறைவுடன் பத்தாவின் வாக்யபரி பாலன
நிலத்தின ளாயினி செய்தாள்

மந்தைவழி கோயில்குள மூங்குலவு தும்பிமுகன்
மகிழ்தர வுகந்த துணைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) தந்தைதாய் வாக்கிய பரிபாலனம் செய்தவன் - தாய்தந்தையர் சொன்ன சொற்படி நடந்தவன் தசரத குமார ராமன் - தசரத சக்கிரவர்த்தியின் திருக்குமாரனாகிய ஸ்ரீ ராமன் ஆகும், தமையன் அருள் வாக்கிய பரிபாலனம் செய்தோர் - தமையனாகிய தருமபிரானின் அருள் வகையால் பிறந்த வாய் மொழிப்படி நடந்தவர்கள், தருமனுக்கு இளைய நால்வர் - தருமனுக்குப் பின்பிறந்தவர்களாகிய, பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் என்ற நால்வராகும், சிந்தையில் உணர்ந்து - தன் மனத்தில் அறிந்து கொண்டு, குரு வாக்கிய பாலனஞ் செய்தவன் அரிச்சந்திரன் - தனது குருவாகிய வசிட்டன் (அரிச்சந்திரன் பொய் பேசி அறியான் என்று) சொன்ன சொல்லை, பாதுகாத்தவன் அரிச்சந்திர மன்னவன் ஆகும், தான கன்னன் - தனத்தில் சிறந்த கன்னன் என்பவன், தேகி என்றோர்க்கு - 'கொடு' என்று இரந்தவருக்கு, இல்லை என(த) வாக்கிய பரிபாலனஞ் செய்தவன் - இல்லை என்று சொல்லாத 'கொடுப்பேன்' என்ற வாக்கியத்தையே பாதுகாத்தவன் ஆகும், நீள் பலம் மிகுத்த அநுமான் - மிகுந்த பலம் படைத்த அநுமானவன், நிந்தை தவிர் வாக்கிப பரிபாலனம் செய்

தவன் - பழி நீங்கிய (பெரியோர்) வாய்ச் சொல்லைக் காப்பாற்றியவனாகும், நளாயினி - நளாயினி என்பவள், நிலத்தில் - இப் பூவுலகத்தில், நிறைவுடன் - கற்பு நிலையுடன், பர்த்தாவின் வாக்கிய பரிபாலனம் செய்தாள் - கணவனின் சொல்லைத் தவறாது காப்பாற்றியவ ளாவாள், மந்தை வழி - மந்தை வெளிகளிலும் வழிகளிலும், கோயில் குளம் - ஆலயங்களிலும் குளக்கரைகளிலும், குலவு தும்பி முகன் - விளங்கும்படி வீற்றிருக்கும் யானை முகம் உடைய விநாயகப் பிரானின், மகிழ்தர உகந்த துணைவன் - அவன் ஆனந்தப் படும்படி விளையாடிய திருத்தம்பியே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) ஸ்ரீ ராமன் :—தந்தையாகிய தசரத சக்கிரவர்த்தி சிற்றன்னைக்குத் தந்த வரங்கள் பிரகாரம் தம்பிக்கு நாடு கொடுத்துத் தான் பதினான்கு வருட காலம் காட்டில் வாசம் செய்தவன்.

தருமனுக்கு அடங்கிய நால்வர் :—முடிவுவரைத் தமையனாகிய தருமபிரான் கட்டளையிட்ட வண்ணமே நான்கு தம்பிமாரும் நடந்து வந்தனர். துரௌபதியைத் துயில் உறுஞ்சிய அந்த ஆத்திர மூட்டிய சந்தர்ப்பத்திலும் அண்ணன் மொழிப்படியே சினம் ஆறி இருந்தனர்.

இந்திரசபையில் எனது சிஷ்யன் அரிச்சந்திரன் சத்தியசந்தனன் என்று வசிட்டன் கூறிய மொழியைக் காப்பாற்றுவதற்காக அரிச்சந்திரன் விசுவாமித்திரர் செய்த தீங்குக்கெல்லாம் பின்னிடையாது நாடு அவனுக்குக் கொடுத்துக் காடு புகுந்து, காசி சென்று மனைவியைப்

பார்ப்பானுக்கு விற்றுத் தான் தோட்டிக்கு அடிமையாகிப் பிணஞ் சுட்டும் அவஸ்தைப் பட்டுக் கடைசியில் சுகம் பெற்றனன்.

சூரியன் அனுக்கிரகத்தால் குண்டலங்களோடு கன்னன் குந்திக்கு முதன் முதலாக அவதரித்தனன். கேட்டோருக்கு இல்லை என்னாது வரையாது கொடுத்து வந்த வள்ளல். இந்திரன் அந்தண வேடத்தில் வர அவன் விரும்பியபடியே குண்டலம் அறுத்துத் தந்தவன்; சாகுந் தருவாயில் அந்தண வடிவத்தில் வந்த கண்ணபிரானுக்குத் தன் புண்ணியபல முழுமையும் தானமாகத் தந்தவன்.

அனுமான் வாயுவுக்கும் அஞ்சனா தேவிக்கும் சங்கர அமிசமாக உதித்தவன். இராம தூதன். பலத்தில் இணையற்றோன். சுக்கிரீவ ஆணைப்படி தென்கடல் கடந்து ஜானகி இருப்பிடம் அறிந்து மீண்டும் வந்தவன்; இராம இராவண யுத்தத்தில் இருமுறை சஞ்சீவிமலை கொணர்ந்து இறந்த இலக்குமணனையும் வானரரையும் எழுப்பித் தந்தவன்.

நளாயினி:—தன் கணவனாகிய மௌத்கலியன் என்பவன் தன்னைப் பரிசோதிக்கும் வண்ணம் குட்டரோ யுடையவனாக அவனுக்குச் சிறிதும் அருவருப்பை உறாமல் பணிவிடை செய்து வந்தவள். அவன் தேகம் தீண்டப் பெற்ற ஓர் முனிவன் சூரியன் உதிப்பதற்குள் உன் கணவன் இறப்பதாக என்று சபித்தனும், “நான் கற்புடையவள் ஆயின் சூரியன் உதிக்காதிருக்கக் கடவது” என்று பணித்த

னள். அவ்விதமே சூரியன் உதிக்காமற் போகவே அனு சூயா தேவியின் வேண்டுகோளின்படி தன் சாபத்தை அவள் மீட்கப் புருஷன் இறந்தனன். மீண்டும் அனுசூயா தேவி தன் கற்பின் மகிமையால் அவனை எழுப்பித் தந்தனள்.

## 46. முயற்சியின் மிக்கது ஊழெனல்

வங்காள மேறுகினும் வாருகோ லொருகாசு
மட்டன்றி யதிக மாமோ
வானேறி யுயரப் பறந்தாலு மூர்க்குருவி
வண்ணப் பருந்தாகு மோ
கங்கா சலந்தன்னின் மூழ்கினும் பேய்ச்சுரைக்
காய்நல்ல சுரையாகு மோ
கடலுக்கு ணாழியை யமுக்கியே மொண்டிடிற்
கா ணுமோ நாழி தான்
ஐங்காத மோடினுந் தன்வினைக டன்னுடே
யடையாமல் நீங்கி விடுமோ
வாரிடஞ் சென்றாலும் வெகுதுலைகள் சுற்றினு
மமைத்தபடி யன்றி வருமோ
மங்காத செந்தமிழ்க் கொண்டுநக் கீரர்க்கு
வந்ததுயர் தீர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனிடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) வங்காளம் ஏறுகினும் வாருகோல் - கப்பலேறி வங்காள தேசம் சென்றாலும் துடைப்பக்கட்டை, ஒருகாசு மட்டன்றி அதிகமாமோ - ஒரு காசுமட்டும் விலையுடையதான துச்சப் பொருளாக அன்றி விலை யுயர்ந்த பொருளாகி விடுமோ? (ஆகாது), வான் ஏறி உயரப் பறந்தாலும் - ஆகாயத்தில் ஏறி மிக உயரப் பறந்தாலும், ஊர்க்குருவி வண்ணப் பருந்தாகுமோ - ஊர்க்குருவியானது அழகான பருந்தாகுமோ?, கங்காசலந் தன்னில் மூழ்கினும் - கங்கையாற்று நீரில் மூழ்கினாலும், பேய்ச்சுரைக்காய் நல்ல சுரையாகுமோ—, கடலுக்குள் நாழியை அமுக்கியே மொண்டிடில் - மிக்க நீருள்ள சமுத்திரத்தில் படியை அழுத்தி மொண்டாலும், நால் நாழி காணுமோ - நான்கு நாழி ஜலம் கொள்ளுமோ?, ஐங்காதம் ஓடினும் - ஐந்து காதவழி ஓடினாலும், தன் வினைகள் - தனது தீவினைப் பயன்கள், தன்னோடே அடையாமல் - தன்னுடனேயே கூடி இருக்காமல், நீங்கிவிடுமோ—, ஆரிடம் சென்றாலும் - எத்தகைய பலவான்களிடம் சென்று அடுத்தாலும், வெகு தொலைகள் சுற்றினும் - நீண்ட தூரங்கள் சுற்றித் திரிந்தாலும், அமைத்தபடி அன்றி வருமோ - கடவுள் அவரவர்க்கு இன்னபடி என்று விதித்த பிரகாரம் அல்லாமல் வேறு வருமோ? (வராது), மங்காத செந்தமிழ் கொண்டு - குறையாத செந்தமிழ்க் கவிமாலையை ஏற்று, நக்கீரர்க்கு வந்த துயர் தீர்த்த முருகா - நக்கீர தேவர்க்கு அடுத்த துன்பத்தை நீக்கிய முருகனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) நக்கீரர் துயர் தீர்த்த வரலாறு:—சிவ பிரானோடு மாறு கொண்டதால் குட்ட நோய் உற்ற சங்கப் புலவருள் முதன்மை பெற்றவராகிய நக்கீரர் சாப விமோசனம் வேண்டக் "கைலை தரிசனம் தீர்க்கும்" என்று அருளிச் செய்தனன். நக்கீரர் கைலை நாடிச் செல்லும் வழியில் சிவத்தியானத்தில் மனம் தவறியதால் ஓர் பூதம் பிடித்துச் சிறையிலிட்டது. அதுபோலவே முன்னர் தவறிய புலவருடன் சேர்த்து ஆயிரம் ஆகலும் அனைவரையுந் தின்ன வெளிச்சென்று வருவதாகச் சென்றது. புலவரின் திக்கற்ற நிலைகண்டு நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடி யருளினர். உடனே மயிலேறி முருகன் வந்து வேல்விடப் பூதம் ஒழிந்தது. நக்கீரரைக் "காளத்தி சென்று மூழ்குக. கைலைத் தரிசனம் கிட்டும்" என்று அருளிச்செய்து போந்தனர். அதன்படி சென்று காளத்தியில் மூழ்கிக் கைலைத்தரிசனம் பெற்றுக் குட்டம் நீங்கப் பெற்றனர்.

## 47. இடும்பால் அழிவு

சூரபத் மன்பெலமு மிராவணன் றீரமுந்
துடுக்கான கஞ்சன் வலியுந்
துடியான விரணியன் வரப்ரசா தங்களுந்
தொலையாத வாலி திடமும்
பாரமிகு துரியோத ஞதிநூற்று வாது
பராக்கிரம மது கைடவர்
பாரிப்பு மாபெலித ஞண்மையுஞ் சோமுகன்
பாங்கிலுறு வல்லமைக ளும்

ஏரணவு கீசகன் கனதையுந் திரிபுர
 ரெண்ணமுந் தக்க னெழிலு
மிவர்களது சம்பத்து நின்றவோ வவரவ
 ரிடும்பா லழிந்த தன்றோ
மாரனைக் கண்ணு லெரித்தருள் சிவன்றந்த
 வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேச னே.

(இ-ள்) சூரபத்மன் பலமும் - சூரபன்மனுடைய வலிமையும், இராவணன் தீரமும் - இலங்கைக் கதிபதியாகிய இராவணேஸ்வரனின் வீரமும், துடுக்கான கஞ்சன் வலியும் - தீயவனாகிய கம்சனின் பலமும், துடியான இரணியன் வரப்பிரசாதங்களும் - மேன்மை பொருந்திய இரண்யாசுரன் பெற்ற வரங்களும், வாலி தொலைபாத திடமும் - குரங்காகிய வாலியின் அழியாத வல்லமையும், மிகு பார துரியோதனதி நூற்றுவரது பராக்கிரமமும்-பூமிக்கு மிகுந்த பாரம் எனக் கருதத் தகுந்த இழிவுகுணம் படைத்த துரியோதனன் உள்ளிட்ட நூறு சகோதரர்களின் சக்தியும், மதுகைடவர் பார்ப்பும் - மதுகைடவர்களின் பெருமையும், மாவலிதன் ஆண்மையும் - மஹாபலிச் சக்கிரவர்த்தியின் தீரமும், சோமுகன் பாங்கில் உறு வல்லமைகளும் - சோமுகாசுரன் இடத்து மிகுந்திருந்த சக்திகளும், திரிபுரர் எண்ணமும் - திரிபுராதிகள் உலகங்களை அழிக்கவேண்டும்

என்று கொண்டிருந்த கெட்ட நோக்கமும், தக்கன் எழி லும் - தக்ஷமுனிவனுடைய செருக்கும், இவர்களது சம்பத் தும் - மேற்சொன்னவர்களின் செல்வம் நிறைந்த வாழ்வு களும், இடும்பால் அழிந்த அன்றோ - தீமையால் கெட் டொழிந்தன அல்லவா ? ( ஆம் ), மாரனைக் கண்ணால் எரித் தருள் சிவன் - மன்மதனை நெற்றிக்கண்ணால் எரித்தவனாகிய சிவபிரான், தந்த வரபுத்ர - பெற்றருளிய மேன்மை பொருந் திய திருக்குமாரனே !, வடிவேலவா - கூர்மையான வேற் படையை யுடையவனே ! மயிலேறி—, எ - று.

( வி - ரை ) காசிபமுனிக்கும் மாயாதேவிக்கும் பிறந்த சூரபதுமன் வரமகிமையால் தேவர்களை வென்று ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஒருவன்தானே ஆண்டு தேவர்க்கும் முனிவர்க்கும் இடுக்கண் செய்துவந்தான். அவனை முருகப்பிரான் தொலைத்தருளினான்.

யாவராலும் வெல்லற்கரிய வரமும் முக்கோடி வாழ் நாளும் பெற்றவன் இராவணன். திரிலோகங்களையும் வென்றவன். கைலையை எடுத்தவன். அவன் இராமன் மனைவியாகிய சீதாதேவியை நச்சித் தூக்கிச்சென்ற இடும் பால் இராமபிரானால் அழிவுற்றான்.

காலநேமியின் அம்சமே கம்சன். கிருஷ்ணமூர்த்தி யின் மாமன். அவன் உலகத்தாருக்குத் தீங்கு புரிந்து வந்தமையால் அவனையும் அவனுக்குத் துணையாக இருந்த அசுரரையும் கிருஷ்ணபிரான் அழித்தருளினான்.

எதனாலும் அழிவில்லை என்ற எல்லையற்ற வரம் பெற்று இரணியன் என்பவன் ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலையும் தானே கொண்டு எங்கும் தன் பெயரே வாழ்த்தப்பட வேண்டுமென்ற ஆணையும் செலுத்தி வந்தான். அவனை நரசிம்ம மூர்த்தியாகத் திருமால் அவதரித்துச் சம்மரித்தான்.

வாலி இந்திரன் மகன் குரக்குச் சன்மமுடையவன். எதிர்த்தோர் பலம் பாதி தனக்காகும் என்ற வரமும் மஹா பராக்கிரமமும் பெற்றுத் தன் தம்பி சுக்கிரீவனின் உயிரை வாங்கவேண்டுமென்ற விரதமும் அவனுடைய மனைவியை அபகரித்த கொடுமையும் பூண்டதால் இராமபிரான் அவனை ஒழித்தனன்.

துரியோதனாதி நூற்றுவரையும் பீமன் கொன்றான்.

மதுகைடவர்கள் என்ற இரு அசுரர்களும் ஆதி தோற்றத்தினர். திருமாலிடம் சென்று பல காலம் சமர் புரிந்தனர்; அவனால் அழிவுற்றனர்.

மாவலி திரிலோகமும் வென்று நூறும் மகயாகம் செய்துகொண் டிருந்தான்; அது பூர்த்தியானால் இந்திர பதவி பெறுவான். தேவர்கள் முறையிடத் திருமால் வாமனரூபமாக வந்து மூன்றடி மண் பெற்று மண்ணை ஓரடியாலும் விண்ணை ஓரடியாலும் அளந்து மூன்றாவதால் அவனைப் பாதாளத்தில் அழுத்தினன்.

பிரம்மன் உறக்கத்தில் தோன்றிய சோமுகன் வேதங்களைக் களவாடிக் கடலுள் புகத் திருமால் மீன் வடிவங்கொண்டு அவனைக்கொன்று வேதங்களை மீட்டுவந்து அன்னவடிவனாய் அயனுக்கு மீண்டும் வேதம் உணர்த்தினான்.

விராடன் மைத்துனனாகிய கீசகன் வண்ணமகளாகிய துரௌபதியை விரும்பப் பீமசேனன் ஓர் இரவில் அவனையும் அவனுடைய உடன்பிறந்தார் நூற்றுவரையும் கொன்று தொலைத்தனன்.

தாருகனின் மக்களாகிய வித்யுன்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷகன் என்ற மூவரும் வரப்பலத்தால் பொன் வெள்ளி இரும்பு என்ற மூன்று லோகங்களால் முறையே மூன்றுகோட்டைகள் பெற்றனர். பறக்கும் இடங்களில் எல்லாம் உலகங்களை அழித்துவந்தனர், ஆதலின் சிவபெருமான் பூமியைத் தேராகவும் இதர இயற்கைப்பொருள் அனைத்தையும் உபகரணங்களாகவும் செய்து முக்கோட்டைகளையும் அவற்றிற்கு உரிய மூவரையும் சிரித்து எரித்தருளினான்.

பிரம்ம குமாரனாகிய தக்ஷமுனிவன் பரமசிவனுக்குச் சதிதேவியைக் கொடுத்தவன். சிவபிரானை அவமதிக்கப் பெரியதோர் வேள்வி இயற்றினன். சதிதேவி யாகத்தலம் சென்றபோது அவளைத் தக்ஷன் பெரிதும் அவமதித்தனன். அதனால் தீயில் தன்னுடல் எரித்துப் பின் மலையரையன் மகளாய்ப் பார்வதி என்ற திருநாமத்தோடு பொலிவுற்ற

னள். சிவபிரான் வீரபத்திரரைச் சிருட்டித்துத் தக்ஷனை அழித்தனர்.

கைலையில் சனகாதி நால்வருக்கும் யோகநிலை காட்டிக் கொண்டிருந்த காலத்து மலர்ப்பாணம் எய்த மன்மதனை நெற்றிக்கண்ணால் பரமசிவன் எரித்தனன். ரதிவேண்ட அவளுக்கு மட்டும் ரூபனாய் ஏனையோருக்கு அருவனாய் இருக்க அனுக்கிரகித்தனர்.

## 48. நட்பு நிலை

மாமதியின் முயலான ததுதேய் வுழித்தேய்ந்து
வளருமப் போது வளரும்
வாவிதனி லாம்பல்கொட் டிகளதணி னீர்வற்றின்
வற்றிடும் பெருகி லுயரும்
பூமருவு புதல்பூடு கோடையிற் றீய்ந்திடும்
பொங்குகா லந் தழைக்கும்
புண்டரிக மிரவிபோ மளவிற் குவிந்திடும்
போதுதய மாகின் மலரும்
தேமுடலி னைக்கிலுயிர் கூடவு மிளைக்குமது
தேறிலுயி ருஞ்சிறக் குஞ்
சேர்ந்தோர்க் கிடுக்கண து வந்தாலு நல்லோர்
சினேகமிப் படியாகு மே
வாமனசொ ரூபமத யானைமுக னுக்கிளைய
வாலகுரு பரவேல வா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) மாமதியின் முயலானது - பெரிய சந்திரனில் இருக்கும் முயற்கறையானது, அது தேய்வு உழி தேய்ந்து - அச் சந்திரன் குறையும் சமயத்தில் தானும் குறைந்து, வளரும்போது வளரும் —, வாவிதனில் ஆம்பல் கொட்டிகள் - குளத்தில் இருக்கும் ஆம்பற் கொடிகளும் கொட்டிப் பூண்டுகளும், அதனில் நீர்வற்றின் வற்றிடும் - அதனுடைய தண்ணீர் வற்றிப்போனால் தாமும் உலர்ந்து போகும், பெருகில் உயரும் - தண்ணீர் பெருகினால் தாமும் செழித்து வளரும், பூ மருவு புதல் பூடு கோடையில் தீய்ந்திடும் - பூமியில் பொருந்திய புற்பூண்டுகள் வெய்யிற் காலத்தில் தீய்ந்துவிடும், பொங்கு காலம் தழைக்கும் - மழை பெய்து பூமி செழிக்கும் சமயத்தில் அவையும் செழித்து வளரும், புண்டரிகம் இரவி போம் அளவில் - தாமரைப்பூ சூரியன் அத்தமிக்கும் சமயத்தில், குவிந்திடும் - இதழ்கள் குவிந்து போகும், போது உதயமாகில் மலரும் - மறுநாள் (சூரியன்) உதயமாகும்போது அப் பூ புஷ்பிக்கும், தேம் உடல் இளைக்கில் உயிர் கூடவும் இளைக்கும் - இனிய உடல் மெலிந்துபோனால் அதில் இருக்கும் உயிரும் மெலியும், அது தேறில் உயிரும் சிறக்கும் - அந்த வுடல் பலமடைந்தால் அதன் உயிரும் பலமடையும், சேர்ந்தோர்க்கு இடுக்கண் அது வந்தாலும் - தம்மை அடுத்தவர்களுக்குத் துன்பம் நேர்ந்தாலும், நல்லோர் சிநேகம் அப்

படியே யாகும் - பெரியோரின் நட்பு மேற்சொன்னவிதம் போலவே குறையாதிருக்கும், வாமன சொரூப மத யானை முகனுக்கு - சிறிய வடிவமுடையவனும் மதம் பொருந்திய யானையின் முகத்தை யுடையவனும் ஆகிய விநாயகக்கடவுளின், இளைய - தம்பியே !, வால குருபர - குழந்தை வடிவனான மேலான குருமூர்த்தியே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) சந்திரகளங்கம் முயல் என்னல் வழக்கு.

வாவிதனில் ஆம்பல் கொட்டிகள்..........., இதனை,

"அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோ
லுற்றுழித் தீர்வா ருறவல்ல—ரக்குளத்தில்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
யொட்டி யுறுவா ருறவு" —(வாக்குண்டாம்)

என்றதனோடு ஒப்பிட்டு நோக்குக.

கோடை - முதுவேனில், ஆனி, ஆடி.

## 49. கைப்பலனும் அவை

பருவத்தி லேபெற்ற சேயும் புரட்டாசி
பாதிசம் பா நடுகை யும்
பலமினிய வாடிதனி லானைவால் போலவே
பயிர்கொண்டு வரு கரும்பும்
கருணையொடு மிக்கநா ணயமுளோர் கையினிற்
கடனிட்டு வைத்த முதலுங்

காலமது நேரிற் றனக்குறுதி யாகமுன்
    கற்றுணர்ந் திடு கல்வியும்
விருதரச ரைக்கண்டு பழகிய சினேகமும்
    விவேகிகட் குபகார மாம்
வீணல்ல வினையெலாம் கைப்பலன் தாகவபி
    விர்த்தியாய் வருமென்பர் காண்
மருவுலா வியநீப மாலையுந் தண்டரள
    மாலையும் புனை மார்பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
    மலைமேவு குமரேச னே.

(இ-ள்) பருவத்திலே பெற்ற சேயும் - இளமைப் பருவத்தில் பெற்ற பிள்ளையும், புரட்டாசி பாதி சம்பா நடுகையும் - புரட்டாசி மத்தியில் சம்பாநெல் (நாற்று) நடுவதும், பலம் இனிய ஆடிதனில் - பலன் மிகவும் தரும்படியான ஆடிமாதத்தில், ஆனைவால்போலவே பயிர்கொண்டு வரு கரும்பும் - யானைவால் போலப் பருத்து வளர்ந்து வரும்படியான கரும்பும், கருணையொடு மிக்க நாணயம் உளோர் கையினில் - கருணையுடன் தவணை தவறாத நாணயமும் உள்ளவர் இடத்தில், கடன் இட்டு வைத்த முதலும் - கடனாகக் கொடுத்து வைத்த முதற்பொருளும், காலம் அது நேரில் - தக்க சமயம் வாய்க்கும்போது, தனக்குறுதி யாக முன் - தனது வாழ்விற்கு உறுதிப்பொருளாக முன்னமேயே, கற்றுணர்ந்திடு கல்வியும் - ஓதி அறியும்படி

யான கல்வியறிவும், விருது அரசரைக் கண்டு பழகிய சினேக மும் - கொடி குடை முதலிய விருதுகளையுடைய மன்ன ரைப் பார்த்து அவருடன் பழகிய நட்பும், விவேகிகட்கு உப காரமாம் - அறிவாளிகளுக்கு உதவியாயிருக்கும், இவை எல் லாம் வீணல்ல-மேற்சொன்ன இவை எல்லாம் பயனற்றவை அன்று ( பயன் உடையனவே ), கைப்பலனதாக - கைமேற் பலனாக ( நிச்சயமான பலனாக ), அபிவிர்த்தியாய் வரும் என்பர் - வளர்ந்து கொண்டே வரும் என்று சொல்லுவர் பெரியோர், மரு உலாவிய நீப மாலையும் - வாசனை பொருந்திய கடப்பமாலையும், தண் தரள மாலையும் - குளிர்ச்சி பொருந்திய முத்துமாலையும், புனை மார்பனே - அணிந்த மார்பை உடையவனே !, மயிலேறி—, எ - று.

## 50. சமயத்துக்கு உதவாதவை

கல்லாது புத்தகந் தனிலெழுதி வீட்டினிற்
கட்டிவைத் திடு வித்தையுங்
காலங்க ளுக்குதவ வேண்டுமென் றன்னியன்
கையிற் கொடுத்த பொருளும்
இல்லாளை நீங்கியே பிறர்பாரி சதமென்
றிருக்கின்ற குடி வாழ்க்கையு
மேறுமா றுகவே தேசாந் தரம்போ
யிருக்கின்ற பிள்ளை வாழ்வும்
சொல்லான தொன்றுமவர் மனமானதொன்றுமாச்
சொல்லும்வஞ் சகர் நேசமுஞ்

சுகியமா யுண்டென் றிருப்பதெல் லாந்தருண
துரிதத்தி லுதவாது காண்
வல்லான கொங்கைமட மாதுதெய் வானைகுற
வள்ளிபங் காள நேயா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கல்லாது - இளமைப்பருவத்தில் கற்காமல், புத்தகம் தன்னில் எழுதி - பயில வேண்டுவனவற்றைப் புத்தகங்களில் எழுதி, வீட்டினில் கட்டி வைத்திடு வித்தையும் - கட்டி வீட்டு மூலையில் பத்திரமாகத் திறந்து பார்க்காமலும் வைக்கும் கல்வியும், காலங்களுக்கு உதவ வேண்டும் என்று - தகுந்த ஆபத்துக் காலங்களில் உபகாரமாக வேண்டும் என்று உத்தேசித்து, அன்னியன் கையில் கொடுத்த பொருளும் - பிறர் வசம் ஒப்படைத்த செல்வமும், இல்லாளை நீக்கியே - தனது சொந்த மனைவியை விட்டுவிட்டு, பிறர் பாரி சதம் என்று இருக்கின்ற குடிவாழ்க்கையும் - அன்னியனின் மனைவியே நிலைபெற்ற உறுதியுடைய துணை என்று கருதி இருக்கும் குடும்பவாழ்க்கையும், ஏறுமாறாகவே தேசாந்தரம்போய் - தந்தை கூறும் நெறிக்கு விரோதமாய் ஊர்விட்டுப் பிறநாடுகள் சென்று, இருக்கின்ற பிள்ளை வாழ்வும் - அலைந்து கொண்டிருக்கும் மகனின் வாழ்க்கையும், சொல்லானது ஒன்றும் - வாயில் இருந்து வரும் சொல் ஒரு தன்மையாகவும், அவர் மனமானது ஒன்றுமாய் - அவரது மனத்தில் உள்ள எண்ணம் வேறொரு

தன்மையாகவும் இருக்கும்படி, சொல்லும் வஞ்சகர் நேசமும் - பேசுகின்ற கபடிகளின் நட்பும், சுகியமாய் உண்டென்று இருப்பதெல்லாம் - இன்பத்திற்குரிய பொருள்களாக இருக்கின்றவை என்று காணப்படுவதெல்லாம், துரித தருணத்தில் உதவாது - அவசர சந்தர்ப்பங்களில் உபகாரமாகாது, வல் ஆன கொங்கை - சூதாட்டுக் கருவி போன்ற ஸ்தனங்களையுடைய, மடமாது தெய்வானை குறவள்ளி - இளமை பொருந்திய மங்கையரான தெய்வ்யானையையும் குறவர் குலத்துதித்த வள்ளிநாயகியாரையும், பங்காள - இருபக்கத்திலும் வைத்திருப்பவனே !, நேயா - அவர் பால் சினேகமும் வைத்திருப்பவனே !, மயிலேறி—, எ - று.

## 51. திரும்பமாட்டாதவை

ஆடரவின் வாயினி லகப்பட்ட தவளையு
மானைவா யிற் கரும்பு
மரிதான கப்பலிற் பாய்மரக் காற்றினி
லகப்பட்டு மெலி காக்கையும்
நாடறிய வேதாரை வார்த்துக் கொடுத்தது
நமன்கைக்கு ளான வுயிரும்
நலமாக வேயணை கடந்திட்ட வெள்ளமு
நாய்வேட்டை பட்ட முசலும்
தேடியுண் பார்கைக்கு ளானபல வுடைமையுந்
தீவாதை யான மனையுந்

திரள்கொடுங் கோலரசர் கைக்கேறு பொருளுந்
திரும்பிவா ராவென்பர் காண்
மாடமிசை யன்னக் கொடித்திரள்கொள் சோணாடு
வாழவந் திடுமுதல் வனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) ஆடு அரவின் வாயினில் அகப்பட்ட தவளையும் - படம் எடுத்து ஆடுகின்ற பாம்பின் வாயில் சிக்கிய தவளையும், ஆலை வாயில் கரும்பும் - ஆலையில் அகப்பட்ட கரும்பும், அரிதான கப்பலின் பாய்மரக் காற்றினில் அகப்பட்டு மெலி காக்கையும் - அருமையான கப்பலில் உள்ள பாய்மரத்தில் உட்காரும் சமயத்து வீசும்படியான புயல் காற்றில் அடிபட்டு இளைக்கின்ற காக்கையும், நாடு அறியவே தாரை வார்த்துக் கொடுத்ததும் - எல்லா மக்களும் அறியும்படி ஒருவனுக்குத் தாரை வார்த்துக்கொடுத்துவிட்ட பொருளும், நலமாகவே அணை கடந்திட்ட வெள்ளமும் - பலமாகக் கட்டப்பட்டிருக்கும் அணையைக் கடந்துவிட்ட ஜலப்பிரவாகமும், நாய் வேட்டை பட்ட முசலும் - நாய் வேட்டைக்குள் அகப்பட்ட முயலாகிய சிறு பிராணியும், தேடி உண்பார் கைக்குள் ஆன பல உடைமையும் - தேடி அனுபவிப்பவரின் கைவசம் அகப்பட்ட பலவிதமான சாமான்களும், தீ வாதை ஆன மனையும் - நெருப்பில் எரிந்து போன வீடும், கொடுங்கோல் அரசர் கைக்கு ஏறு திரள் பொருளும் - கொடுமையாக ஆளும் மன்னர்கள்

வசமாகும் திரளான செல்வமும், திரும்பி வாரா என்பர் - திரும்பிவர மாட்டா என்று சொல்லுவர் பெரியோர், மாட மிசை - ஒவ்வொரு மாளிகை மீதும், அன்னக் கொடி திரள் சோனாடு - இரப்போர்க்கு அன்னம் இடும் ஸ்தலம் இது என்று குறிப்பிடும் அன்னக் கொடிகள் பல கூட்டமாக வுடைய சோழ நாடு, வாழ வந்திடு முதல்வனே - வாழும் படி வந்து அவதரித்த எப்பொருட்கும் இறைவனே! மயிலேறி—, எ - று.

## 52. இதினுமிது நன்றென்பவை

கடுகடுத் தாயிரஞ் செய்குவதி லின்சொலாற்
களிகொண் டழைத்த னன்று
கனவேள்வி யாயிரஞ் செய்வதிற் பொய்யுரை
கருத்தொடு சொலாமை நன்று
வெடுவெடுக் கின்றதோ ரவிவேகி யுறவினில்
விவேகியொடு பகைமை நன்று
வெகுமதிக ளாயிரஞ் செய்வதி னரைக்காசு
வேளைகண் டுதவ னன்று
சடுதியிற் பக்குவஞ் சொல்லுங் கொடைக்கிங்கு
சற்றுமிலை யென்ன னன்று
சம்பத் துடன்பிணியின் மெலிகுவதி னோயற்ற
தாரித்தி ரியநன்று காண்
மடுவினிற் கரியோல மென்னவந் தருள்செய்த
மான்மருக னனை முதலா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) கடுகடுத்து ஆயிரம் செய்குவதில் - முகங் கடுகடுத்து ஆயிரம் நன்மைகள் செய்வதைக் காட்டினும், இன்சொலால் களி கொண்டு அழைத்தல் நன்று - இனிமை சொற்கள் சொல்லி மனம் மகிழ்வுற்று அழைப்பதே நன்மை யானது, கனம் வேள்வி ஆயிரம் செய்வதின் - பெருமை பொருந்திய ஆயிர யாகங்கள் இயற்றுவதைக் காட்டினும், பொய்யுரை கருத்தொடு சொல்லாமை நன்று - வாயினுல் பொய் பேசாமையோடு மனத்தினுல் பொய்யை நினைக்கா திருப்பதும் நன்மையாகும், வெடுவெடுக்கின்றது ஓர் அவிவேகி உறவினில் - அருவருப்புப் பொருந்திய ஓர் புத்தி இல்லாதவனின் நட்பைக் காட்டினும், விவேகியொடு பகைமை நன்று - அறிவுள்ளவனின் விரோதமே நன்மை யாகும், வெகுமதிகள் ஆயிரம் செய்வதின் - காலம் அல்லாக் காலத்தில் ஆயிரம் சன்மானங்கள் தருவதைக் காட்டினும், வேளை கண்டு அரைக்காசு உதவல் நன்று - தகுந்த காலத் தில் அரைக்காசாகிலும் உபகாரம் செய்தலே நன்மை யாகும், பக்குவம் சொல்லும் கொடைக்கு - தவணை வைக் கும் தானத்தைக் காட்டினும், சடுதியில் இங்கு சற்றும் இல்லை - இவ்விடத்தில் ஒரு சிறிதும் கிடைக்காது, என்னல் நன்று - என்று (சீக்கிரமாகச்) சொல்லிவிடுதல் நன்மை யாகும், சம்பத்துடன் பிணியில் மெலிகுவதின் - நிறைந்த செல்வத்துடனேயே நோயினுல் இளைத்துப் போவதைக்

காட்டினும், நோயற்ற தாரித்திரியம் நன்று - நோயே இல்லாத வறுமை வாழ்வே சிறந்தது, மடுவினில் கரி - மடுவில் முதலை வாயில் சிக்கிய கஜேந்திரன், ஓலம் என்ன - 'முறையோ !' என்று கூப்பிட, வந்தருள் செய்த - ஓடோடியும் வந்து (முதலையைப் பிளந்து கஜேந்திரனை விடுவிக்கும் படியான) அருள் புரிந்த மால் மருகனான முதல்வா - திருமாலின் திருமருகன் ஆகிய இறைவனே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) கடுகடுத்து ஆயிரம் செய்குவதில் இன் சொலால்..............................இதனோடு,

" அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்
இன்சொல னாகப் பெறின் " —(குறள்)

நெஞ்சுவந்து ஒருவற்கு வேண்டிய பொருளைக் கொடுத்தலினும் கண்டபொழுதே முகம் இனியவனாய் அதனோடு இனிய சொல்லையும் உடையவனாகப் பெறின் நன்றாகும், என்பதை ஒப்பிட்டு நோக்குக.

சம்பத்துடன் பிணியின் மெலிகுவதின் நோயற்ற தாரித்திரியம் நன்று.

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்"

## 53. பல கூடினும் ஒன்றற்கு ஈடாகாதவை

தாரகைக ளொருகோடி வானத் திருக்கினுஞ்
சந்திரற் கீடாகு மோ

தாருவிற் கொடிதொனிகள் பலகூடி னுலுமொரு
தம்பட்ட வோசை யாமோ
கோரமிகு பன்றியின் குட்டிபல கூடினெரு
குஞ்சரக் கன்ருகு மோ
கொட்டிமலர் வாவியிற் பலகூடி னுலுமொரு
கோகனக மலராகு மோ
பாரமிகு மாமலைகள் பலகூடி னுலுமொரு
பைம்பொன்மக மேரு வாமோ
பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்தும்விற்
பனெருவ னுக்கு நிகரோ
வாரணக் கொடியொரு கரத்திற் பிடித்தொன்றில்
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) தாரகைகள் ஒரு கோடி வானத்து இருக்கினும் - ஒரு கோடி நக்ஷத்திரங்கள் ஆகாயத்தில் சஞ்சரித்தாலும், சந்திரற்கு ஈடாகுமோ - அவைகள் அனைத்தும் சந்திரனுக்குச் சமானமாகுமோ?, தாருவில் கொடி தொனிகள் பல கூடினுலும் - கோலினல் கட்டிய கொடிகள் செய்யும் ஓசைகள் பல சேர்ந்தாலும், ஒரு தம்பட்ட ஓசை ஆமோ - ஒரு பேரி செய்யும் ஒலிக்கு ஒப்பாகுமோ, கோரம் மிகு பன்றியின் குட்டி பல கூடின் - உருவத்தில் இழிவு மிகுந்த பன்றிக் குட்டிகள் பல

சேர்ந்தாலும், ஒரு குஞ்சரக்கன்று ஆகுமோ - ஒரு யானைக் குட்டி போலாகுமோ, கொட்டி மலர் வாவியில் பல கூடினும் - குளத்தில் கொட்டிக்கொடிப் பூக்கள் பல சேர்ந்தாலும், ஒரு கோகனக மலர் ஆமோ - சிறப்பும் பொன் வண்ணமும் பொருந்தியதொரு தாமரை மலருக்கு நிகராகுமோ, பாரம் மிகு மாலைகள் பல கூடினாலும் - பருமை மிகுந்த பெரிய மலைகள் பல ஒன்று சேர்ந்தாலும், ஒரு பைம்பொன் மகமேரு வாமோ - பசிய பொன் மயமான மகாமேரு மலைக்குச் சமான மாகுமோ, பலன் இல்லா(த) பிள்ளைகள் அனேகம் பிறந்தும் - பிறவிப்பயன் பெறாத பல அறிவினப் பிள்ளைகள் பிறந்தாலும், ஒரு விற்பனனுக்கு நிகரோ - ஒரு கல்வியறிவுள்ள குமாரனுக்கு ஒப்பாவரோ, ஒரு கரத்தில் வாரணக்கொடி பிடித்து - ஒரு திருக்கரத்தில் கோழிக்கொடி பிடித்து, ஒன்றில் வடிவேல் அணிந்த முருகா - மற்றொரு திருக்கரத்தில் கூர்மையான வேற் படையைத் தரித்துள்ள முருகப்பிரானே!, மயிலேறி—, எ - று.

## 54. அருமை யறிதல்

மணமாலை யருமையைப் புனைபவர்க ளேயறிவர்
மட்டிக் குரங் கறியுமோ
மக்களுடை யருமையைப் பெற்றவர்களே யறி
மலடிதா னறிவ துண்டோ [வர்

கணவருடை யருமையைக் கற்பான மாதறிவள்
கணிகையா னவ ளறிவளோ
கருதுமொரு சந்தியின் பாண்டமென்ப தைவ
களவான நாயறி யுமோ [ருங்
குணமான கிளியருமை தனைவளர்த் தவரறிவர்
கொடியபூ னையு மறியுமோ
குலவுபெரி யோரருமை நல்லோர்களே யறிவர்
கொடுமூடர் தாமறிவ ரோ
மணவாள நீயென்று குலவள்ளி பின்றொடர
வணமூடு தழுவு மழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) மணம் மாலை அருமையை - வாசனை பொருந்திய மாலையின் அருமையை, புனைபவர்களே அறிவர் - அணிந்து கொள்ளும் நாகரீகர்களே அறிவார்கள், மட்டிக் குரங்கு அறியுமோ - மூடக் குரங்கு அறியுமோ, மக்களுடை அருமையை - குழந்தைகளின் அருமையை, பெற்றவர்களே அறிவர் - பெற்றெடுத்த தாய்மாரே அறிவர், மலடி அறிவது உண்டோ - பிள்ளைபெற் றறியாத மலடி அறிவாளோ, கணவனுடை அருமையை - பர்த்தாவின் அருமையை, கற்பான மாது அறிவள் - பதிவிரதா தர்மமுடைய மங்கை அறிவாள், கணிகையானவள் அறிவளோ - வேசி அறிவாளோ, கருதும் ஒரு சந்தியின் பாண்

டம் என்பதை - கவனிக்கத் தகுந்த விரதத்திற்குரிய பாத்திரம் இது என்பதை, வரு களவான நாய் அறியுமோ - திருடுவதற்கே வரும்படியான நாய் அறியுமோ, குணம் ஆன கிளி அருமை - பேசும் தன்மை வாய்ந்த கிளியின் அருமையை, தன்னை வளர்த்தவர் அறிவர் - அதனை வளர்த்தவர்கள் அறிவார்கள், கொடிய பூனை அறியுமோ—, குலவு பெரியோர் அருமை - அறிவில் விளங்கும்படியான பெரியோர் அருமையை, நல்லோர்களே அறிவர் - அறிவாளிகளே அறிவார்கள், கொடு மூடர் அறிவரோ அறிவு கோணிய முட்டாள்கள் அறிவார்களோ, மணவாளன் நீ என்று குறவள்ளி பின் தொடர - "நீயே எனக்குற்ற கணவன்" என்று கூறிக் குறவர் குலத்தே உதித்த வள்ளி நாச்சியார் உன் பின் தொடர, வனம் ஊடு தழுவும் அழகா - காட்டிலேயே அவளை மணம் புணர்ந்த அழகனே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) மனம் ஊடு தழுவும் அழகா, எனப் பாடம் ஓதி மனதாரத் தழுவும் அழகனே என்றும் உரைக்கலாம்.

## 55. தீச்சார்பாற் பயன்படாதவை

மடுவினிற் கஞ்சமல ருண்டொருவ ரணுகாமல்
வன்முதலை யங்கிருக் கும்
மலையினிற் றேனுண்டு சென்றொருவர் கிட்டாம
மருவியதில் வண்டிருக் கும் [ன்

நெடுமைதிகழ் தாழைமல ருண்டொருவ ரணுகாம
னீங்காத முள்ளிருக் கும்
நீடுபல சந்தன விருக்ஷமுண் டணுகாது
நீளரவு சூழ்ந்திருக் கும்
குடிமல்கி வாழ்கின்ற வீட்டினிற் செல்லாது
குரைநாய்க ளங்கிருக் குங்
கொடுக்குந்தி யாகியுண் டிடையூறு பேசுங்
கொடும்பாவி யுண்டு கண்டாய்
வடுவையுங் கடுவையும் பொருவுமிரு கண்ணிகுற
வள்ளிக் குகந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

(இ-ள்) மடுவினில் கஞ்ச மலர் உண்டு - தடாகத்தில் தாமரை மலர் உண்டு, (எனினும்) ஒருவர் அணுகாமல் வன் முதலை அங்கிருக்கும் - ஒருவரும் நெருங்க முடியாதபடி கொடிய முதலை அத் தடாகத்தில் இருக்கும், மலையினில் தேன் உண்டு - மலையில் கட்டப்பட்டிருக்கும் கூடுகளில் நல்ல தேன் உண்டு, (ஆனால்) சென்று ஒருவர் கிட்டாமல் - மலையிடத்திற்குச் சென்று அத் தேன்கூட்டினைச் சேரவொட்டாமல், அதில் மருவி வண்டு இருக்கும் - அதில் பொருந்தி வண்டுகள் இருக்கும், நெடுமை திகழ் தாழை மலர் உண்டு - நீண்ட தாழம்பூ உண்டு, ஒருவர் அணுகாமல் நீங்காத முள் இருக்கும் - ஒருவர் அதனை நெருங்காமல் இருக்கு

மாறு அதனை விட்டொழிய முள்ளும் இருக்கும், நீடு பல சந்தன விருக்ஷம் உண்டு - நீண்ட பல சந்தனமரங்கள் உண்டு, அணுகாது நீள் அரவு சூழ்ந்திருக்கும் - அவற்றை நெருங்க ஒட்டாது நீண்ட பாம்புகள் சுற்றிக் கொண்டிருக்கும், குடி மல்கி வாழ்கின்ற வீட்டினில் - குடிகள் மிகுந்து வாழ்கின்ற வீட்டில், செல்லாது குரை நாய்கள் அங்கிருக்கும் - உள்ளே நுழைந்து செல்லவொட்டாது குரைக்கின்ற நாய்கள் வாயற்படிகளில் கட்டப்பட் டிருக்கும், கொடுக்கும் தியாகி உண்டு - வரையாது கொடுக்க எண்ணம் உடைய கொடையாளி உண்டு, இடையூறு பேசும் கொடும் பாவி உண்டு - அவனைத் தடுத்துக் 'கொடுக்காதே' என்று தடை செய்யும் கொடிய பாபிகளும் உண்டு, வடுவையும் கடுவையும் பொருவும் - மா வடுவினையும் விஷத்தையும் ஒத்த, இரு கண்ணி குற வள்ளிக்கு உகந்த கணவா - இரு கண்களை யுடையவளும் குறவர் குலத்துதித்தவளும் ஆகிய வள்ளிநாச்சியாரின் மகிழ்ச்சிக்குரிய புருஷனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) உலகில் வேண்டிய நல்ல பொருள்கள் உண்டு; ஆனால் அவற்றைச் சுயேச்சையாக அனுபவித்தலைத் தடை செய்யும் பல சக்திகளும் இருக்கின்றன என்பதே இச் செய்யுளின் கருத்தாகும். கடுவைப் பொருவும் கண், மாதருடைய கண்கள் கண்டாருக்கு ஆசைநோய் உண்டாக்கித் துன்புறுத்திக் கொல்வதால் கண்ணை விஷத்திற்கு ஒப்பிடுவர்.

## 56. வேசையர் இழிவு

பூவில்தா சிகள்வீடு சந்தைப் பெரும்பேட்டை
புனைமலர் படுக்கை வீடு
பொன்வாசல் கட்டில்பொது வம்பலமுடுத்த து
பொருவில்கூ தாடு சாலை [கில்
மேவலா கியகொங்கை கையாடு திரள்பந்து
விழிமனங் கவர் தூண் டிலாம்
மிக்கமொழி நீர்மே லெழுத்ததிக மோகமொரு
மின்னலிரு தொடைசர்ப்ப மாம்
ஆவலா கியவல்கு லோதண்டம் வாங்குமிட
மதிகபட மாமனது கல்
லமிர்தவா யிதழ்சித்ர சாலையெச் சிற்குழி
யவர்க்காசை வைக்க லாமோ
மாவடிவு கொண்டே யொளித்தவொரு சூரனை
வதைத்தவடி வேலா யுதா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) பூவில் தாசிகள் வீடு - உலகில் வேசிகள் வீடு, சந்தைப் பெரும் பேட்டை - (வியாபாரம் நடக்கும்) சந்தை கூடும் இடமாகிய பெரிய பேட்டை ஆகும், சேர்ந்திடு படுக்கை வீடு தெருவாசல் - அவர்களும் அவர்களை நாடிவரும் ஆடவரும் சேரும் படுக்கை அறையானது (ஜன

நடமாட்டம் அதிகம் உடைமையால்) தெருவாசலுக்கு ஒப்பாகும், கட்டில் பொது அம்பலம் - கட்டிலானது (பல பொது மக்களுக்கும் உரியதால்) பொது மக்கள் கூடும் இடத்திற்குச் சமானமாகும், உடுத்த துகில் செய்ய சூதாடு சாலை - அவர்கள் அணியும் ஆடையே யாவரும் அமரும் சிவந்த சூதாட்டிற்குரிய இடத்திற்கு ஒத்திருக்கும், மேவல் ஆகிய கொங்கை-ஆசையை அதிகரிக்கும் முலைகள், கை ஆடு திரள்பந்து - எவருடைய கையிலும் ஸ்பரிசிக்கப்படும் திரண்ட பந்து போன்றவை யாகும், விழி - அவர்களின் கண்களானவை, மனங்கவர் தூண்டில் ஆம் - வரும் ஆண்களின் மனத்தைப் பற்றி அகப்படுத்தும் தூண்டில் முள்ளாகும், மிக்க மொழி நீர்மேல் எழுத்து - சொன்னபடி (செய்வதில்லை ஆகையால்) மிகுந்து கொடுக்கின்ற வாய்ச்சொல் தண்ணீர்மேல் எழுதிய எழுத்துப்போல் நிலையற்றது, அதிக மோகம் ஒரு மின்னல் - அவர்கள் தம்மைப் புணரும் ஆடவர்கள்மீது வைப்பதுபோல் பாசாங்கு செய்யும் அதிக ஆசை க்ஷண மாத்திரமாகத் தோன்றிப் பின்னர் மருங்கின்றி மறையும் மின்னலுக்குச் சமமாகும், இரு துடை சர்ப்பம் ஆம் - இரண்டு துடைகளும் (வாழைமரங்கள் அல்ல) பாம்புக்கு நிகராகும், ஆவலாகிய அல்குலோ தண்டம் வாங்கும் இடம் - அசையைப் பெருக்குகின்ற நிதம்பமோ தண்டனைப்பொருள் வாங்கும் இடம்போன்றது, அதி கபடம் ஆம் மனம் ஆன்து கல் - மிகுந்த வஞ்சனையுடைய அவர்களுடைய மனம் கல்லுக்கு நிகராகும், அமிர்தவாய் இதழ் - அம்ருதத்துடன் கூடியது எனக் கூறப்

படும் வாயும் உதடுகளும், சித்திரச்சாலை எச்சிற்குழி - சித்திரச்சாலையில் வேடிக்கை பார்க்க வருவோர் துப்புவதற்காக மூலையில் வைக்கப்பட் டிருக்கும் எச்சிற்குழிக்கு நிகராகும், (அங்ஙனமாயின்) அவர்க்கு ஆசை வைக்கலாமோ - அவர்மீது ஆசை வைத்தால் சரியாமோ? (ஆகாது), மா வடிவுகொண்டே ஒளித்த சூரனை - மாமரத்தின் ரூபம் எடுத்துத் தனது நிஜரூபத்தை ஒளித்து நின்ற ஒப்பற்ற சூரபதுமனை, வதைத்த வடிவேலாயுதன் - கொன்ற கூர்மையான வேற்படையை யுடையவனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) தேவதாசிகள் - முதலில் தேவாலயங்களில் தேவ கைங்கரியம் செய்வதற்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த மகளிர் ஒழுக்க முடையவரா யிருந்தனர். பின்னர் அவர்களின் சந்ததியார் ஒழுக்கங்குன்றிப் பொது மகளிராயினர். இங்குத் "தாசிகள்" என்பது வேசிகள் என்ற பொருள் மட்டுங் கொண்டு நின்றது. சூதாட்டுச் சாலை, தன்னைக் காண்போரின் கண்கவரும் விதத்தில் சித்திரங்கள் நிறைந்திருக்கும்; அதுபோலவே வேசியர்கள் அணியும் சேலைகளும் வண்ணங்களும் சித்திரவேலைப்பாடுகளும் கொண்டு பளபளப்பாக இருக்கும். குலமகளிரின் சேலைகள் எளியனவா யிருத்தல் இயல்பு. அல்குல் தண்டம் வாங்கும் இடம் - அது ஒருவன் சக்தியை வாங்குவதல்லாது அபராதம் வசூலிக்கும் நீதிமன்றமும் போன்றது; அல்குலாலேயே பல தொல்லைகள் கொலைகள் உட்பட நேர்வதால் வேசையர் அல்குலில் தோய்வோர் அடிக்கடி நியாயஸ்தலங்

களுக்கு ஏறித் தண்டம் செலுத்துவது உலகில் காண்கின்றோம். ஆதலின் நியாயஸ்தலத்தின் தண்டம் வசூலிக்கும் தன்மையை அல்குலின்மேல் ஏற்றிக் கூறினர்.

அதி கபடமாம் மனது கல் - அவர்கள் மனம் வஞ்சனையுடையது. அன்புடையவர்போல் நடிப்பர். ஆனால் அவர்களது மனம் தம்மை அப்போது புணர்பவன்மீதில்லாது அவன் கொடுக்கும் பொருள்மீது செல்லும் அல்லது நிறைய பொருள் கொடுக்கும் ஆடவர்கள்மீது செல்லும். இத்தகைய இருமனம்தான் அதி கபடமாகும். வேசியருக்கு இருமனப்பெண்டிர் என்ற பேரும் வழங்குகின்றது.

பெண்கள் வாயில் அமிர்தம் உண்டு என்பதற்கு,

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்" —(குறள்)

(பணிமொழி - இனிய சொல்லுடைய பெண்; வால் எயிறு - வெண்மையான பல்)

என்பதனை நோக்கி உணர்க.

## 57. கலிகாலக் கொடுமை

தாய்புத்தி சொன்னால் மறுத்திடுங் காலமுயர்
தந்தையைச் சீறு காலஞ்
சற்குருவை நிந்தைசெய் காலமெய்க் கடவுளைச்
சற்றுமெண் ணாத காலம்

பேய்தெய்வ மென்றுப சரித்திடுங் காலம்
புரட்டருக் கேற்ற காலம்
பெண்டாட்டி வையினுங் கேட்கின்ற காலநற்
பெரியோர்சொல்கே ளாத காலம்
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு காலமிகு
சிறியவன் பெருகு காலஞ் [வசை
செருவில்விட் டோடினோர் வரிசைபெறு காலம்
செப்புவோர்க் குதவுகாலம்
வாய்மதம் பேசிவிடு மனியாய காரர்க்கு
வாய்த்தகலி கால மையா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) தாய் புத்தி சொன்னால் மறுத்திடும் காலம் - பெற்ற தாய் உறுதி சொன்னால் பிள்ளை மறுக்கின்ற காலமும், உயர் தந்தையைச் சீறு காலம், அறிவு முதிர்ந்த தகப்பனாரைப் பிள்ளை கோபிக்கும் காலமும், சற்குருவை நிந்தை செய் காலம் - சற்குருவைச் சிஷ்யன் பழி செய்யும் காலமும்; மெய்க் கடவுளைச் சற்றும் எண்ணாத காலம் - உண்மையான தெய்வத்தைச் சீவான்மாக்கள் சிறிது நேரமேனும் சிந்திக்காத காலமும், பேய் தெய்வம் என்று உபசரித்திடும் காலம் - பேயைத் தெய்வம் என்று மனிதர் ஆராதிக்கும் காலமும், புரட்டருக்கு ஏற்ற காலம் - வஞ்சகருக்குத் தகுந்திருக்குங் காலமும், பெண்டாட்டி வையினும்

கேட்கின்ற காலம் - தனது மனைவி வரம்புமீறித் அவதூருகத் திட்டினும் காம மிகுதியால் புருஷன் கேட்டுப் பேசா திருக்குங் காலமும், பெரியோர் சொல் கேளாத காலம் - ஞானம் மிகுந்த பெரியோர் கூறும்படியான நல்ல சொற்களையும் மனிதர் கேளாத காலமும், பெரியவன் தேய்வுடன் சிறுமை உறு காலம் - குணம் செயல் இவற்றில் பெருமையை உடையவன் மெலிந்து வறுமைப்படும் காலமும், சிறியவன் பெருகு காலம் - குண முதலியவற்றில் சிறுமையையுடைய கீழ்மகன் செல்வ முதலியவற்றில் உயரும் காலமும், செருவில் விட்டு ஓடினோர் வரிசை பெறு காலம் - போரில் தமது அரசனைத் தனியே விட்டு ஓடினவர் பகை அரசனிடத்தில் வெகுமானம் பெறும் காலமும், வசை செப்புவோர்க்கு உதவு காலம் - பிறரைப் பழி சொல்லுவதே தொழிலாக உடையவருக்குச் செல்வந்தர் உபகாரஞ் செய்யும் காலமும், வாய் மதம் பேசி விடும் அனியாயக் காரருக்கு வாய்த்த (காலம்) - செருக்காகப் பேசும் நெறியற்றவர்களுக்குத் தகுந்ததாயிருக்கும் காலமும் (எல்லாம்), கலிகாலம் - கலி கால இயல்பாகும் ஐயா - இறைவனே !, மயிலேறி—, எ - று.

## 58. அவரவர்க்கு உரியவை

கல்வியொடு கனமுறச் சபையின்மேல் வட்டமாக்
    காணவைப் போன் பிதாவாங்
கற்றுணர்ந் தேதனது புகழாற் பிதாவைப்ர
    காசஞ்செய் வோன் புத்திரன்

செல்வமிகு கணவனே தெய்வமென் றனுதினஞ்
சிந்தைசெய் பவள்மனைவி யாஞ் [மொழி
சினேகிதன்போலவே யன்புவைத் துண்மை
செப்புமவ னேசோத ரன்
தொல்வள மிகுந்தநூற் கரைதெரிந் துறுதிமொழி
சொல்லுமவ னேகுரவ னுஞ்
சொன்னநெறி தவறாமல் வழிபாடு செய்துவரு
துய்யனே யினிய சீஷன்
வல்விரக மிஞ்சுகர குஞ்சரி யுடன் குறவர்
வஞ்சியை மணந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கல்வியொடு கனம் உற - கல்வி யறிவுடன் பெருமையும் அதிக மாகுமாறு, சபையில் மேல்வட்டமாய் காணவைப்போன் பிதா ஆம் - சபை நடுவே மேலான அந்தஸ்து உடையவன் என்று ஏனைய படித்தவர்க்கம் பார்க்கும் வகையில் பிள்ளையை வைப்பவன் தந்தை யாகும், கற்று உணர்ந்தே - கற்பவைகளைச் செம்மையாகப் படித்தறிந்து, புகழால் பிதாவை ப்ரகாசம்செய்வோன் புத்திரன்- பெறும் கீர்த்தியினால் தன்னைப் பெற்றெடுத்த தந்தையை விளங்க வைப்பவன் பிள்ளையாகும், செல்வமிகு கணவனே - கல்விச்செல்வம் முதலியன மிகுந்துள்ள புருஷனே, தெய்வம் என்று - தனக்குத் துணையான தெய்வம் என்று, அனு

தினம் சிந்தை செய்பவள் மனைவியாகும் - நாள்தோறும் கருதுபவள் மனைவி யாகும், சினேகிதன் போலவே அன்பு வைத்து உண்மை மொழி - நண்பன் போன்றே அன்பு செலுத்திச் சத்தியத்தை, செப்பும் அவனே சோதரன் - சொல்பவனே உடன்பிறந்தவனாகும், தொல்வளம் மிகுந்த நூல்களை தெரிந்து - பழமையான வளமை மிகுந்த சாத்திர வரம்பு அறிந்து கொண்டு, உறுதிமொழி சொல்லும் அவனே குரவனும் - சீடனுக்கு நன்மை தரும் உபதேச வார்த்தை கூறுபவனே சற்குருவாகும், சொன்ன நெறி தவறாமல் வழிபாடு செய்து வரும் - குரு சொன்ன வழி பிசகாமல் தொண்டு புரிந்துவரும், துய்யனே இனிய சீடன் - பரிசுத்தனே நல்ல சிஷ்யனாகும், வல் விரகம் மிஞ்சு - (நீ இல்லாது போனால்) கொடிய பிரிவாற்றாமை என்னும் நோய் மிகப் பெறும்படியான, சுர குஞ்சரியுடன் - தெய்வ யானையையும், குறவர் வஞ்சியை - குறவர் குலத்துதித்த வள்ளி நாச்சியாரையும், மணந்த கணவா - விவாகம் செய்து கொண்ட தலைவனே! மயிலேறி—, எ - று.

(வி - ரை) தந்தையின் கடன்,

"தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்" —(குறள்)

மகனின் கடன்,

"மகறந்தைக் காற்று முதவி இவறந்தை
என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்" —(குறள்)

சோதரன் என்பது சகோதரன் என்பதன் மரூஉ; அது சஹ+உதரன் - ஒரே வயிற்றில் உதித்தவன் எனப் பொருள் படும்.

வஞ்சி - வஞ்சிக்கொடி போன்று துவளும் இடையுடையவள்; இங்குக் குறவர் என்றதனுல் வஞ்சியென்பது வள்ளிநாயகியார் ஆயிற்று.

## 59. சிறுமையிற் பெருமை

சேற்றிற் பிறந்திடுங் கமலமலர் கடவுளது
 திருமுடியின் மேலிருக் குந்
 திகழ்சிப்பி யுடலிற் சனித்தமுத் தரசாது
 தேகத்தின் மேலிருக் கும்
போற்றியிடு பூச்சியின் வாயினூல் பட்டென்று
 பூசைக்கு நேச மாகும்
 புகலரிய வண்டெச்சி லானதேன் றேவர்கொள்
 புனிதவபி டேக மாகும்
சாற்றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
 சவாதுபுழு கனைவர்க்கு மாஞ்
 சாதியீ னத்திற் பிறக்கினுங் கற்றோர்கள்
 சபையின்மேல் வட்ட மன்றோ
மாற்றிச் சுரத்தினை விபூதியா லுடல்குளிர
 வைத்தமெய்ஞ் ஞான முதலே

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) சேற்றில் பிறந்திடும் கமல மலர் - சேற்றில் உதிக்கும் தாமரைப்பூ, கடவுளது திருமுடியின் மேலிருக்கும் - தெய்வத்தின் அழகிய முடிமீது இருக்கும், சிப்பி உடலில் சனித்த திகழ் முத்து - முத்துச்சிப்பியின் உடலிலிருந்து பிறந்த ஒளி பொருந்திய முத்தானது, அரசரது தேகத்தின் மேலிருக்கும் - மன்னவர்களின் மார்பில் (மாலையாக) இருக்கும், பூச்சியின் வாயின் நூல் - பட்டுப் பூச்சி வாயிலிருந்து வந்த நூலால் ஆக்கப்பட்ட வத்திரந் தான், பட்டென்று போற்றி இடு பூசைக்கு நேசமாகும் - பட்டு என்று எல்லோரும் புகழ்ந்து செய்யப்பட்ட பூசைக்கு விருப்ப முடைத்தாகும், வண்டு எச்சில் ஆன புகல் அரிய தேன் - வண்டின் எச்சில் பட்டதான (இனிமை இவ்வளவென்று அளவிட்டுச்) சொல்லுதற்கரிய தேன் தான், தேவர் கொள் புனித அபிடேகம் ஆகும் - கடவுளர் கள் ஏற்கும்படியான புண்ணியம் பொருந்திய அபிடேக வஸ்துவாகும், புலாலொடு பிறந்த சாற்றிய கோரோசனை சவாது புழு - மாமிசத்துடனே பிறந்தவையும் பலராலும் மதித்துக் கூறப்பட்டவையும் ஆகிய கோரோசனை, சவாது, புழுகு முதலியன, அனைவர்க்கும் ஆம் - எல்லா மக்களுக் கும் வாசனைப் பொருள்களாகும், (ஆதலின்) சாதி ஈனத் தில் பிறக்கினும் - தாழ்ந்த வகுப்பு எனப்படுவதில் பிறந் தாலும், கற்றோர்கள்—, சபையில் மேல்வட்டம் அன்றோ -

சபையில் உயர்ந்த அந்தஸ்துடன் வீற்றிருப்பர் அல்லவா? விபூதியால் சுரத்தினை மாற்றி உடல் குளிர வைத்த - ஞான சம்பந்தராய்த் திருவவதாரம் செய்து விபூதியின் மகிமையால் பாண்டியனின் சுரத்தை அகற்றி அவன் உடலைக் குளிர வைத்த, மெய்ஞ்ஞான முதலே - உண்மையான ஞானத்திற்குத் தலைமை பூண்டுள்ள இறைவனே!, மயிலேறி—, எ - று.

## 60. செயத் தகாதவை

தானு சரித்துவரு தெய்வமிது வென்றுபொய்ச்
சத்தியஞ் செயல்விடாது
தன்வீட்டி லேற்றிய விளக்கென்று முத்தந்
தனைக்கொடுத் தாலது சுடும்
ஆனாலு மேலவர்கண் மெத்தவுந் தனதென்
றடாதது செயிற் கெடுதியா
மானதான் மெத்தப் பழக்கமா னாலுஞ்செ
யாதுசெய் தாற்கொன் றிடும்
தீனான தினிதென்று மீதூண் விரும்பினாற்
றேகபீ டைகளே தருஞ்
செகராசர் தனதென்ன வேலாத காரியஞ்
செய்தான் மனம்பொறார் காண்
வானாடு புகழுமொரு சோனாடு தழையவிவண்
வந்தவ தரித்த முதலே

மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) தான் ஆசரித்து வரும் தெய்வம் இது என்று - தான் வழிபாடு செய்து வரும் கடவுள் இது என்று நினைந்து, பொய் சத்தியம்—, செயல் - செய்தால், விடாது - கடவுள் தண்டிக்காமல் விடாது, தன் வீட்டில் ஏற்றிய விளக்கு என்று - தனது வீட்டில் ஏற்றின விளக்குத் தானே என்று கருதி அதற்கு, முத்தந்தனை கொடுத்தாலது சுடும் - முத்தங் கொடுத்தால் விளக்கின் நெருப்பு உடனே சுட்டு விடும், ஆனாலும்—, மேலவர்கள் மெத்தவும் தனது என்று - இப் பெரியோர்கள் மிகவும் நமக்கே உரியவர் என்று கொண்டு, அடாது செய்யில் கெடுதி ஆம் - அவர்களுக்குத் தீங்கு செய்தால் ஆபத்தாகும், யானை மெத்தப் பழக்கமானாலும் - யானை தனக்கு அதிக பழக்கமுடையதென்றாலும், செயாது செய்தால் கொன்றிடும் - அது விரும்பாததைப் புரிந்தால் தக்ஷணமே கொன்று வீழ்த்திவிடும், தீன் ஆனது இனிது என்று மீது ஊண் விரும்பினால் - உணவு இனிப்பாக உள்ளது என்று நினைத்துப் பெருந்திண்டி தின்றால், தேக பீடைகளே தரும் - அது உடலில் மிகுந்த நோய்களைத்தான் உண்டாக்கும், செகராசர் தனது என்ன ஏலாத காரியம் செய்தலே - உலக அரசர்கள் தனக்குரியவர் என்று செருக்கித் தகாத காரியம் செய்தால், மனம் பொறார் - மன்னவர்கள் மனத்தே பொறுக்க மாட்டார்கள் (உடனே தண்டிப்பர்), வான் நாடு புகழும் - தேவ

லோகத்தினர் புகழும்படியான, சோணுடு தழைய - சோழ நாடு செழிக்குமாறு, இவண் வந்து அவதரித்த முதலே - இவ்வுலகில் எழுந்தருளி அவதாரஞ் செய்த இறைவனே !, மயிலேறி—, எ - று.

## 61. நடுவு நிலைமை

வந்தவிவ காரத்தி லினியபரி தானங்கள்
வருமென்று நேச ரென்றும்
வணபகைஞ ரென்றுமய லோரென்று மிக்கதன
வானென்று மேழை யென்றும்
இந்தவகை யைக்குறித் தொருபக்ஷ பாதமோ
ரெள்ளள வுரைத்தி டாம
லெண்ணமுட னேலிகித புத்தியொடு சாக்ஷிக்கு
மேற்கச்ச பாச மதமாம்
முந்தவிரு தலையுஞ் சமன்செய்த கோல்போன்
மொழிந்திடிற் றர்மமது காண்
முனைவீம னுடலபாதி மிருகந் தனக்கென்று
முன்றருமர் சொன்ன தலவோ
மைந்தனென வன்றுமை முலைப்பால் கொடுத்திட
வளர்ந்தருள் குழந்தை வடிவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) வந்த விவகாரத்தினில் இனிய பரிதானங்கள் வரும் என்றும் - (நியாயசபையில் நீதிபதியாயிருப்பவன் தன்னிடம்) வந்த வழக்கில் தன் மனதிற்கு விருப்பமாயுள்ள இலஞ்சப்பொருள் (ஒரு சாரார் இடத்திருந்து) தனக்குக் கிடைக்கும் என்று நினைத்தும், நேசர் என்றும் - (வாதிப்பிரதிவாதிகளுள்) இவர் நண்பர் என்றும், வன் பகைஞர் என்றும் - இவர் கொடிய விரோதிகள் என்றும், அயலோர் என்றும் - (அவ் விருதிறத்தாரும் இல்லாது), அயலார்கள் என்றும், மிக்க தனவான் என்றும் - மிகுந்த செல்வம் படைத்தவன் என்றும், ஏழை என்றும்—, இந்த வகையைக் குறித்து - இத்தகைய காரணங்களை உட்கொண்டு, ஓர் எள்ளளவும் - ஒரு சிறிதும், ஒரு பக்ஷபாதம் உரைத்திடாமல் - (வாதிப்பிரதிவாதிகளுள்) ஒருவன் சார்பாகத் தீர்ப்பு சொல்லாமல், எண்ணமுடனே - இருதிறத்தாரின் மனத்தில் உள்ள கருத்து என்ன என்று உணர்ந்தவற்றிற்கும், லிகித புத்தியோடு - எழுத்துமூல ஆதாரங்களை ஆராய்ந்த அறிவிற்கும், சாக்ஷிக்கும் - சாக்ஷிகள் கூறிய வாக்குமூலத்திற்கும், ஏற்க-பொருத்தமாகவும், சபா சம்மதமாம் - சபையில் உள்ள துணை நீதிபதிகளும் நீதி ஆலோசனைக் கூட்டத்தினரும் ஒப்புக்கொள்ளும் விதத்திலும், முந்த இரு தலையும் சமன்செய்த கோல்போல் - சாமான்களும் நிறைகளும் வைப்பதற்கு முன்னமேயே ஒரு பக்கமும் கோணாமல் தன் இருமுனைகளும் சமம் ஆகும்படி நடுநிலையில் நின்ற தராசுக்கோல் (பின்னே தன்னிடம் வைக்கப்படும் சாமானின் பாரத்தை உள்ளது உள்ளவாறே உணர்த்து

வது) போன்றே, மொழிந்திடின் - (தானும் ஒருவர்பக்கமும் சாயாது சமமாக நின்று) தீர்ப்புச் சொன்னால், தர்மம் அது காண் - அதுதான் தர்மமாகும், முன் - முற்காலத்தில், தருமன் - பஞ்சபாண்டவர்களில் மூத்தவரான தருமப்பிரபுவானவர், (தம் முன் வீமனும் புருஷமிருகமும் உரைத்த வழக்கில் தீர்ப்பளிக்கும்போது, வீமன் தமது உடன்பிறந்தவன் என்றும் பார்க்காது), முனை வீமன் பாதி உடல் - போர் செய்ய வல்ல வலிய வீமசேனனது உடலிற் பாதி பங்கு, மிருகம் தனக்கு - புருஷமிருகத்திற்குரியது, என்று சொன்னது அலவோ - என்று தீர்ப்பு அளித்தது இன்று யாவராலும் பாராட்டக்கூடிய விஷயம் அன்றோ?, அன்று - சரவணப்பொய்கையில் நீ ஆறுவடிவங்களாய்த் தோன்றிய காலத்தில், மைந்தன் - என் மகன் என்று ஆறு வடிவங்களையுந் திரட்டி ஒருருவமாக்கி, உமை - உமாதேவியார், முலைப்பால் கொடுத்திட வளர்ந்தருள் - ஸ்தனத்தினிடமாகப் பால் அளிக்க வளர்ந்தருளும், குழந்தை வடிவே - குழந்தை ரூபனே, மயிலேறி—, எ - று.

(வி - ரை) நீதிபதி வழக்கைத் தெளிந்து கொள்வதற்கு வாதிப்பிரதிவாதிகளின் சொல் செயல் இவற்றோடும் அனுபவ சக்தியால் அவர்கள் எண்ணத்தையும் உய்த்தரிதல் வேண்டும் என்பார் "எண்ணமுடனே" என்றார். அனுபவம் லிகிதம் சாட்சி இம்மூன்றும் வழக்கறிவதற்குச் சாதனங்கள். அவற்றில் "எண்ணம்" என்றதால் அனுபவமும், எழுத்து மூல ஆதாரங்களுக்கு 'லிகித புத்தியு'ம்

சாட்சி வாக்கு மூலங்களுக்குச் ‘சாட்சி’யும் ஒருங்கே கூறினர். அன்றியும் லிகித புத்திக்கு வழக்கு நூல்களும் பயில்வதால் ஏற்பட்ட அறிவிற்கு என்றுங்கொள்ளலாம். சபா - வழக்குகளைச் செம்மையாக அறிந்து தீர்ப்பளிப்பதற்கு ஒரே நீதிபதி போதாதது; அதற்குத் துணை நீதிபதிகளும் வழக்காலோசனைக்காரர்களும் நியமிக்கப்படுவர். அவர்களைக் கொண்டதே சபை ஆகும்.

மிருகம் - இங்குப் புருஷ மிருகம். முகம் மனித வடிவாகவும் உடல் மிருக ரூபமாகவும் உள்ளதோர் தெய்வ மிருகம். இது போகும் இடங்களில் எல்லாம் தன்மீதுள்ள காற்றினல் பரிசுத்தப்படுத்தும். ஆனல் எதிர் கண்டவரைத் தவறாது கொன்றுவிடும். தருமர் அசுவமேதயாகம் செய்யப் புகுந்தனர். கோடிக்கணக்கானவர் உணவுகொள்ள வேண்டி இருத்தலின் உடனுக்குடன் சுத்தப்படுத்த அந்த மிருகத்தை அழைத்து வரும்படி கிருஷ்ணபிரானின் ஆலோசனைப்படி பீமசேனன் இமயமலை நோக்கிச் சென்றனன். வழியில் அனுமானைக் கண்டு அதன் சவிஸ்தாரம் அறிந்து அவர் உடல்மயிரும் பெற்று அம் மிருகத்தைக் கண்டான். அது அவனைக் கொல்ல ஓடி வரவும் அனுமான் உடல் மயிர் ஒன்றை எறிதலும் அது சிவலிங்கமாயிற்று. அம் மிருகம் அதைப் பூசை செய்யும் நேரத்தில் வெகுதூரம் போய்விட்டான்; இவ்விதம் மிருகத்தைத் தடைப்படுத்திக் கொண்டே அஸ்தினபுரி சேர்ந்து யாக சாலைக்குள் ஒரு காலை வைப்பதற்குள் மிருகம் மற்ரேர்

காலைப் பற்றிக்கொண்டது. பீமன் குறித்த இடத்தில் சேர்ந்த பின்னர் பிடித்தல் தகா தென்றான், மிருகமோ ஒரு கால் யாகசாலைக்கு வெளியிருத்தலின் பற்றினேன் தகும் என்றது. தருமரிடத்தில் இருவரும் வழக்குரைத்தனர். அவர் வீமன் தம்பி என்றும் பாராது அவனுடைய பாதி உடல் மிருகத்திற்குரியதே என்று தீர்ப்பளித்தார். இதைக் கண்டு வியந்து தெய்வமிருகம் தருமரைப் பாராட்டி வீமனை விடுத்தது. 'இருதலையும் சமன் செய்த கோல் போல்' என்பதனை,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி''

என்னும் திருக்குறளோடு ஒப்பிட்டு நோக்குக.

## 62. பக்ஷபாதம்

ஓரவிவ காரமா வந்தவர் முகம்பார்த்
துரைப்போர் மலைக்குரங் கா [ல
முயர்வெள் ளெருக்குடன் முளைத்துவிடு மவரில்
முறையுமூர் பாழ்நத்த மாம்
தாரணியி லிவர்கள்கிளை நெல்லியிலை போலுகுஞ்
சமானமா வெழுபிறப் புஞ்
சந்ததியி லாதுழல்வ ரவர்முகத் தினின்மூத்த
தையலே குடியிருப் பாள்
பாரமிவ ரென்றுபுவி மங்கையு நடுங்குவாள்
பழித்ததுர் மரண மாவார்

பகர்முடிவி லேரவுர வாதிநர கத்தனு
பவிப்பவரெப் போது மென்பார்
வாரமுட னருணகிரி நாதருக் கனுபூதி
வைத்தெழுதி யருள் குருபரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) வந்தவர் முகம் பார்த்து - வழக்குகொண்டு வந்தவர் முகத்தைப் பார்த்து (இவர் வேண்டுவோர் வேண்டாதார் என்று கருதி), ஓரம் விவகாரமா உரைப்போர்-ஒரு தலைப் பக்ஷமாகத் தீர்ப்பு அளிப்பவர், மலைக்குரங்காம்-மலைக் குரங்காவார்கள், அவர் இல்லம் - அவர்களது வீட்டில், உடனே - தக்ஷணமே, முடியா(த) வெள்ளெருக்கு முளைத்து விடும் - வெட்டித் தள்ளியும் ஒழியாத வெள்ளெருக்குப் புதர் முளைத்து வளர்ந்துவிடும், உறையும் ஊர் பாழ் நத்தமாம் - அவர்கள் வாசம் செய்யும் ஊரும் பாழடைந்த இருள் சூழ்ந்த ஊராய்விடும், தாரணியில் - உலகத்தில், இவர்கள் கிளை - இவர்களது பந்துக்கள், நெல்லி இலைபோல் உகும் - நெல்லி மர இலை உதிருங்காலத்து ஒன்றுகூட நில்லாமல் உதிர்ந்து விடுவதுபோல் அழிந்து விடுவர், எழுபிறப்பும் சமானமா(க) சந்ததி இலாது உழல்வர் - ஊர்வன நடப்பன முதலிய எழு பிறப்புக்களிலும் ஒரே நிகராகப் புத்திர சந்தான மில்லாமல் அலைவர், அவர் முகத்தினில் மூத்தையலே குடியிருப்பாள் - அவர்களது முகத்தில் மூதேவியே குடிகொண்டிருப்பாள், பாரம் இவர் என புவிமங்கையும்

நடுங்குவாள் - இவர்கள் இருப்பது மிகுந்த பாரமாயிருக்கிறது என்று பூமாதேவியும் நடுங்குவாள், பழித்த தூர்மரணம் ஆவார் - மக்கள் பழித்துக் கூறும் தூர்மரணத்தை அடைவார்கள், முடிவிலே பகர் ரவுரவாதி நரகத்தனுள் படுப்பர் எப்போதும் - மரணகாலத்தில் உயிர் நீங்கி நூல்களில் பகுத்துக் கூறப்பட்ட ரௌரவம் முதலிய நரகங்களில் வேதனைப்படுவர் எப்போதும், என்பார் - என்று பெரியோர் சொல்லுவார், வாரமுடன் - அன்புடன் அருணகிரி நாதருக்கு - அருணகிரிப் பெருந்தகையாருக்கு அநுபூதி எனும் நூலை, எழுதி வைத்தருள்—, குருபரா - மேலான சற்குரு மூர்த்தியே !, மயிலேறி—, எ - று.

## 63. ஒன்றிலாமையாற் சிறவாதவை

கொங்கையில் லாதவட் கெத்தனைப் பணியுடைமை
 கூடினும் பெண்மை யில்லை
கூறுநிறை கல்வியில் லாமலெத் தனைகவிதை
 கூறினும் புலமை யில்லை
சங்கையில் லாதவர்க் கெத்தனை விவேகந்
 தரிக்கினுங் கனதை யில்லை
சட்சுவை பதார்த்தவகை யுற்றாலு நெய்யிலாச்
 சாதமுந் திர்த்தி யில்லை
பங்கய மிலாமலெத் தனைமலர்கள் வாவியிற்
 பாரித்து மேன்மை யில்லை

பத்தியில் லாமல்வெகு நியமமா யர்ச்சனைகள்
பண்ணினும் பூசையில்லை
மங்கைய ரிலாமனைக் கெத்தனை யருஞ்செல்வம்
வரினுமில் வாழ்க்கை யில்லை
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கொங்கை இல்லாதவட்கு - முலைகள் இல்லாதவளுக்கு, எத்தனை பணியுடைமை கூடினும் - அநேக நகைகள் சேர்ந்தாலும், பெண்மை இல்லை - பெண் தன்மை வராது, கூறு நிறை கல்வி இல்லாமல் - மதித்துக் கூறப்பட்ட நிறைந்த கல்வியறிவு இல்லாது, எத்தனை கவிதை கூறினும் - பற்பல கவிகள் சொன்னாலும், புலமை இல்லை - பாண்டித்தியம் வராது, சங்கை இல்லாதவர்க்கு - கல்வி ஆராய்ச்சியால் தோன்றும் ஐயப்பாட்டின் அனுபவமே இல்லாதவர்களுக்கு, எத்தனை விவேகம் தரிக்கினும் - எவ்வளவு அறிவு ஊட்டினலும், கனதை இல்லை - பெருமை வராது, சட்சுவை பதார்த்த வகையுற்ருலும் - கைப்பு, புளிப்பு, இனிப்பு, கார்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு என்ற ஆறு ருசிகள் பொருந்திய கறி வகைகள் மிகுந்திருந்தாலும், நெய்யில்லா(த) சாதம் திர்த்தி இல்லை - நெய் இல்லாத அன்னம் புசித்தலில் திருப்தியே வராது, வாவியில் பங்கசம் இல்லாமல் - குளத்தில் தாமரை இல்லாது, எத்தனை மலர்கள் பாரித்தும்-எவ்வளவு வேறுமலர்கள் மலர்ந்திருந்தாலும், மேன்மை இல்லை—, பக்தி இல்லாமல் வெகு நியமமாய் அர்ச்சனைகள் பண்ணி

னும் - கொஞ்சமும் உண்மையான பக்தி இல்லாது மிகுந்த ஊக்கமும் நியமும் பொருந்திப் பல ஆராதனைகள் புரிந்தாலும், பூசை இல்லை - ஆராதனைப் பலன் சித்திக்காது, மங்கையர் இல்லாது - மனைவிமார் இல்லாமல், எத்தனை அருஞ் செல்வம் வரினும் - எவ்வளவு அருமையான ஐஸ்வரியங்கள் வீடுகளில் நிறைந்தாலும், இல்வாழ்க்கை இல்லை - இல்லற வாழ்க்கையாய்விடாது, மயிலேறி—, எ - று.

## 64. அளவு படாதவை

வாரியா ழத்தையும் புனலெறியு மலைகளையு
மானிடர்கள் சனனத்தை யும் [யும்
மன்னவர்க ணினைவையும் புருஷர்யோகங்களை
வானினுயர் நீளத்தை யும்
பாரிலெழு மணலையும் பலபிரா ணிகளையும்
படியாண்ட மன்னவரை யும்
பருப்பதத் தின்னிறையு மீசுரச் செயலையும்
பனிமாரி பொழிதுளியை யும்
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையுஞ்
சித்தர்தம துள்ளத்தை யுந் [டி
தெரிவையர்கள் சிந்தையையு மிவ்வளவெனும்ப
தெரிந்தள விடக்கூடு மோ
வாரிச மடந்தைகுடி கொண்ட நெடுமாலுக்கு
மருகனென வந்த முருகா

**மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.**

(இ - ள்) வாரி ஆழத்தையும் - சமுத்திர ஆழத்தையும், புனல் எறியும் மலைகளையும் - நீர் அருவி பாயப்பெற்ற மலைகளையும், மானிடர்கள் சனனத்தையும் - மனிதரின் பிறப்பையும், மன்னவர்கள் நினைவையும் - அரசர்களின் சிந்தனையையும், புருஷர் போகங்களையும் - ஆண்மக்கள் அனுபவிக்கும் இன்பங்களையும், வானின் உயர் நீளத்தையும் - ஆகாயத்தின் உயர்ந்த நீளத்தையும், பாரில் எழு மணலையும் - பூமியில் பொருந்திய மணலையும், பல பிராணிகளையும் - ராசிராசியாயுள்ள பல சீவன்களையும், படி ஆண்ட மன்னவரையும் - உலகத்தை அரசாண்ட அரசர்களையும், பருப்பதத்தின் நிறையும் - மலையின் பார அளவினையும், ஈசுரச் செயலையும் - கடவுளின் செய்கையையும், பனி (துளி) யையும் - பனித்துளியையும், மாரி பொழி துளியையும் - மழைபொழிகின்ற துளியையும், சீரிய தமிழ் புலவர் வாக்கில் எழு கவியையும் - சிறந்த தமிழ்ப் புலவர்கள் வாயினின்றும் பொங்குகின்ற செய்யுட்களையும், சித்தர் தமது உள்ளத்தையும் - யோக சித்தர்களின் மனத்தையும், தெரிவையர்கள் சிந்தையும் - மாதர்கள் மனத்தில் உள்ளவைகளையும், இவ்வளவு என்னும்படி - இவ்வளவுதான் என்று, தெரிந்து - உணர்ந்து, அளவிடக்கூடுமோ - வரையறுத்தல் சாத்தியமாமோ? (ஆகாது), வாரிச மடந்தை-செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமங்கை (இலக்ஷ்மி), குடி

கொண்ட - மார்பில் வாசம் செய்யாநின்ற, நெடுமாலுக்கு - நெடிய திருமாலுக்கு, மருகன் என - மருமகன் என்னு மாறு, வந்தமுருகா - திரு அவதாரம் செய்தருளிய முருகக் கடவுளே !, மயிலேறி—, எ - று.

## 65. பிறர்மனை நயத்தல்

தந்தார மன்றியே பாதார மேனினைவு
தனைவைத்த காமுகர்க் குத்
தயையில்லை நிசமில்லை வெட்கமிலை சமரினிற்
றைரியஞ் சற்று மில்லை
அந்தார மில்லைதொடர் முறையில்லை நிலையில்லை
யறிவில்லை மரபு மில்லை
யறமில்லை நிதியில்லை யிரவினிற் றனிவழிக்
கச்சமோ மனதி லில்லை
நந்தாத சனமில்லை யினமில்லை யெவருக்கு
நட்பில்லை கனதை யில்லை [பெறு
நயமில்லை யிளமைதனில் வலிமையிலை முத்தி
ஞானமிலை யென்பர் கண்டாய்
மந்தார பரிமள சுகந்ததி புனையுமணி
மார்பனே யருளாள னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) தம் தாரம் அன்றியே - தமது சொந்த மனைவியர்மேல் அல்லாது, பரதாரம்மேல் நினைவுதனைவைத்த காமுகர்க்கு - பிறருக்குச் சொந்தமான மனைவிமார் மீது ஆசைவைத்த காமுகருக்கு, தயை இல்லை - அருள் இல்லை, நிசமில்லை - சத்தியமில்லை, வெட்கம் இல்லை - நாணம் இல்லை, சமரினில் தைரியம் இல்லை - யுத்தகளத்தில் ஆண்மை சிறிதும் இல்லை, அம் தாரம் இல்லை - அழகிய மனைவி இல்லை, தொடர் முறை இல்லை - இடைவிடாத நெறி முறை நிற்றல் இல்லை, நிலை இல்லை - ஸ்திர நிலைமை இல்லை, அறிவு இல்லை - புத்தி இல்லை, மரபு இல்லை - குலம் இல்லை, அறம் இல்லை - தருமம் இல்லை, நிதி இல்லை - செல்வம் இல்லை, இரவினில் தனிவழிக்கு அச்சமோ மனதில் இல்லை - (பரதாரத்தின்மீது கவனம் சென்று விடுவதால்) இரவில் தனியாக வழிநடக்கின்றோமே என்ற கள்ளர் பூச்சி முதலிய பயங்களே சிந்தையில் இல்லை, நந்தாத மனம் இல்லை - குறையாத (கட்டு விடாத திடச்) சித்தம் இல்லை, இனம் இல்லை - உறவு இல்லை, எவருக்கும் நட்பும் இல்லை - எவருடைய சிநேகமும் இல்லை, கனதை இல்லை - பெருமை இல்லை, நயம் இல்லை - நன்மை இனிமைகள் இல்லை, இளமை தன்னில் வலிமை இல்லை - இளம் பருவத்தில் உடல் வலிமை இல்லை, முக்தி பெறு ஞானமில்லை - மோக்ஷம் பெறுவதற் குதவும் ஞானம் இல்லை, என்பர் - என்று பெரியோர் செல்லுவர், பரிமள மந்தாரம் - நல்ல வாசனை பொருந்திய மந்தரா மலரும், சுகந்தம் ஆதி - நறுநாற்றத் திரவியங்கள் முதலியன, புனையும் மணி மார்பனே - அணிகின்ற அழகிய

இரத்தினம்போன்ற மார்பை உடையவனே!, அருள் ஆளனே - கிருபையை உடையவனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) மரபு - குலம் அன்றிச் சந்ததியும் ஆகும். மந்தாரம் - தேவதருக்கள் ஐந்தனுள் ஒன்று; இதர தருக்களாவன:—அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம்.

## 66. மானம்விடாமை

கனபார மேறிற் பிளந்திடுவ தன்றியே
கற்றூண் வளைந் திடாது
கருதலர்க ளாலுடைந் தாலுமுயி ரளவிலே
கனசூர னமரின் முறியான்
தினமோ ரிடுக்கண்வந் துற்றாலும் வேங்கைதோல்
சீவனள விற்கொ டாது
திறமான பெரியோர் சரீரங்கள் போகினும்
செப்பு முறை தவறி டார்கள்
வனமேறு கவரிமா வுயிர்போகு மளவுந்தன்
மயிரினொன் றுங்கொடா து
வாராத வாபத்து வருகினுங் கற்புடைய
மாதுநிறை தவறி நடவாள்
மனதார வுனதடைக் கலமென்ற கீரற்கு
வன்சிறை தவிர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கன பாரம் ஏறில் - சுமக்க முடியாத மிகுந்த சுமை தன் மீது ஏற்றப்பட்டாலும், கல் தூண் பிளந்திடுவதன்றியே - கல்லால் ஆகிய தூணனது பிளந்து ஒடிவதே அன்றி, வளைந்திடாது - (ஒருக்காலும்) வளையாது, கருதலர்களால் உடைந்தாலும் - பகைவர்களால் தம்முயிருக்கு நாசம் வந்துற்றபோதும், கன சூரன் - நிறைந்த ஆண்மை உடைய வீரனானவன், உயிர் அளவிலே - சீவன் இருக்கும் வரைக்கும், அமரில் முறியான் - யுத்தத்தில் பின்னிடையான், தினம் ஓர் இடுக்கண் வந்துற்றாலும் - நாள்தோறும் ஓர் துன்பம் தனக்கு நேர்வதாயினும், வேங்கை - புலியானது, சீவன் அளவில் - உடலில் சிறிதளவு உயிர் இருக்கும் வரையில், தோல் கொடாது - தனது தோலைக் கொடுத்து விடாது, சரீரங்கள் போகினும் - தமது உடல் அழிவதாயினும், திறம் ஆன பெரியோர் - ஒழுக்கத்தில் உறுதியுடைய பெரியவர்கள், செப்பும்முறை தவறிடார்கள் - தாங்கள் சொன்ன சொல்லைத் தவற மாட்டார்கள், வனம் ஏறும் கவரிமான் - அழகு மிஞ்சிய கவரி என்னும் மான், உயிர் போகும் அளவும் - உயிர் நீங்கும் வரையும், தன் மயிரில் ஒன்றுங் கொடாது - தனது மயிரில் ஒன்றையேனும் கொடுத்திடாது, வாராத ஆபத்து வருகினும் - வரத்தகாத கேடு சம்பவித்தாலும், கற்புடைய மாது - கற்புடைய பெண்மணியானவள், நிறை தவறிடாள் - (நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற பெண்மைக்குரிய) நிறைகுணத்தினின்றும் பிசகமாட்டாள், மனது ஆர - மனப் பூர்த்தியாக, உனது அடைக்கலம் - 'உனக்கு

அபயம்', என்ற கீரற்கு - என்று முறையிட்ட நக்கீரதேவ ரின், வன்சிறை தவிர்த்த முருகா - அயக்கிரீவன் இட்ட கொடிய சிறையை மீட்டருளிய முருகக்கடவுளே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) "கனபாரம்...............கற்றான் வளைந் திடாது...........கருதலர்..........." இதனை,

"உற்ற விடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்" —(வாக்குண்டாம்)

என்பதனோடு ஒப்பிட்டு நோக்குக.

## 67. திருவருட் சிறப்பு

திருமகள் கடாக்ஷமுண் டானு லெவர்க்குஞ்
சிறப்புண்டு கனதை யுண்டு
சென்றவழி யெல்லாம் பெரும்பாதையாய்விடுஞ்
செல்லாத வார்த்தை செல்லும்
பொருளொரு துரும்புமரி யாதையாஞ் செல்வமோ
புகல்பெருக் காறு போலாம்
புவியின்முன் கண்டுமதி யாதபேர் பழகினவர்
போலவே நேச மாவார்
பெருமையொடு சாதியி லுயர்ச்சிதரு மனுதினம்
பேரும்ப்ர திஷ்டை யுண்டாம்

பிரியமொடு பகையாளி கூடவுற வாகுவான்
பேச்சினிற் பிழைவரா து
வருமென நினைத்தபொருள் கைகூடி வருமதிக
வல்லமைகண் மிகவுமுண்டாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) எவர்க்கும் - யார்க்கும், திருமகள் கடாக்ஷம் உண்டானல் - இலக்குமியின் அருள் நோக்குக் கிடைத்தால், சிறப்பு உண்டு - மேன்மை உண்டு, கனதை உண்டு - பெருமை உண்டு, சென்ற வழி எல்லாம் பெரும் பாதை ஆய்விடும் - அவன் போகின்ற எல்லா மார்க்கங்களும் பெரிய மார்க்கங்கள் ஆகிவிடும், செல்லாத வார்த்தை செல்லும் - முன்னர் சபைகளில் செல்லாத அவனது வார்த்தைகள் இப்போது (தவருயினும்) ஏற்றுக் கொள்ளப் படும், பொருள் ஒரு துரும்பு மரியாதை - உலகப் பொருள்கள் அவனுக்கு ஒரு துரும்புபோல் எளிதாகக் காணப் படும், செல்வமோ புகல் பெருக்கு ஆறுபோலாம் - ஐஸ்வரியமோ அவனிடம் மதித்துக் கூறப்பட்ட ஆற்று வெள்ளம் போல் பிரவாகித்துக் குவியும், புவியில் - உலகத்தில், முன் கண்டு மதியாத பேர் - முன்னே அவனைப் பார்த்துக் கௌரவிக்காத பேர்கள் எல்லாம், (இப்போது), பழகினவர் போலவே நேசம் ஆவார் - முன் பின் பழகியவர் போன்று சினேகம் ஆவார்கள், சாதியில் பெருமையொடு உயர்ச்சி தரும் - அவன் உதித்த சாதி (முன்னில்லாத)

மேன்மையும் உயர்ந்த நிலையும் அவனுக்கு அளிக்கும், அனுதினம் பேரும் பிரதிஷ்டை உண்டாம் - தினந்தோறும் அவனது புகழும் நிலைபேறுடையதாகும், பகையாளி கூட - விரோதியும், பிரியமொடு உறவு ஆகுவான் - அன்புடனே அவனுடன் பந்தத்துவம் கொண்டாடுவான், பேச்சினில் பிழை வராது - அவன் சொல்லும் சொல்லில் பிசகே தோன்றாது (என்று சனங்கள் கருதுவர்), வரும் என நினைத்த பொருள் கை கூடி வரும் - பின் வரக்கூடும் என்று நினைக்கும் எல்லாப் பொருள்களும் அவனுக்குச் சித்தியாகும், அதிக வல்லமைகள் மிகவும் உண்டாம் - மிகுந்த சக்திகள் பெரிதும் அவனிடத்தே தோன்றும், மயிலேறி—, எ - று.

(வி - ரை) கடாக்ஷம் - கடைக்கண் பார்வை, அதாவது அருள்.

## 68. நட்பு நிலை

கதிரவ னுதிப்பதெங் கேநளின மெங்கே
களித்துள மலர்ந்த தென்ன
கார்மேக மெங்கே பசுந்தோகை யெங்கே
கருத்தினட் பான தென்ன
மதியமெங் கேபெருங் குமுதமெங் கேமுக
மலர்ந்துமகிழ் கொண்ட தென்ன
வல்லிரவு விடிவதெங் கேகோழி யெங்கே
மகிழ்ந்துகூ விடுத லென்ன

நிதியரச ரெங்கே யிருந்தாலு மவர்களொடு
நேசமொன் ருயிருக் கு
நீதிமிகு நல்லோர்க ளெங்கிருந்தாலு மவர்
நிறைபக்ஷ மறவார்கள் காண்
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவு சோணுட்ட திபனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) கதிரவன் உதிப்பது எங்கே - ஆகாயத்தில் சூரியன் தோன்றுவது எவ்வளவு தூரத்தில்?, நளினம் எங்கே - பூமியில் தாமரை உள்ள தடாகம் எவ்வளவு தூரத்தில்?, களித்து உளம் மலர்ந்தது என்ன - (ஒன்றுக்கொன்று வெகு தூரத்தில் இருந்தாலும்) மனம் மகிழ்ந்து பூத்தது என்ன ஆச்சரியம்!, கார் மேகம் எங்கே - ஆகாயத்தில் சஞ்சரிக்கும் கருத்த மேகம் எவ்வளவு தூரத்தில்?, பசுந் தோகை எங்கே - பூமி யிடத்தில் உள்ள பூஞ்சோலையில் சஞ்சரிக்கின்ற பசுமையான தொகையை உடைய மயில் எவ்வளவு தூரத்தில்?, கருத்தில் நட்பு ஆனதென்ன - (ஒன்றுக்கொன்று வெகு தூரத்தில் இருந்தாலும்) சந்தோஷமாக மயில் அழகிய தோகையை விரித்தாடும் அத்தகைய மனத்திடமாகக் கொள்ளும் சினேகம் உதித்தது என்ன ஆச்சரியம்!, மதியம் எங்கே - ஆகாயத்தில் உலவுகின்ற நிலா எவ்வளவு தூரத்தில்?, பெரும் குமுதம் எங்கே - தடாகத்தில் உள்ள பெரிய அல்லித்

தாமரை மலர் எவ்வளவு தூரத்தில்?, (ஒன்றுக்கொன்று வெகு தூரத்தில் இருந்தாலும்), மகிழ் கொண்டு மலர்ந்தது என்ன - மகிழ்ச்சி உற்றுப் பூத்தது என்ன ஆச்சரியம்?, வல் இரவு விடிவது எங்கே - கொடிய இராத்திரி விடிவதற்குச் சூரியன் கீழ் வானத்தில் உதிப்பது எவ்வளவு தூரத்தில்?, கோழி எங்கே - பூமியில் கூடுகளில் உள்ள கோழி எவ்வளவு தூரத்தில்?, (ஒன்றுக்கொன்று வெகு தூரத்தில் இருந்தாலும்) மகிழ்ந்து கூவிடுதல் என்ன - சந்தோஷித்துக் கூவுதல் எவ்வளவு ஆச்சரியம்!, நிதி அரசர் - செல்வம் படைத்த மன்னவர்கள், எங்கே இருந்தாலும் - எந்த இடத்தில் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும், அவர்களோடு நேசம் ஒன்ருய் இருக்கும் - அவர்களுக்கும் (குடிகளுக்கும்) நட்பு ஒரே நிகராக இருக்கும், நீதி மிகு நல்லோர்கள் - நியாய வழியிலேயே ஒழுகுகின்ற பெரியோர்கள், எங்கு இருந்தாலும் - வெகு தூரமுள்ள வெவ்வேறிடத்தில் வசித்திருந்தாலும், நிறை பட்சம் மறவார்கள் - பரஸ்பரம் உள்ள நிறைந்த அன்பில் மறக்கவே மாட்டார்கள், மதிலுடன் கோபுரமும் - கோட்டைகளும் கோபுரங்களும், வாவியும் - தடாகங்களும், புடை சூழ மருவு - நாலாப் பக்கங்களிலும் சூழ்ந்து பொருந்தப்பெற்ற, சோணுட்டு அதிபனே - சோழ நாட்டிற்கு இறைவனுக இருப்பவனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) மதில், அதனல் சூழப்பட்ட கோட்டைக்கானதால் ஆகுபெயர்.

## 69. காலம் அறிதல்

[அதாவது வலியான் மிகுதியுடையவனும் பகைமேல் செல்லல் உற்ற அரசன் அச் செலவிற்கு எற்ற காலத்தினை உணர்தல்.]

காகம் பகற்காலம் வென்றிடுங் கூகையைக்
கனகமுடி யரசர் தாமுங்
கருதுசய காலமது கண்டந்த வேளையிற்
காரிய முடித்து விடுவார்
மேகமுங் கார்கால மதுகண்டு பயிர்விளைய
மேன்மேலு மாரி பொழியும்
மிக்கான வறிவுளோர் வருதருண காலத்தின்
மிடியாள ருக்குதவு வார்
நாகரிக முறுகுயில் வசந்தகா லத்திலே
நலமென்று கந்து கூவு
நல்லோர் குறித்ததைப் பதருமலந்தந்த
நாளையின் முடிப்பர் கண்டாய்
வாகனைய காலைகன மாலைபுல் லெனுமுலக
வாடிக்கை நிசமல்ல வோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) பகற் காலம் - பகல் காலத்தில், கூகையை - தன்னினும் வலிமையுடைய கோட்டானை, காகம் வென்றிடும் - காகமானது ஜெயித்து விடும், கனக முடி அரசர்

தாமும் - பொன் கிரீடம் தரித்த மன்னர்களும், கருது ஜய காலம் அது கண்டு - எண்ணத் தகுந்த வெற்றி தரக்கூடிய சமயம் உணர்ந்து, அந்த வேளையில் காரியம் முடித்து விடுவார் - அந்தச் சமயத்தில் போர்வினையைச் செய்து முடித்து விடுவார்கள், மேகமும் கார்காலம் அது கண்டு - மேகமும் மழை காலம் நோக்கி, பயிர் விளைய - பயிர்கள் செழித்து வளருமாறு, மேன் மேலும் மாரி பொழியும் - இடைவிடாது மழை பெய்யும், மிக்கான அறிவுளோர் - அதிக புத்தி நுட்பம் உள்ள பெரியோர்கள், வரு தருண காலத்தில் - வரக்கூடிய தகுந்த பருவக் காலத்தில், மிடியாளருக்கு உதவுவார் - வறுமையிற் சிக்கியவர்களுக்கு உபகாரம் செய்வார்கள், நாகரிகம் உறு குயில் - நாகரிகம் உள்ள குயிலானது, வசந்த காலத்திலே - கோடைக் காலத்திலே, நலம் என்று உவந்து கூவும் - நல்ல காலம் இதுவென்று மகிழ்ந்து பாடாநிற்கும், நல்லோர் - பெரியோர், குறித்ததை - குறித்த வினையை, பதறாமல் - அவசரப் படாமல், அந்தந்த நாளையின் முடிப்பர் - அந்தந்தச் சமயத்தில் முடிப்பார்கள், வாகு அனைய காலை கனம் மாலை புல்லெனும் உலக வாடிக்கை - அழகை ஒத்த இளமைப் பருவமானது தருமம் செய்வதற்கு உறுதி யென்றும் முதுமைப் பருவமானது துச்சமென்றும் கூறும் உலக வழக்கம், நிசம் அல்லவோ - உண்மை அன்றோ?, மயிலேறி—, எ - று.

(வி - ரை)

காகம் பகற்காலம் வென்றிடும் கூகையை

............காரியம் முடித்து விடுவார். இதனோடு,

"பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது." —(குறள்)

என்பதனோடு ஒப்பிட்டு நோக்குக.

காலம் அல்லாத வழி வலிமையாற் பயனில்லை என்பது விளக்கி நின்றது. காலம் ஆவது:—வெம்மையும் குளிர்ச்சியும் தம்முள் ஒத்து நோய் செய்யாது தண்ணீரும் உணவும் முதலிய உடையதாய்ச் சேனை வருந்தாது செல்லும் இயல்பினதாம்.

## 70. இடன் அறிதல்

[அஃதாவது, வலிமையும் காலமும் அறிந்து பகைமேல் செல்வான் தான் வெல்லுதற் கேற்ற நிலத்தினை அறிதல்.]

தரையதனி லோடுதேர் நீள்கடலி லோடுமோ
சலதிமிசை யோடு கப்பல்
தரைமீதி லோடுமோ தண்ணீரி லுறுமுதலை
தன்முனே கரிநிற்கு மோ
விரைமலர் முடிப்பரமர் வேணியர வினைவெல்ல
மிகுகருட னுலாகு மோ
வேங்கைக ளிருக்கின்ற காடுதனி லஞ்சாமல்
வேறொருவர் செல்ல வசமோ
துரைகளைப் பெரியோரை யண்டிவாழ் வோர்தமை
துஷ்டர்பகை யென்ன செய்யுந் [த்

துணைகண்டு சேரிட மறிந்துசே ரென்றெளவை
சொன்னகதை பொய்யல்ல வே
வரையூது மாயனை யடுத்தலாற் பஞ்சவர்கள்
வன்போர் செயித்த தன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) தரை அதனில் ஓடு தேர் - தரை வழியே ஓடுகின்ற இரதம், நீள் கடலில் ஓடுமோ - பெரிய கடலின் மீது ஓடுமோ?, சலதி மிசை ஓடு கப்பல் - கடலின்மீது மிதந்து ஓடும் கப்பல், தரைமீதில் ஓடுமோ - தரையின்மீது ஓடுமோ?, தண்ணீரில் உறும் முதலை தன் முன்னே - சலத்தில் வசிக்கின்ற முதலையின் எதிரே, கரி நிற்குமோ - சலத்தில் இறங்கிய யானை எதிர்த்து நிற்குமோ?, விரை மலர் முடி பரமர் - வாசனை பொருந்திய கொன்றைப்பூவால் ஆகிய மாலை அணிந்த முடியை யுடைய சிவபெருமானின், வேணி அரவினை வெல்ல - சடையில் வசிக்கும் பாம்பினைச் செயிக்க, மிகு கருடனு லாகுமோ - வலிமையிற் சிறந்த கருடனால் இயலுமோ?, வேங்கைகள் இருக்கின்ற காடுதனில் - பயங்கரமான புலிகள் சஞ்சரிக்கின்ற வனங்களில், அஞ்சாமல் - பயப்படாமல், வேறொருவர்—, செல்ல வசமோ - போவதற்குச் சக்தியுடையவர் ஆவரோ?, துரைகளை - (பாதுகாக்கத் தகுந்த அரண் படை முதலியன உடைய) பிரபுக்களையும், பெரியோரை - பெரிய

வர்களேயும், அண்டி வாழ்வோர் தமை - அடுத்து வசிக்கின்றவர்களே, துட்டர் பகை என்ன செய்யும் - தீயர்களின் விரோதம் என்ன செய்யமுடியும்?, துணை கண்டு - தகுந்த துணைவரைத் தேர்ந்தெடுத்து, 'சேர் இடம் அறிந்து சேர்' - சேர்வதற்குரிய இடத்தை உணர்ந்து சேர்வாயாக என்று, ஔவை சொன்ன கதை பொய் அல்லவே - என்று ஔவைப் பிராட்டியார் அருளிச்செய்த வாக்கியம் சத்தியமே, வரை ஊதும் மாயனை அடுத்தலால் - புள்ளாங்குழல் ஊதுகின்ற மாய கிருஷ்ண மூர்த்தியை அடுத்ததால், பஞ்சவர்கள் - பஞ்சபாண்டவர்கள், வன்போர் செயித்தது அன்ருே - கொடிய பாரதப்போரில் வெற்றி பெற்றது இதற்குத் தகுந்த அத்தாட்சி அன்ருே?, மயிலேறி—, எ - று.

(வி - ரை)

தரையதனில் ஓடு தேர் நீள்கடலில் ஓடுமோ?
ஜலதிமிசை ஓடுகப்பல்
தரைமீதில் ஓடுமோ? இதனேடு

"கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து" —(குறள்)

(நிலத்தில் ஓடுகின்ற வலிய உருளேகளே உடைய பெரிய தேர்கள் கடலில் ஓடமாட்டாவாம்; கடலில் ஓடும் கப்பல் நிலத்தில் ஓடாது.)

என்பதனேடு ஒப்பிட்டு நோக்குக.

பகைமேல் சென்றவர்கள் பகைவர் இடங்களை அறிந்து அவற்றிற் கேற்ற கருவிகளால் வினை செய்தல் வேண்டும் என்பது தோன்ற நின்றது.

தண்ணீரில் உறுமுதலை தன் முன்னே கரிநிற்குமோ? இதனோடு,

"நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற" —(குறள்)

(முதலை ஆழமுடைய நீரின்கண் ஆயின் யானை முதலிய பிறவற்றை எல்லாம் தான் வெல்லும்; தரையில் அதனைப் பிற வெல்லாம் வென்றுவிடும்.)

என்பதனோடு ஒப்பிட்டு நோக்குக.

எனவே எல்லோரும் தத்தம் நிலத்தே வலியர் என்பதும் பிற இடங்களுக்குச் சென்றால் மாற்றார் வலியராய்விடுவர் என்பதும் பெறப்பட்டது. நிலைக்காத நீரிடத்தில் நிற்பது அசாத்தியம் ஆதலின் அவை யெல்லாம் முதலைக்குச் சுலபமாகும், அவை நிலைத்து நிற்கக்கூடிய நிலத்தின்கண் முதலை நிலைநிற்றல் அசாத்தியம் ஆதலின் அம் முதலை அவற்றிற்கெல்லாம் சுலபமாகிவிடும். பகைமேல் செல்லும் அரசர் பகைவர் நிற்றல் அசாத்திய மாகும் இடத்தை அறிந்து செல்வாராயின் பகைவர் தமக்கு எளியர் ஆவர்; அன்றித் தாம் நிற்றல் கூடாத இடத்துச் செல்வாராயின் அரசர்கள் அப்பகைவர்க்கு எளியராவார் என்னும் பொருள் தோன்றி நின்றமையின் இது பிறிது மொழிதல் அணி என்னும் அலங்

காரம். முன்னையதும் இவ்விதமே. பகைவரை அவர் நிற்க இயலாத இடத்துச் சென்று வெல்க என்பதாம்.

## 71. யாக்கை நிலையாமை

மனுநன்மாந் தாதாமு னவர்களெல்லாரு
மண்மே லிருந்து வாழ்ந்து
மடியா திருந்தபே ரில்லையவர் தேடியதை
வாரிவைத் தவருமில்லை
பனியதனை நம்பியே யேர்பூட்டு கதையெனப்
பாழான வுடலை நம்பிப்
பார்மீதி லின்னம்வெகு நாளிருப் போமென்று
பலகோடி நினைவை யெண்ணி
அனிதமாய் விருதாவின் மாய்வதே யல்லாம
லன்பாக நின் பதத்தை [ணர்க
யர்ச்சித்து முத்திபெறல் வேண்டுமென்றெண்
ணாசைவலை யிற்சுழலு வார்
வனிதையர்கள் காமவிகாரமே பகையாகு
மற்றுமொரு பகைமை யுண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) மனு - மனுச்சக்கிரவர்த்தியும், நன் மாந்தாதா - சிறந்த மாந்தாதா மன்னவனும், முன்னுனவர்கள் எல்லோரும் - முதலானோர் அனைவரில் (யாரும்), மண்

மேல் இருந்து வாழ்ந்து - பூமிமீது நிலையாக வாழ்ந்து வந்தவராய், மடியாது இருந்தபேர் இல்லை - சாகாது இருந்தவர்கள் இல்லை, அவர் தேடியதை வாரி வைத்தவரும் இல்லை - அவர்கள் தேடிச் சேகரித்து வைத்த ஐஸ்வரியத்தைத் தங்களுடையதென வாரித் தாமே அனுபவிக்க வைத்துக்கொண்ட பலசாலிகளும் இப்போதில்லை, பனி அதனை நம்பியே ஏர் பூட்டு கதை என - க்ஷணமாத்திரமே நிற்கும் பனித்துளிகளை நிலையாக நிற்கும் என்று நம்பி உழுதற்கு ஏர் கட்டிய கதை போன்று, பாழான உடலை நம்பி - ஒரு காலத்தில் அழிந்து போகும்படியான சரீரத்தைச் சதம் என நம்பி, பார்மீதில் - உலகத்தில், இன்னும் வெகுநாள் இருப்போம் என்று—, பலகோடி நினைவை எண்ணி - பல பல எண்ணங்கள் எண்ணி, அனிதமாய் விருதாவின் மாய்வதே அல்லாமல் - அநியாயமாக வீணுகச் செத்தொழிவதே அன்றி, அன்பாக - பக்தியுடன், நின் பதத்தை - உனது திருவடியை, அர்ச்சித்து - பூசித்து, முத்தி பெறல் வேண்டும் என்று எண்ணுர்கள் - மோக்ஷம் அடைய வேண்டும் என்று கொஞ்சமும் எண்ணமாட்டார்கள், ( அவர்கள் யார் எனில் ), ஆசை வலையில் சுழலுவார் - மண், பெண், பொன் என்ற ஆசைகளாகிய வலையில் சிக்குண்டு வருந்துபவர்களாகிய பேதையர்களேயாம், வனிதையர்கள் காம விகாரமே பகையாகும் - ஒருவனுக்கு மாதர்மீதுள்ள காம விகாரமே விரோதமாகும், மற்ருெரு பகையும் உண்டோ - அதனினும் வலிமையுடைத்தான வேறு விரோதமும் உலகில் இருக்கின்றதோ ? ( இல்லை ), மயிலேறி—, எ - று.

(வி - ரை) மனுக்கள் மொத்தம் பதினால்வர். அதில் ஏழாவது வைவஸ்வதமனுவே முக்கியமானவன். ஏனெனில் ஸ்ரீராமனது சூரிய வம்சத்திற்கு ஆதி புருஷன் இம்மனு பிரம்மனின் மானச புத்திரர்களாகிய நவப் பிரஜாபதிகளில் ஒருவனாகிய தட்சப்பிரஜாபதியின் குமாரிகளில் ஒருத்தியாகிய அதிதிக்கும் மரீசிப்பிரஜாபதியின் குமாரனாகிய காசியப மகாமுனிவனுக்கும் விவஸ்வான் என்ற பேர் படைத்த சூரியன் பிறந்தான்; அந்த விவஸ்வான் என்ற சூரியனுக்குப் பிறந்தவனே வைவஸ்வத மனு.

சூரிய குலத்து அரசர்களில் ஒருவன் மாந்தாதா. இவனைப் பற்றிக் கம்பர்பிரான்,

"....................புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையில் நீருண்ண வுலகாண்டோன்"

(இயற்கையிற் பகைமையுடைய ஆண்புலியும் மானும் அப்பகை இன்றி ஓர் நீர்த்துறையிலே வந்திறங்கி நீர் பருகும்படி உலகை ஆண்டவன்)

என்று கூறி யிருக்கின்றார்.

## 72. வேட்டகத் திகழ்ச்சி

வேட்டகந் தன்னிலே மருகன்வந் திடுமளவின்
மேன்மேலு முபசரித் து [கை
விருந்துகள் சமைத்து நெய்பாறயிர் பதார்த்தவ
வேண்டுவ வெலாமமைப் பார்

ஊட்டமிகு வர்க்கவகை செய்திடுவர் தைலமிட்
டுறுதியாய் முழுகிவிப் பா
ரோயாது தின்னவே பாக்கிலை கொடுத்திடுவ
ருற்றநா ளுலாகி லோ
நாட்டமொரு படியிறங் குவதுபோன் மரியாதை
நாளுக்கு நாள்குறைவு றும் [வென்று
நகைசெய்வர் மைத்துனர்க ளலுவல்பார் போ
நாணுமன் மாமி சொல்வாள்
வாட்டமனை யாளொரு துரும்பாய் மதிப்பளவன்
மட்டியினு மட்டி யன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) வேட்டகம் தன்னிலே மருமகன் வந்திடும் அளவில் - மாமியார் வீட்டிற்கு மருமகப்பிள்ளை வந்த சமயத்தில், மேன்மேலும் உபசரித்து - அடிக்கடி சந்தோஷ விசாரணை செய்து, விருந்துகள் சமைத்து - புதியன புதியன சமைத்து, நெய், பால், தயிர் பதார்த்த வகை—, வேண்டுவன எல்லாம் அமைப்பார் - மருமகனுக்குத் திருப்தி தருவனவற்றை எல்லாம் படைப்பார்கள், ஊட்டம் மிகு - பலம் அதிகரித்தற்குரிய, வர்க்க வகை - தின்பண்ட வகை, செய்திடுவர்—, தைலம் இட்டு - எண்ணெய் இட்டு, உறுதியாய் முழுகுவிப்பார் - நல்ல ஸ்நாநம் செய்விப்பார், பாக்கு இலை ஒயாது தின்னவே கொடுத்திடுவர் - இடையறாது

தாம்பூலம் மெல்லக் கொடுப்பார், உற்ற நாள் நாலாகிலோ - கழிவுற்ற நாட்கள் ஒரு நான்கு ஆய்விட்டால், நாட்டம் ஒரு படி இறங்குவது போல் - அன்பு ஒரு படி இறங்கினாற் போன்று, நாளுக்கு நாள் - தினத்திற்குத் தினம், மரியாதை குறைவுறும் - மருமகனுக்குச் செலுத்தப்படும் மரியாதை குறைந்துவிடும், மைத்துனர்கள்—, நகைசெய்வர் - சிரிப்பார்கள், மாமி - மாமியார், நாணுமல் - கூசாமல், அலுவல் பார் போ - ஏதேனும் காரியஞ் செய் போ, என்று சொல்வாள்—, வாட்டம் மனையாளும் ( தன்னுடைய பிறந்தகத்திற்கு இவன் வந்ததால் சுமையாய்விட்டதே என்று ) வாடும் பாரியாளும், துரும்பாய் மதிப்பாள், ( அப்படி இருக்க வேட்டகத்தில் நான்கு நாளுக்குமேல் தங்கும் மருமகப்பிள்ளை ), மட்டியினும் மட்டி அன்றோ - மூடனினும் மூடன் அன்றோ, மயிலேறி—, எ - று.

## 73. செல்வம் நிலையாமை

ஓடமிடு மிடமது மணற்சுடுஞ் சுடுமிடமு
மோடமிக வே நடக் கு
முற்றதோ ராற்றின்மடு மேடாகு மேடெலா
முறுபுனல்கொண் மடுவாயி டும்
நாடுகா டாகுமுயர் காடுநா டாகிவிடு
நவில்சகடு மேல்கீழ தாம்
நடையூறு சந்தைபல கூடுமுட னேகலையு
நன்னிலவு மிருளாய் விடும்

நீடுபகல் போயபின் இரவாகு மிரவுபோய்
நிறைபகற் போதாய் விடும்
நிதியோர் மிடித்திடுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்
மாடுமனை பாரிசன மக்கணிதி பூஷணமு
மருவுகன வாகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) ஓடம் இடும் இடம் அது மணல் - கப்பல் மிதக்கத் தகுந்த நீர்ப்பரப்பு வெறுந்தரையாகிவிடலாம், சுடும் இடமும் ஓடம் மிகவே நடக்கும் - மணல் சுடும் வெறுந்தரையும் நீர் நிறையக் கப்பல் ஓடலாம், ஆற்றின் உற்றதோர் மடு மேடாகும் - நதியில் பொருந்தியது ஓர் மடுவானது மேடாகலாம், மேடெல்லாம் உறு புனல் கொள் மடுவாய் விடும் - எல்லா மேடுகளும் மிகுந்த நீர் நிறைந்த மடுவாய் விடலாம், நாடு காடாகும் - தேசங்கள் வனங்களாகலாம், காடு நாடாகி விடும் - வனங்கள் தேசமாகலாம், (வேகம் உடையதென்று) நவில் சகடு மேல் கீழ் அது ஆம் - கூறப்படும் சக்கரம் (உடைய ரதமானது) மேல் கீழாகலாம் கீழ்மேலாகலாம், நடை ஊறு சந்தை பல கூடும் - சனங்கள் நடமாட்டம் மிகுந்த பலசந்தைகள் கூடி, உடனே கலையும்—, நீடு பகல் போய் பின்பு இரவாகும் - நீண்ட பகற்பொழுது சாய்ந்த பிறகு இராத்திரி ஆகும், இரவுபோய்

நிறைபகல் போதாய்விடும் - இராத்திரி விடிந்திடில் நிறைந்த பகற்பொழுது ஆய்விடும், (அதுபோல) நிதியோர் மிடித்திடுவர் - செல்வந்தர் தரித்திரர் ஆய்விடுவர், மிடியோர் செழித்திடுவர் - தரித்திரர் செல்வ மிகுந்து செழிப்புறுவர், வாழ்வு நிசமல்ல - அதனால் மனித வாழ்க்கை நிலைபெற்றதன்று, மாடு, மனை, பாரி, சனம், மக்கள், நிதி, பூஷணமும் - மாடு, வீடு, மனைவி, பந்து, பிள்ளைகள், செல்வம், ஆபரணங்கள் இவையெல்லாம், மருவு கனவு ஆகும் அன்றோ - உறக்கத்தில் பொருந்திய கனவுக்கு நிகராகும் அல்லவா ?, மயிலேறி—, எ - று.

## 74. பிறந்தாற் பெறுபேறு

சட்மொன் றெடுத்தாற் புவிக்குநல் லவனென்று
தன்பேர் விளங்க வேண்டுஞ்
சதிருடனி தல்லாது மெய்ஞ்ஞானி யென்றவ
தரிக்கவே வேண்டு மல்லால்
திடமினிய ரணசூர வீரனிவ னென்னவே
திசைமெச்ச வேண்டு மல்லால்
தேகியென வருபவர்க் கில்லையென் றுமலே
செய்யவே வேண்டு மல்லால்
அடைவுடன் பலகல்வி யாராய்ந்து வித்துவா
னாகவே வேண்டு மல்லா
லறிவான துரைமக்க ளாகவர வேண்டுமிவ
ரதிக பூபால ரையா

வடகுவடு கிடுகிடென வெழுகடலு மலைமெறிய
மணியுரகன் முடிக ணெரிய
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) சடம் ஒன்று எடுத்தால் - உலகில் உடல் வாய்த்துப் பிறந்தால், புவிக்கு நல்லவன் என்று தன் பேர் விளங்க வேண்டும் - உலகத்தாருக்குத் தான் சிறந்தவன் என்ற கீர்த்தி துலங்கவேண்டும், இது அல்லாது - இஃது இல்லையேல், சதிர்உடன்—, மெய்ஞ்ஞானி என்று அவதரிக்க வேண்டும் - உண்மையான ஞானி என்று பேர் பெறப் பிறக்க வேண்டும், அல்லால்—, திடம் இனிய ரணசூரன் இவன் என்னவே - வலிமை மிகுந்த யுத்தவீரன் இவன் என்று, திசை மெச்ச வேண்டும் - திக்கில் உள்ளவர் எல்லாம் போற்றவேண்டும், அல்லால்—, தேகி என வருபவர்க்கு இல்லை என்னமலே - 'கொடு' என்று இரக்க வருபவருக்கு இல்லை என்று கூறுமல், செய்ய வேண்டும் - ஈகை புரிய வேண்டும், அல்லால்—, அடைவுடன் பல கல்வி ஆராய்ந்து - முறைமையாக பல நூல்கள் ஆராய்ச்சிசெய்து, வித்துவான் ஆகவேண்டும்—, அல்லால்—, அறிவான துரைமக்கள் ஆக வர வேண்டும் - புத்தி மிகுந்த சீமான்களாகத் திகழவேண்டும், இவர் அதிக பூபாலர் - மேற்கூறிய இவர்கள் எல்லாரும் பூமியை மிகவும் பாதுகாப்பவர் ஆவார்கள், ஐயா - இறைவனே! வட குவடு கிடுகிடென - வடக்கே உள்ள மேருகிரி கிடுகிடுவென்று ஆட்டங் கொடுக்கவும், எழு கடலும் அலை

எறிய - ஏழு சமுத்திரங்களும் அலை மோதவும், மணி உரகன் முடிகள் நெரிய - இரத்தினங்கள் பொருந்திய ஆயிரம் பணாமுடிகள் உடைய ஆதிசேடப்பாம்பின் தலைகள் சிதறவும், மயிலேறி—, எ - று.

(வி - ரை) கடல் ஏழு - உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன்.

## 75. வேசை நிந்தை

தேடித்தம் வீட்டிற் பணக்காரர் வந்திடிற்
 றேகசீ வன்போல வே
சிநேகித்த வும்மையொரு பொழுது காணாவிடிற்
 செல்லுரு தன்ன மென்றே
கூடிச் சுகிப்பரென் னுசையுன் மேலென்று
 கூசாம லாணை யிடுவார்
கொங்கையை வெடிக்கப்பிடிக்கக் கொடுத்திதழ்
 கொடுப்பர்சும் பன முகப்பர்
வேடிக்கை பேசியே கைமுதல் பறித்தபின்
 வேறுபட நிந்தை செய்து
விடவிடப் பேசுவார் தாய்கலக மூட்டியே
 விட்டுத் துரத்தி விடுவார்
வாடிக்கை யாயிந்த வண்டப் பாத்தையர்
 மயக்கத்தை நம்ப லாமோ

**மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.**

(இ - ள்) பணக்காரர் தேடித் தம் வீட்டில் வந்திடில் - செல்வந்தர்கள் நாடித் தமது வீட்டிற்குள் நுழைந்து விட்டால், தேக சீவன் போலவே - உடம்பும் உயிரும் கலந்திருப்பதுபோலவே, சினேகித்த உம்மை - என்னால் காதலிக்கப்பெற்ற உம்மை, ஒரு பொழுது காணவிடில் - ஒரு விநாடியும் பார்க்காமற் போனால், அன்னம் செல்லுறாது - எனக்குச் சாப்பாடு ஏற்பதில்லை, என்றே - என்று கூறி, கூடிச் சுகிப்பவர் - சேர்ந்து இன்பம் அடைவர், என் ஆசை உன் மேல் என்று - எனது அன்பு உன் ஒருவன்மீது தான் என்று சொல்லி, கூசாமல் - சற்றும் நாணாமல், ஆணை இடுவார்—, கொங்கையை வெடிக்கப் பிடிக்கக் கொடுப்பார் - ஸ்தனங்கள் வெடித்துப் போகுமே என்னுமாறு அப் புருடர்கள் பிடிக்குமாறு தந்திடுவார்கள், இதழ் கொடுப்பர் - தம் உதடுகளை அப்புருடர்களுக்குக் கொடுத்தவர்களாய், சும்பனம் உகப்பர் - அவர்கள் அவற்றைச் சுவைக்க மகிழ்வர், வேடிக்கை பேசியே - விநோதங்கள் பேசியவாறே, கைமுதல் பறித்த பின் - புருடர்கள் வசம் இருக்கும் செல்வம் முழுவதையும் அபகரித்துக் கொண்ட பின்னர், வேறுபட - மனம் மாறுபட்டு, நிந்தை செய்து - புருடர்களைப் பழிதூற்றி, விடவிடப் பேசுவார் - அவர்களது கௌரவம் குலையும் விதத்தில் பேசுவார்கள், தாய் விட்டு கலகம் மூட்டி - தமது தாய்மார்களை விடுத்துக் கலகம்

மூளச் செய்து, துரத்தி விடுவர் - தமது வீட்டை விட்டுத் துரத்திவிடுவார், வாடிக்கையாம் - இது வேசியர்களின் வழக்கமாகும், வண்டப் பரத்தையர்கள் மயக்கத்தை நம்பலாமோ - தீய வேசிகளின் மயக்கத்தை நாம் நம்பலாமோ? (கூடாது), மயிலேறி—, எ - று.

## 76. இதற்கு இது உறுதி யெனல்

கைக்குறுதி வேல்வில் மனைக்குறுதி மனையாள்
கவிக்குறுதி பொருளடக் கங்
கன்னியர் தமக்குறுதி கற்புடைமை சொற்குறுதி
கண்டிடிற் சத்ய வசனங்
மெய்க்குறுதி முன்பின் சபைக்குறுதி வித்வசனம்
வேசையர்க் குறுதி தேடல்
விரகருக் குறுதிபெண் மூப்பினுக் குறுதியூண்
வீரருக் குறுதி தீரம்
செய்க்குறுதி நீரரும் பார்க்குறுதி செங்கோல்
செழும்படைக் குறுதி வேழஞ்
செல்வந் தனக்குறுதி பிள்ளைக ணகர்க்குறுதி
சேர்ந்திடுஞ் சர்ச்சனர்க ளாம்
மைக்குறுதி யாகிய விழிக்குற மடந்தைசுர
மங்கைமரு வுந்தலைவ னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கைக்கு உறுதி வேல் வில் - ஒரு படைவீரன் கரத்திற்கு உறுதியானது வேலும் வில்லுமாகும், மனைக்கு உறுதி மனையாள் - வீட்டிற்கு உறுதியாவது பாரியை ஆவாள், கவிக்கு உறுதி பொருள் அடக்கம் - செய்யுளுக்கு உறுதியாவது நற்பொருள் அடக்கி வைப்பதாகும், கன்னியர் தமக்கு உறுதி கற்புடைமை - மாதர்களுக்கு உறுதி பதிவிரதா தருமமாகும், சொற்கு உறுதி கண்டிடில் சத்திய வசனம் - சொல்லுக்கு உறுதியாவது ஆராய்ந்து பார்க்குங்கால் உண்மை பேசுதலாகும், மெய்க்கு உறுதி முன் பின் - ஒருவன் உடம்புக்கு உறுதியாவது அண்ணன் தம்பிகளாகும், சபைக்கு உறுதி வித்வ சனம் - சபைக்கு உறுதியாவது படித்த மக்களாகும், வேசையர்க்கு உறுதி தேடல் - வேசிகளுக்கு உறுதியாவது நிறைய செல்வம் தரும் ஆடவர்களைத் தேடிப் பிடித்தலாகும், விரகருக்கு உறுதி பெண் - பிரிவாற்றாமையால் வருந்துபவருக்கு உறுதியாவது தமக்குரிய மாதர்களைச் சேருதலாகும், மூப்பினுக்கு உறுதி ஊண் - முதிர்ந்த வயதிற்கு உறுதியாவது நல்ல உணவாகும், வீரருக்கு உறுதி தீரம் - வீரருக்கு உறுதியாவது போரில் புறங்கொடாத ஆண்மையாகும், செய்க்கு உறுதி நீர் - நிலத்திற்கு உறுதி ஜலமாகும், அரும் பார்க்கு உறுதி செங்கோல் - அரிய பூமிக்கு உறுதியானது மன்னவனது நெறியான ஆட்சியாகும், செழும் படைக்கு உறுதி வேழம் - செழுமையான சேனைக்கு உறுதியாவது யானைப் படையாகும், செல்வம் தனக்கு உறுதி பிள்ளைகள் - ஐஸ்வரியத்திற்கு உறுதியாவது ஒருவனுக்குப்

பிறக்கும் பிள்ளைகளாகும், நகர்க்கு உறுதி சேர்ந்திடு சர்ச் சனர்கள் - ஒரு நகருக்கு உறுதியாவது அதில் வந்து சேரும் சாது சனங்களாகும், மைக்கு உறுதி ஆகிய விழி குற மடந்தை சுர மங்கை மருவு தலைவனே - இடும் அஞ்ச னத்திற்கு உறுதி ஆகிய கண்களை யுடைய குறவர் குலத் துதித்த வள்ளி நாயகியாரையும் வானவர் மங்கையாகிய தெய்வயானையையும் புணரும் இறைவனே!, மயிலேறி—, எ - று.

## 77. வறுமையிற் சிறுமை

வறுமைதான் வந்திடிற் ருய்பழுது சொல்லுவாண்
மனையாட்டி சற்று மெண்ணுள்
வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்
சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது
சிந்தையிற் றைரிய மில்லை
செய்யசபை தன்னிலே சென்றுவர வெட்கமாஞ்
செல்வரைக் காணி னுணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரில்
உயிருடன் செத்த பிணமாம்
உலகம் பழித்திடும் பெருமையோர் முன்புசென்
றொருவரொடு செய்தி சொன்னல்

மறுவசன முஞ்சொலார் துன்பினில் இன்பம்இது
வந்தணுகி டாதருளு வாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) வறுமை வந்திடில் - தரித்திரம் உண்டானால், தாய் பழுது சொல்லுவாள் - பெற்ற தாயும் குற்றம் கூறுவாள், மனையாட்டி சற்றும் எண்ணாள் - மனைவியும் புருடனை மரியாதையாக நினைக்கமாட்டாள், வாக்கில் பிறக்கின்ற சொல் எல்லாம் - தரித்திரனின் வாயில் தோன்றுகின்ற பேச்சனைத்தும், பொல்லாத வசனமாய் வந்து விளையும் - தீங்குள்ள பேச்சாகிப் பலனும் தீமையாகவே பலிக்கும், சிறுமையொடு தொலையா(த) விசாரமே அல்லாது - இழிவும் ஒழியாத துயரமும் ஏற்படுவதன்றி, சிந்தையில் தைரிய மில்லை - மனத்தில் உறுதி யில்லை, செய்ய சபை தன்னிலே சென்று வர வெட்கம் ஆம் - செம்மையான கற்றோர் சபைக்குச் செல்லவும் அவனுக்கு நாணம் தோன்றும், செல்வரைக் காணில் நாணும் - பணக்காரர்களைப் பார்த்தால் கூசுவான், உறுதி பெறு வீரமும் குன்றிடும் - திண்மை பொருந்திய ஆண்மையும் குறைந்துவிடும், விருந்து வரில் உயிருடன் செத்த பிணம் ஆம் - விருந்தாளி வந்துவிட்டால்உயிர் நீங்கிய உடல் போன்றாகிவிடுவான், உலகம் பழித்திடும் - உலகத்தார் அவனை நிந்திப்பார், பெருமையோர் முன்பு சென்று ஒருவரொடு செய்தி சொன்னால் - பெருமையுடையோர் கூட்டத்திற்குச் சென்று அங்கு இருக்கும்

ஒருவனோடு தரித்திரன் ஏதாவ தொன்றின் சமாசாரம் சொல்வானாகில், மறு வசனமும் சொல்லார் - பதில் வார்த்தையும் சொல்லமாட்டார்கள், துன்பினில் துன்பம் இது - இத் தரித்திரம் துக்கங்களுக்கெல்லாம் துக்கமாகும், (ஆதலின் அது), வந்து அணுகிடாது அருளுவாய் - எனக்கும் எவருக்கும் வந்து அடையாதபடி கிருபை செய்வாயாக!, மயிலேறி—, எ - று.

## 78. தீச்சார்பால் நன்மை இழப்பு

ஆனைதண் ணீரில்நிழல் பார்த்திடத் தவளைசென்
றங்கே கலக்கி உலவும்
ஆயிரம் பேர்கூடி வீடுகட் டிடில்ஏதம்
அறைகுறளு முடனே வரும்
ஏனைநற் பெரியோர்கள் போஜனஞ் செயுமளவில்
ஈக்கிடந் திசைகேட தாம்
இன்பமிகு பசுவிலே கன்றுசென் றூட்டுதற்
கினியகோன் அதுதடுக் கும்
சேனைமன் னவரென்ன கருமநிய மிக்கினுஞ்
சிறியோர் களால் குறைபடுஞ்
சிங்கத்தை யும்பெரிய ரிஷபத்தை யும்பகைமை
செய்ததொரு நரியல்ல வோ
மானையுந் திகழ்தெய்வ யானையுந் தழுவுமணி
மார்பனே அருளாள னே

**மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு**
**மலைமேவு குமரேச னே.**

(இ - ள்) ஆனை தண்ணீரின் நிழல் பார்த்திட - உருவத்தில் பெரிய யானையானது தண்ணீரில் தனது நிழலைப் பார்த்துக்கொண் டிருக்கும்போது, தவளை அங்கே சென்று கலக்கி உலவும் - உருவத்தில் மிகச் சிறிய தவளை யானது அவ்விடத்தே சென்று தண்ணீரைக் கலக்கிய வண்ணமாகத் திரிந்துகொண் டிருக்கும், ஆயிரம்பேர் கூடி வீடு கட்டிடில் - ஆயிரம்பேர் சேர்ந்து திறமையுடன் நல்ல வீடு கட்டினாலும், ஏதம் அறையும் குறளும் உடனே வரும் - கட்டும்போது இல்லாது முடிந்த க்ஷணமே குற்றமட்டும் சொல்லுவதற்குக் கோள்சொல்லுவான் ஒருவன் வந்து தோன்றுவான், ஏனை - மற்றும், நல் பெரியோர்கள் போஜனம் செய்யும் அளவில் - சிறந்த பெருமையை யுடையோர் சாப்பாடு சாப்பிடும் சமயத்தில், ஈ கிடந்து இசை கேடு அது ஆம் - ஈயானது சாதத்தில் விழுந்து வாந்தி எடுத்தல் முதலிய பெருமை கெடுக்கும் நிலையினை உண்டாக்கிவிடும், இன்ப மிகு பசுவிலே கன்று சென்று ஊட்டுதற்கு - (தன் கன்றின் மீது) இனிய ஆசை மிகுந்த பசுவினிடத்தில் அதன் கன்றானது சென்று பால் ஊட்டுவதற்கு, இனிய கோன் அது தடுக்கும் - (பசு தனக்குப் பால் தருவதால் அதன் பால் இனியது என்று பாராட்டும் இடையன்) பால் ஊட்டுவதி னின்றும் கன்றினைத் தடுப்பான், சேனை மன்னவர் என்ன கருமம் நியமிக்கினும் - சேனையாகிய அங்கத்தினை

உடைய அரசர்கள் என்ன தொழிலை இயற்றும்படி கட்டளை யிட்டாலும் (அத்தொழில்), சிறியோர்களால் குறைபடும் - கீழ்மக்களால் கெட்டுவிடும், சிங்கத்தையும் பெரிய ரிஷபத்தையும் - சிம்மத்திற்கும் பெரிய எருதுக்கும், பகைமை செய்தது ஒரு நரி அல்லவோ - விரோதம் மூட்டியது அற்ப நரிதான் அன்றோ?, மானையும் - மான்போன்றவளான வள்ளியையும், திகழ் தெய்வயானை(யை)யும் தழுவும் - கிரியாசக்தி பிரகாசிக்கின்ற தெய்வயானையையும் சேரும், மணிமார்பனே!, இரத்தினம்போன்ற மார்பை உடையவனே!, அருள் ஆளனே - கிருபையை ஆளுபவனே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) குறளை - கோட் சொல்லுபவன்; இங்கு ஈற்றுயிர்மெய் கெட்டுக் 'குறள்' மாத்திரமாய் வந்தது.

நரி சிங்கத்திற்கும் எருதுவுக்கும் பகை மூட்டியது:— ஓர் வனத்தில் சிங்கமொன்றும் எருது ஒன்றும் நட்புகொண்டிருந்தன. அதனைக் கண்டு மனம் பொறாத ஓர் நரியானது அவை யிரண்டும் தனித்தனியே இரை தேடிக்கொண்டிருந்த சமயம் கலகம் மூட்டிச் சிங்கத்தைக் கொண்டு எருதினைக் கொல்வித்தது.

## 79. இடையூறுற்றும் பயன்படுபவை

ஆறுதண் ணீர்வற்றி விட்டாலு மூற்றுநீ
ரமுதபா னங்கொடுக்கு

மாதவனை யொருபாதி கட்செவி மறைத்தாலு
மப்போது முதவிசெய் வன்
கூறுமதி தேய்பிறைய தாகவே குலையினுங்
குவலயத் திருள்சிதைக் கும்
கொல்லைதான சாவிபோய் விட்டாலு மங்குவரு
குருவிக்கு மேய்ச்ச லுண்டு
வீறுட னுதாரிதான் மிடியான போதினிலு
மிகநாடி வருப வர்க்கு
வேறுவகை யில்லையென் றுரையாதி யன்றன
வியந்துள மகிழ்ந் துதவுவான்
மாறுபடு சூரசங் காரகம் பீரனே
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) ஆறு தண்ணீர் வற்றி விட்டாலும் - நதியானது ஜலம் இல்லாமல் வறண்டு போயினும், ஊற்று நீர் அமுதபானம் கொடுக்கும் - ஊற்று நீராகிய குடிநீர் அளிக்கும், ஆதவனை - சூரியனை, ஒரு பாதி கட்செவி மறைத்தாலும் - ஒரு பாதி அளவுக்கு (கேது) பாம்பு விழுங்கி மறைத்தாலும், அப்போதும் உதவி செய்வான் - அந்தச் சமயத்தும் ஒளிதரும் உபகாரத்தை செய்வான், கூறு மதி - மதித்துக் கூறப்படும் சந்திரனனவன், தேய்பிறையது

ஆகவே குறையினும் - தேய்ந்து தேய்ந்து பிறையாகக் குறைந்து போயினும், குவலயத்து இருள் சிதைக்கும் - பூவுலகத்தின் இருட்டை ஓட்டும், கொல்லை - புன்செய் என்று சொல்லப்படும் கொல்லையானது, சாவி போய் விட்டாலும்-விளைவு தவறி விட்டாலும், அங்கு வரும் - அவ் விடத்தே வருகின்ற, குருவிக்கு மேய்ச்சல் உண்டு - குருவி கள் முதலிய சிறு பறவைகளுக்குக் கொத்தித் தின்ன இரை உண்டு, வீறுடன் உதாரி - பெருமையுடன் உபகாரமும் பொருந்திய கொடையாள் ஒருவன், தான் மிடியான போதி லும் - தான் தரித்திரன் ஆனபோதிலும், மிக நாடி வரு பவர்க்கு - பொருளை மிக விரும்பிவரும் இரவலர்க்கு, வேறு வகை இல்லை என்று - உதவுவதற்கு வேறு வழி இல்லையே என்று, உரையாது - சொல்லாது, வியந்து இயன்ற அளவு மகிழ்ந்து உதவுவான் - (என் தரித்திர நிலையிலும் அடி யேனைக் கிருதார்த்தனுக்க வந்தீர்களே என்று) பாராட்டிக் கூறித் தன்னால் முடிந்த அளவு உள்ளம் உவந்து உபகாரஞ் செய்வான், மாறுபடு - பகைத்த, சூர சங்கார கம்பீரனே - சூரபதுமனை அழித்த பெருமையோனே!, வடிவேல் அணிந்த முருகா - கூரிய வேலாயுதந் தரித்த முருகக் கடவுளே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) கட்செவி - கண்ணே காதாக உடைய பாம்பிற்குக் காரணக்குறி; இங்குக் கேதுவை உணர்த்தி நிற்கும்.

## 80. இன்னவர்க்கு இது இல்லையெனல்

சார்பிலா தவருக்கு நிலையேது முதலிலா
தவருக் கிலாப மேது
தயையிலா தவர் தமக் குறவேது பணமிலா
தார்க்கேது வேசை யுறவு
ஊரிலா தவர்தமக் கரசேது பசிவேளை
யுண்டிடார்க் குறுதி நிலையே
துண்மையில் லாதவர்க் கறமேது முயல்விலார்க்
குறுவதொரு செல்வ மேது
சோர்விலா தவருக்கு மற்றுமொரு பயமேது
சுகமிலார்க் காசை யேது
துர்க்குணமி லாதவர்க் கெதிராளி யேதிடர்செய்
துஷ்டார்க் கிரக்க மேது
மார்புருவ வாலிமே லஸ்திரம் விடுத்தநெடு
மான் மருகனான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) சார்பிலா தவருக்கு - பற்றுக்கோடில்லாதவருக்கு, நிலையேது - நிற்கும் நிலை எது?, முதல் இலாதவருக்கு இலாபம் ஏது - முதற்பொருள் இல்லாதவருக்கு ஊதியம் ஏது?, தயை இலாதவர் தமக்கு உறவு ஏது - அருள் இல்லாதவருக்கு பந்துக்கள் ஏது?, பணம் இலா

தார்க்கு வேசை உறவு எது - பணம் இல்லாதவருக்கு வேசியரின் நட்பு எது?, ஊர் இலாதவர் தமக்கு அரசு எது - ஊர்கள் சொந்தமில்லாதவருக்கு அரசாட்சி எது?, பசிவேளை உண்டிடார்க்கு உறுதி நிலை எது - பசி எடுக்கும் போது சாப்பிடாதவனுக்குக் கட்டமைந்த உடல் நிலை எது?, உண்மை இல்லாத பேர்க்கு அறம் எது - சத்தியம் இல்லாதவர்களுக்குத் தருமம் எது?, முயல்வு இல்லார்க்கு உறுவது ஒரு செல்வம் எது - வினைமுயற்சி இல்லாதவர்க்கு மிக்க வருவதாகிய செல்வம் எது?, சோர்விலாதவருக்கு மற்றும் ஒரு பயம் எது - தளர்ச்சியில்லாத ஊக்கம் உடையவர்களுக்கு அஞ்ச வருவதொரு பொருள் எது?, சுகம் இல்லார்க்கு ஆசை எது - இன்பம் அற்றவர்களுக்கு இச்சை எது?, துர்க்குணம் இல்லாதவர்க்கு எதிராளி எது - தீய குணம் ஒழிந்தவருக்குப் பகைவர் எது?, இடர் செய் துஷ்டர்க்கு இரக்கம் எது - துன்பத்தையே செய்யும் தீயவர்களுக்கு அருள் எது?, வாலி மார்பு உருவ - வாலியின் மார்பு முற்றிலும் உருவிப் போமாறு, மேல் அஸ்திரம் விடுத்த - அவன் மார்பில் அம்பு எறிந்த, நெடுமால் மருகன் ஆன முருகா - திரிவிக்கிரமன் ஆகிய மகாவிஷ்ணுவின் திருமருகனான முருகக்கடவுளே!, மயிலேறி—, எ - று.

## 81. இதினும் இது நன்றெனல்

பஞ்சரித் தருமையறி யார்பொருளை யெய்தலிற்
பலர்மனைப் பிச்சை நன்று

பரிவாக வுபசார மில்லா விருந்தினிற்
பட்டினி யிருக்கை நன்று
தஞ்சமொரு முயலையடு வென்றிதனில் யானையொ
சமர்செய்து தோற்ற னன்று [டு
சரசகுண மில்லாத பெண்களைச் சேர்தலிற்
சன்னியா சித்த னன்று
அஞ்சலார் தங்களொடு நட்பா யிருப்பதனி
லரவினொடு பழகுவது நன்
றந்தணர்க் காபத்தி லுதவா திருப்பதனி
லாருயிர் விடுத்த னன்று
வஞ்சக ருடன்கூடி வாழ்தலிற் றனியே
வருந்திடுஞ் சிறுமை நன்று
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) அருமை அறியார் பொருளை - தரித்திரக் கஷ்டத்தின் அருமையைத் தெரிந்து கொள்ளாத லோபிகளின் பொருளை, பஞ்சரித்து - கெஞ்சி, எய்தலின் - அடைவதைக் காட்டினும், பலர் மனை பிச்சை நன்று - பலர் வீடுகளிலும் இடும் பிச்சையே நல்லதாகும், பரிவாக உபசாரம் இல்லா (த) விருந்தினின் - அன்புடன் விசாரிப்பு இல்லாத விருந்து போசனத்தைக் காட்டினும், பட்டினி இருக்கை நன்று - உண்ணாமல் இருப்பதே நலமாகும், தஞ்சம் ஒரு முயலை அடு வென்றிதனில் - எளிமை

பொருந்திய ஒரு சிறு முயலைக் கொன்று பெறும் வெற்றியைக் காட்டினும், யானையொடு சமர் செய்து தோற்றல் நன்று - யானையொடு போர் செய்து தோல்வி அடைதல் சிரேட்டமாகும், சரச குணம் இல்லாத பெண்களை சேர்தலில் - இனிய குணம் இல்லாத மாதரோடு வாழ்வதைக் காட்டினும், சன்னியாசித்தல் நன்று - துறவு கொள்ளுதல் சிறப்பாகும், அஞ்சலார் தங்களோடு நட்பாய் இருப்பதனின் - பகைவர்களுடன் சினேகமாய் இருப்பதைக் காட்டினும், அரவினொடு பழகுவது நன்று - பாம்பினொடு பழகுவதே உத்தமமாகும், அந்தணர்க்கு ஆபத்தில் உதவாது இருப்பதனின் - அழகிய அருள் உடையவருக்கு ஆபத்துக் காலத்தில் உபகாரஞ் செய்யாது இருப்பதைக் காட்டினும், ஆருயிர் விடுத்தல் நன்று - அரிய சீவனைப் போக்குதல் உத்கிருஷ்டமாகும், வஞ்சகருடன் கூடி வாழ்தலின் தனியே வருந்திடும் சிறுமை நன்று - கபட எண்ணம் உடையவர்களுடன் சேர்ந்து வாழ்வதைக் காட்டினும் தனியாக வாழ்ந்து துயருறும் கஷ்டமே மேலானது, மயிலேறி—, எ - று.

## 82. நிலையாதவை

கொற்றவர்கள் ராணுவமு மாறுநே ராகிய
குளங்களும் வேசை யுறவுங்
குணமிலார் நேசமும் பாம்பொடு பழக்கமுங்
குலவுநீர் விளையாட லும்

பற்றலார் தமதிடை வருந்துவிசு வாசமும்
பழையதா யாதி நிணறும்
பரதார மாதரது போகமும் பெருகிவரு
பாங்கான வாற்று வரவும்
நற்றுமொரு துர்ப்புத்தி கேட்கின்ற பேருறவு
நல்லமத யானை நட்பும்
நாவினல் லுறவுமொரு நாள்போ விராதிவைக
ணம்பப் படாது கண்டாய்
மற்றுமொரு துணையில்லை நீதுணையெனப்பரவும்
வானவர்கள் சிறைமீட்ட வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

(இ - ள்) கொற்றவர்கள் ராணுவமும் - அரசர்களின் சேனையும், ஆறு நேர் ஆகிய குளங்களும் - நதிக்கு எதிராக இருக்கும் தடாகமும், தாசி உறவும் - வேசியின் நட்பும், பாம்பொடு பழக்கமும் - பாம்புடன் பழகுதலும், குலவு நீர் விளையாடலும் - மிகுந்த ஆழமுள்ள நீர்ப்பெருக்கில் விளையாடுவதும், பற்றலார் தமது இடை வரும் விசுவாசமும் - பகைவரிடத்தில் பொருந்தும் நம்பிக்கையும், பழைய தாயாதி நிணறும் - பழைய தாயாதிகளின் பாசமும், பரதார மாதரது போகமும் - பிறருக்குரிய மனைவியருடன் செய்யும் கலவியும், பெருகி வரு பாங்கான ஆற்று வரவும் - பொங்கி எழுகின்ற அழகான நதியின் வெள்ளப்

போக்கும், ஒரு துர்ப்புத்தி கேட்கின்ற பேர் நற்றும் உறவும் - கேடு பயப்பதில் ஈடில்லாத துஷ்டயோசனை கேட்டொழுகுபவரின் ஆசை பொருந்திய நட்பும், நல்ல மத யானை நட்பும் - மிகுந்த மதம் பிடித்த யானையின் நட்பும், நாவி நல்லுறவும் - கஸ்தூரி மிருகத்தின் நன்மையெனக் காணப்படும் நட்பும், இவைகள் - இவை எல்லாம், ஒரு நாள்போல் இராது - தன்மையில் ஒரு தினம்போல் இராது மாறுகொள்ளும் (ஆபத்தாகும்), நம்பப்படாது—, வானவர்கள் - தேவர்கள், மற்றும் ஒரு துணையில்லை நீ துணை - உனக்கு நீயே சமானமாவாய் உனக்கு நிகரானது வேறொன்றும் இல்லை, எனப் பரவும் - என்று துதி செய்கின்ற, வானவர்கள் - தேவர்களை, சிறைமீட்டவா—, மயிலேறி—, எ - று.

(வி - ரை) 'நத்தும்' என்பது எதுகை நோக்கி 'நற்றும்' என நின்றது. கண்டாய் முன்னிலை அசை.

## 83. நற்புலவர் தீப்புலவர் செயல்

மிக்கான சோலையிற் குயில்சென்று மாங்கனி
 விருப்பமொடு தேடி நாடும்
மிடைகருங் காகங்க ளெக்கனி யிருந்தாலும்
 வேப்பங் கனிக்கு நாடும்
எக்காலும் வரிவண்டு பங்கேரு கத்தினி
 விருக்கின்ற தேனை நாடு

மெத்தனை சுகந்தவகை யுற்றாலு முருள்வண்
டினந்தூர் மலத்தை நாடும்
தக்கோர் பொருட்சுவை நயங்களெங் கேயென்று
தாம்பார்த் துகந்து கொள்வார்
தாழ்வான வன்கண்ணர் குற்றமெங் கேயென்று
தமிழிலா ராய்வர் கண்டாய்
மைக்காவி விழிமாது தெய்வானை யுங்குறவர்
வள்ளியுந் தழுவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) மிக்கான சோலையில் குயில் சென்று - குயிலானது பெருமை பொருந்திய பூஞ்சோலைக்குப் போய், விருப்பமொடு மாங்கனி தேடி நாடும் - ஆசையுடன் மாம் பழம் முதலிய இனிய கனி வர்க்கங்களையே தேடி ஆராயும், மிடை கருமை காகங்கள் - நெருங்கிய கருமை பொருந்திய காகங்களானவை, எக்கனி இருந்தாலும் - எவ்விதமான இனிய பழ வகைகள் இருப்பினும், வேப்பங்கனி நாடும் - வேப்பம் பழத்தையே தேடும், எக்காலம் வரி வண்டு - எப் போதும் இசைபாடும் வண்டுகளானவை, பங்கேருகத் தினில் - தாமரை மலரில், இருக்கின்ற தேனை நாடும் - இருக் கும் தேனையே ஆராயும், எத்தனை சுகந்தவகை உற்றாலும் - எவ்வளவு வாசனைத் திரவியங்கள் இருப்பினும், உருள் வண்டு இனம் - தின்னும் பொருளை உருட்டும் இயல்புள்ள

வண்டின் சாதி, இளம் தூர்மலத்தை நாடும் - அப்போது தான் இட்ட கெட்ட வாசனையுடைய நரகலையே இச்சிக்கும், தக்கோர் - நற்புலவர்கள், (கவிகளில்), பொருட்சுவை நயங்கள் எங்கே என்று - பொருள் சுவை செய்யுட் சுவை, சொல் நயம், பொருள் நயம் முதலியன எவ்விடத்திருக் கின்றன என்று, தாம் பார்த்து உகந்து கொள்வார் - தாம் ஆராய்ந்து எடுத்துச் சுவைத்து மகிழ்ந்து கொள்வார்கள், தாழ்வான வன்கண்ணர் - இழிவான மூர்க்கர்கள், குற்றம் எங்கே என்று - சொற்குற்றம் முதலியன உடையனவா என்று, தமிழில் ஆராய்வர் - தமிழ்க் கவிகளில் தேடுவார் கள், மை காவி விழிமாது தெய்வானை - நீலோத்பல மலர் ஒத்த கண்களை உடைய தெய்வயானையாரும், குறவர் வள்ளியும் - குறவர் அகத்தே வளர்ந்தருளிய வள்ளிநாய்ச்சி யாரும், தழுவும் - மருவும், தலைவா - இறைவனே !, மயிலேறி—, எ - று.

## 84. தாழ்தற் பெருமை

வேங்கைகள் பதுங்குதலு மாமுகி லொதுங்குதலு
 விரிசிலை குனிந் திடுதலும் [ம்
மேடம தகன் றிடலும் யானைக ளொடுங்குதலும்
 வெள்விடைக டுள்ளி விழலும்
மூங்கில்கள் வணங்குதலு மேலவ ரிணங்குதலு
 முனிவர்க ணயந்து கொளலும் [குதலு
முதிர்படை யொதுங்குதலும் வினைஞர்க ளடங்
 முதலினர் பயந் திடுதலும்

ஆங்கரவு சாய்குதலு மகிழ்மல ருலர்ந்திடலு
மாயர்குழல் சூடு படலு
மம்புவியி லிவைகாரி யங்களுக் கல்லாம
லதனு லிளைப்பு வருமோ
மாங்கனிக் காவரனை வலமது புரிந்துவளர்
மதகரிக் கிளைய முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

(இ - ள்) (சில சமயங்களில்) வேங்கைகள் பதுங்குதலும் - புலிகள் பதுங்கி இருத்தலும், மாமுகில் ஒதுங்குதலும் - பெரிய மேகங்கள் விலகிப் போதலும், விரிசிலை குனிந்திடுதலும் - நீண்ட விற்கள் வளைதலும், மேடம் அது அகன்றிடலும் - ஆடானது விலகிப் போவதும், யானைகள் ஒடுங்குதலும் - யானைகள் அடங்கி யிருப்பதுவும், வெள்விடைகள் துள்ளி விழலும் - வெள்ளையான எருதுகள் குதித்து விழுவதும், மூங்கில்கள் வணங்குதலும் - மூங்கில்கள் வளைவதும், மேலவர் இணங்குதலும் - வலிமை பொருந்தியவர்கள் தம்மினும் தாழ்ந்தவரோடு சமாதானம் செய்து கொள்ள அடங்குதலும், முனிவர்கள் நயந்து கொள்ளலும் - சாபங் கொடுக்கவல்ல இருஷிகள் அங்ஙனஞ் செய்யாது அன்பு பூண்பதும், முதிர்படை ஒதுங்குதலும் - வலிமை மிகுந்த சேனை பின்வாங்குதலும், வினைஞர்கள் அடங்குதலும் - தொழில் வல்லமை உடையோர் தாழ்வதும், முதலினர் பயப்படுதலும் - தலைமை உடையோர் தம்மினும்

கீழ்மை உடையவரிடம் அஞ்சி நடத்தலும், ஆம் கரவு - நீரில் வசிக்கும் முதலே, சாய்குதலும் - தலை தாழ்ந்திருத் தலும், மகிழ் மலர் உலர்ந்திடலும் - மகிழம்பூ உலர்வதும், ஆயர் குழல் சூடு படலும் - இடையரின் புள்ளாங்குழல் சூடு ஏற்பதும், அம்புவியில் - அழகிய உலகில், இவை - மேற் சொன்னவை எல்லாம், காரியங்களுக்கு அல்லாமல் - பெரிய பெரிய காரியங்களுக்காகவே அவ்விதம் தாழ்கின்றன அல் லாது, அதனல் இளைப்பு வருமோ - அத்தாழ்வினல் அவற் றிற்கு மெலிவு உண்டாகுமோ? (உண்டாகாது), மாங் கனிக்காக - மாம்பழத்திற்காக, அரனை - சங்கரனை, வலம் அது புரிந்து - பிரதக்ஷிணம் செய்து, வளர் - வளர்கின்ற, மத கரிக்கு இளைய முருகா - மதயானை போன்ற விநாயக மூர்த்தியின் இளையவனகிய முருகப்பிரானே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) வேங்கை பதுங்குதல் - குறித்த பொரு ளின்மீது சரியாகப் பாய்வதற்கும், ஏனைய மிருகங்கள் தான் இல்லை என்று கருதி வெளி வருவதற்கும், முகில் ஒதுங்கல் - கருகிச் சூல் கொண்டு மீண்டு மழை பொழிதற்கு, விரிசிலை - வேகமாக அம்பினை உதைத்தற்கு; ஆட்டின் சுபாவம் விலகுதல். யானை - தகுந்த காலம் நோக்கி அடங்கும். எருது - தொழிலூக்கம் கொள்ளுதற்குத் துள்ளி விழும். மூங்கில் - பல்லக்கு முதலிய வினைகளுக்காக வளைதல் வேண் டும். மேலவர் அடங்குதல் - தற்காலம் பெருமை பெறவும் பிற்காலத்து நல்ல வெற்றி பெறவும். முதலை தலைசாய்தல் -

இரைமீது பாய்தற்கு. முனிவர் - சாபம் இட வல்லமை உள்ளவரேனும் தவம் முற்றுப்பெறுவதற்காக வெகுளார்; அன்பே பூண்பர்.

தலைவர்கள் கீழ்ப்பட்டோர் தன்மை அறிதற்குத் தாழ்வர். மகிழம் மணப்பதற்கு உலரும், வினை வல்லோர் தொழிற்றிறம் காட்டுதற்கு முதலில் அடங்கியவர் போலிருப்பர்.

குழல் சூடு படுதல்-இன்னிசை தருவதற்குப் புள்ளாங்குழலில் சூட்டுக்கோல் கொண்டு துளை செய்வர்.

நாரதர் சிவபிரானுக்குக் கொடுத்த மாங்கனியை "இதனைப் பூப்பிரதக்ஷிணம் முதலில் வருவோன் பெறுவதாக" என்று பரமன் பணித்தலும் முருகன் மயிலேறி உலகத்தை வலமாக வந்துகொண்டிருக்க விநாயக பெருமான் சிவனே உலக வடிவம் எனக் கருதி அய்யனை விரைவில் வலம் வந்து மாங்கனி பெற்று மகிழ்ந்தனர் என்பது வரலாறு.

## 85. தெய்வச் செயல்

சோடாய் மரத்திற் புறாரெண் டிருந்திடத்
துறவுகண் டேவே டுவன்
றூலாம லவையெய்ய வேண்டுமென் றெருக
தொடுத்துவில் வாங்கி நிற்க [ணை
ஊடாடி மேலே யெழும்பிடி லடிப்பதற்
குலவுரா சாளி கூட

வுயரப் பறந்துகொண் டேதிரிய வப்போ
துதைத் தசிலே வேட னடியில்
சேடாக வல்விடந் தீண்டவே யவன்விழச்
சிலேயிற் ரெடுத்த வாளி
சென்றிரா சாளிமெய் தைத்துவிழ வவ்விரு
சிறைப்புரு வாழ்ந்த வன்றே
வாடாம லிவையெலாஞ் சிவன்செயல்க ளல்லாது
மனச்செயலி னுலும் வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலேமேவு குமரேச னே.

(இ - ள்) மரத்தில்—, சோடாய் - சதையாக, இரண்டு புரு - இரு புருக்கள், இருந்திட - தங்கி யிருக்க, வேடுவன் துறவு கண்டு - வேடன் ஒருவன் ( அவற்றின் உயிர் ) நீக்கிப் (பற்றும் உபாயம்) பார்த்தவனுய், தோலாமல் அவை எய்ய வேண்டும் என்று - தவருமல் அவற்றை அம்பு எய்து பிடிக்க வேண்டும் என்று, வில் வாங்கி - வில்லே வளேத்து, ஒரு கணே தொடுத்து நிற்க - ஓர் அம்பு பூட்டி நிற்றலும், ஊடாடி - தம்மில் அளவளாவி, மேலே எழும்பிடின் - உயரக் கிளம்பினுல், அடிப்பதற்கு - பாய்ந்து அடித்துக் கொண்டு போவதற்கு, உலவு இராசாளி கூட உயரப் பறந்து கொண்டு திரிய - நினைத்து உலாவுகின்ற இராசாளியும் உயரத்தில் பறந்து திரிந்துகொண் டிருக்கவும், அப்போது - அச் சமயத்து, உதைத்த சிலே வேடன் - அம்பு எறிந்த

வில் பிடித்த வேடனது, அடியில் - காலில், சேடாக - பல மாக, வல்விடம் தீண்டவே - கொடிய விஷம் கொண்ட பாம்பொன்று கடித்திடவும், அவன் விழ - அவன் கீழே விழவும், சிலையில் தொடுத்த வாளி - அவன் வில்லி னின்றும் விடுத்த அம்பு, சென்று இராசாளி மெய் தைத்து விழ - மேல் சென்று இராசாளியின் உடலில் தைக்க அது விழவும், அவ்விரு சிறை புரு வாழ்ந்த அன்றோ - சிறகு உடைய அந்த இரு புருக்களும் பிழைத்தன அல்லவா?, இவை எல்லாம்—, சிவன் செயல்கள் அல்லாது - கடவுள் செயல் அல்லாமல், வாடாது - சோராமல், மனச் செயலி னால்[?] வருமோ - மனிதனின் மனோ வல்லமையால் ஆகக் கூடியனவோ? (அன்று), மயிலேறி—, எ - று.

## 86. பாடல் இயல்பு

எழுத்தசைகள் சீர்தளைக ளடிதொடைகள் சிதையா
திருக்கவே வேண்டு மப்பா
வீரைம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்
பினியசொற் கமைய வேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொரு
ளடக்கமு மிருக்க வேண்டு
மன்பான பாவினமிசைந்துவரல் வேண்டுமு
னலங்கார முற்ற துறையில்
பழுத்துள’முவந்தோசை யுற்றுவரல் வேண்டும்
படிக்குமிசை கூடல் வேண்டும்

பாங்காக வின்னவை பொருந்திடச் சொற்கவி
பாடிற் சிறப்பென்பர் காண் [தை
மழுத்தினஞ் செங்கைதனில் வைத்தகங் காளனரு
மைந்தனென வந்த முருகா [ள்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) எழுத்து - அகர முதலிய எழுத்துக்களும், அசை - நேரசையும் நிரையசையும், சீர் - ஆசிரியச்சீர் முதலியனவும், தளை - ஆசிரியத் தளை முதலியனவும், அடி - குறளடி முதலியனவும், தொடை - மோனைத்தொடை எதுகைத்தொடை முதலியனவும், சிதையா திருக்கவேண்டும் - கெடாமல் இருக்கவேண்டும், அப்பால் - பின்னர், ஈரைந்து பொருத்தமொடு - பத்துப் பொருத்தங்களுடன், மதுரமாய் - இனிமையாய், பளபளப்பு இனிய சொற்கள் அமைய வேண்டும் - பளபளப்பும் இனிமையும் பொருந்திய மொழிகள் பொருந்த வேண்டும், அழுத்தம் மிகு - வன்மை மிகுந்த, குறளினுக்கு - குறள்வெண்பா முதலிய செய்யுட்களுக்கு, ஒப்பாக - பொருத்தமாக, பொருள் அடக்கமும் இருக்கவேண்டும் - பொருள் அடங்கி இருத்தலும் வேண்டும், அன்பான பா இனம் - அன்பூட்டும் படியான செய்யுள் வகைகள், இசைந்து வரல் வேண்டும் - பொருத்தமுடனே பாடப்படு முன்னே, அலங்காரம் உற்ற துறையில் பழுத்து - உவமை, உருவகம் முதலிய அணி வகைகள் பொருத்தமாகப் பிரயோகிக்கப்பட்டுச் செய்யு

ளானது முதிர்ந்து, உளம் உவந்து - படிப்போர் மனம் மகிழுமாறு, ஓசை உற்று வரல் வேண்டும் - இனிய ஓசை பொருந்தி இருத்தல் வேண்டும், படிக்கும் இசை கூடல் வேண்டும் - படிப்பதற்குரிய இராகம் சேரவேண்டும், பாங்காக - அழகாக, இன்னவை - மேற் சொன்னவை எல்லாம், பொருந்திட—, சொல் கவிதை - பாடப்படும் செய்யுள், பாடில் சிறப்பு என்பர் - பாடினுல் மேன்மை என்று பெரியோர் சொல்லுவர், தினம் - நாள்தோறும், செம்மை கைதனில் - சிவந்த கரத்தில், மழு வைத்த - மழுவாயுதம் ஏந்திய, கங்காளன் - சிவபிரான், அருள் மைந்தன் என வந்த - ஈன்ற குமாரன் என்று அவதரித்த, முருகா - முருகக் கடவுளே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) பத்துப் பொருத்தம் - பாவப்பொருத்தம் முதலியன. அமுர்தம் - பொருளாழ முடைமை. பா - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு. கங்காளன், கங்காளம் - உண்கலம், பிரம்மகபாலத்தில் பிச்சை ஏற்றவன், சிவபிரான்.

## 87. விபூதி வாங்கும் முறைமை

பரிதனி லிருந்துமியல் சிவிகையி லிருந்து முயர்
 பலகையி லிருந்து மிகவே
பாங்கான வம்பலந் தனிலே யிருந்தும்
 பருத்ததிண் ணேயிலிருந் தும்
தெரிவொடு கொடுப்பவர்கள் கீழ்நிற்க மேனின்று
 திருநீறு வாங்கி யிடினுஞ்

செங்கையொன் ருலும்விரன் மூன்ருலும் வாங்
திகழ்தம் பலத்தி ஞேடும் [கினுந்
அரியதொரு பாதையி னடக்கின்ற போதிலு
மசுத்தநில மான வதிலு
மங்கே தரிக்கிலுந் தந்திடிற் றள்ளிலு
மவர்கட்குநர கென்பர் கண்டாய்
வரிவிழி மடந்தைகுற வள்ளிநா யகிதனை
மணந்துமகிழ் சகநாத னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) பரிதனில் இருந்தும் - குதிரைமேல் இருந்தும், இயல் சிவிகையில் இருந்தும் - பொருந்திய பல்லக்கில் அமர்ந்திருக்கும்போதும், உயர் பலகையில் இருந்தும் - உயர்ந்த ஆசனத்தில்இருந்தும், மிகவே பாங்கான அம்பலந் தனில் இருந்தும் - மிகவும் அழகான பொதுத்தலத்தில் இருந்தும், பருத்த திண்ணையில் இருந்தும் - பெரிய திண்ணையில் இருந்தும், தெரிவோடு - அறிவோடு, கொடுப்பவர்கள் கீழ் நிற்க - வழங்குபவர்கள் கீழே நிற்க, மேல் நின்று திருநீறு வாங்கினுலும் - மேல் இடத்தில் நின்றுகொண்டு விபூதியை அவமரியாதையாக வாங்கினுலும், செங்கை ஒன்ருலும் - சிவந்த ஒற்றைக் கையினுலும், விரல் மூன்ருலும்—, வாங்கினும் - பெற்றுக்கொள்ளினும், திகழ் தம் பலத்திேைடும் - சிவந்த ஒளி செய்கின்ற வெற்றிலைப்பாக்கு

மென்றுகொண்டு இருப்பதனேடும், அரியது ஒரு பாதை யில் நடக்கின்ற போதிலும் - அரியதான ஒரு வழியில் நடந்துகொண் டிருக்கும்போதும், அசுத்த நிலமான அதிலும் - அசுத்தம் நிறைந்த இடத்திலும், அங்கே தரிக்கி னும் - பெற்றுக்கொண்ட இடத்திலேயே இட்டுக்கொண் டாலும், தந்திடின் தள்ளினும் - கொடுக்க வந்தால் மறுத்து விடினும், அவர்க்கு நரகென்பர் - அவர்களுக்கு நரக தண் டனை கிடைக்கும் என்று சொல்லுவார்கள், வரி விழி மடந்தை குறவள்ளி நாயகிதனை - செவ்வரிபரந்த கண்களையுடைய மாதாகிய வள்ளி நாயகியாரை, மணந்து - விவாகம் செய்து கொண்டு, மகிழ் சகநாதனே - உவக்கின்ற உலக மனைத்திற் கும் இறைவனே!, மயிலேறி—, எ - று.

## 88. விபூதி தரிக்கும் முறைமை

பத்தியொடு சிவசிவா வென்றுதிரு நீற்றைப்
பரிந்துகை யாலெடுத் துப்
பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு
பருத்தபுய மீதி லொழுக
நித்தமூ விரல்களா னெற்றியி னழுந்தலுற
நினைவாய்த் தரிப்ப வர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரி சுத்தமா
நீங்காம னிமல னங்கே
சத்தியொடு நித்தம்விளை யாடுவன் முகத்திலே
தாண்டவஞ் செய்யுந் திரு

சஞ்சலம் வராதுபர கதியுதவு மிவரையே
சத்தியுஞ் சிவனென்ன லாம்
மத்தினிய மேருவென வைத்தமு தினைக்கடையு
மான்மருக னன முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) பக்தியோடு - அன்புடன், சிவசிவா என்று சிவசிவா வென்று உச்சரித்து, திருநீற்றை பரிந்து கையால் எடுத்தும் - விபூதியை விருப்பமுடன் கரத்தினல் அள்ளி எடுத்தும், பாரினில் விழாதபடி - தரையில் சிந்தாதவாறும், அண்ணாந்து-மேலே நிமிர்ந்து, செவியோடு பருத்த புயமீதில் ஒழுக - காதுகள்மீதும் பெரிய தோள்கள்மீதும் சிந்து மாறும், நித்தம் - தினமும், மூவிரல்களால் - மூன்று விரல் களினல், நெற்றியில் அழுந்தல் உற - நெற்றியில் நன்ருகப் பதியுமாறு, நினைவாய் - ஞாபகத்துடன், தரிப்பவர்க்கு - இடுபவர்க்கு, நீடுவினை அணுகாது - பெரிய தீவினை நெருங் காது, தேகம் பரிசுத்தமோடு - உடல் தூய்மை யடைவ துடன், நீங்காமல் - ஒழியாமல் (எப்போதும்), நிமலன் அங்கே - பரிசுத்த மூர்த்தியாகிய சிவபிரான் நெற்றியில், சக்தியோடும் நித்தம் விளையாடுவன் - சக்தியும் தானுமாகத் தினந்தோறும் விளையாடுவான், திரு முகத்தில் தாண்டவஞ் செய்யும் - இலக்குமிதேவி அவர்கள் முகத்தில் நடனம் புரிவாள், சஞ்சலம் வராது - துன்பம் அணுகாது, பரகதி உதவும் - மோக்ஷம் பிராப்தியாகும், இவரையே சத்தியும்

சிவன் என்னலாம் - இவர்களையே சக்தியும் சிவனும் என்று சொல்லலாம், இனிய மேரு மத்து என வைத்து - பெரிய மேருகிரிபோன்ற மந்தரகிரியை மத்தாகப் பாற்கடலில் நாட்டி, அமுதினை கடையும் - அமிர்தத்திற்காகக் கடைந்த, மால்மருகன் ஆன முருகா - திருமாலின் மருமகன் ஆகிய முருகக் கடவுளே!, மயிலேறி—, எ - று.

## 89. இவ் வுருப்பால் பயன் இல்லெனல்

தேவால யஞ்சுற்றி டாதகா லென்னகா
றெரிசியாக் கண்ணென் னகண்
தினமுமே நின்கமல பாதத்தை நினையாத
சிந்தைதா னென்ன சிந்தை
மேவாக மஞ்சிவ புராணமவை கேளாமல்
விட்டசெவி யென்ன செவிகள்
விமலனை வணங்காத சென்னியென் சென்னிப
விடைசெயாக் கையென் னகை [ணி
நாவார நினையேத் திடாதவா யென்னவாய்
நற்றீர்த்த மூழ்கா வுட
னிலத் தென்னவுடல் பாவியா கியசனன
நண்ணினுற் பலனே துகாண்
மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்ட முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) தேவாலயம் - தேவர்கோயிலை, சுற்றிடாத கால்-வலமாகச் சுற்றி வராத கால், என்ன கால் - எவ்விதமான கால்?, தெரிசியாத கண் - கடவுளைத் தரிசனம் செய்யாத கண், என்ன கண்—, தினமும் நின் கமல பாதத்தை நினையாத சிந்தை-நாள்தோறும் உனது தாமரை மலர் ஒத்த திருவடியைச் சிந்திக்காத சிந்தை, என்ன சிந்தை—, மேவு ஆகமம் - பயில்வதற்கு ஆவல் தூண்டும் சிவாகமம், சிவபுராணம்—, அவை - என்பவற்றை, கேளாமல் விட்ட செவி - சிரவணம் செய்யாது வீணே விடுத்த காதுகள், என்ன செவி - என்ன காதுகள்?, விமலனை வணங்காத சென்னி-பரிசுத்தமூர்த்தியாகிய சிவபெருமானை வணங்கித் தாழாத சிரசு, என்ன சென்னி - எத்தகைய சிரசு?, பணிவிடை செய்யா(த) கை - தொண்டு புரியாத கரம், என்ன கை - எத்தகைய கரம்?, நாஆர நின்னை ஏத்திடாத வாய் - நா நிறைய உந்தனைப் போற்றாத வாய், என்ன வாய் - எத்தகையவாய்?, நானிலத்தில் - பூமியில், நல் தீர்த்தம் மூழ்கா(த) உடல் - கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் அழுந்தாத சரீரம், என்ன உடல் - என்ன சரீரம்?, (மேற்சொன்னவற்றைச் செய்யாத உறுப்புகள் வாய்ந்த) பாவியாகிய சனனம் நண்ணினுல் பலன் ஏது - பாபம் நிறைந்த பிறவி எடுத்ததால் நன்மை என்ன? (இல்லை), வேலைதனில் - சமுத்திரத்தில், மாவாகி வரு - மாமர வடிவம் எடுத்து நின்ற, சூரன் மார்பு உருவ - சூரபதுமனின் மார்பு பிளவுபடும்படி, வடிவேல் விட்ட

முருகா - கூரிய வேற்படை விடுத்த முருகப்பிரானே!, மயிலேறி—, எ - று.

(வி - ரை) ஏ, தான், இசை நிறை. காண், முன்னிலை அசை. நானிலம் - பாலை தவிர்த்து ஏனைய மருதம் முல்லை நெய்தல் குறிஞ்சி என்ற நான்கு வகை நிலங்கள் இவற்றை யுடையது பூமி.

## 90. நற்பொருளோடு தீப்பொருள் பிறத்தல்

கோகனக மங்கையுடன் மூத்தவள் பிறந்தென்ன
குலவுமாட் டின்க ணதர்தான்
கூடப் பிறந்தென்ன தண்ணீரி னுடனே
கொடும்பாசி யுற்று மென்ன
மாகருணு மமுதினொடு நஞ்சம் பிறந்தென்ன
வல்லிரும் பிற்று ருத்தான் [ள்
வந்தே பிறந்தென்ன நெடுமரந் தனின்மொக்கு
வளமொடு பிறந்தென் னவுண்
பாகமிகு செந்நெலொடு பதர்தான் பிறந்தென்ன
பன் னுமொரு தாய் வயிற்றில்
பண்பு றுவிவேகியொடு கயவர்கள்பிறந்தென்ன
பலனேது மில்லை யன்றோ
மாகனக மேருவைச் சிலையென வளைத்தசிவன்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) கோகனக மங்கையுடன் - திருமாதுடன், மூத்தவள் பிறந்து என்ன - மூதேவி உதித்தால் என்ன?, குலவும் ஆட்டின்கண் - தோன்றுகின்ற ஆட்டின் கழுத்திடத்திலே, அதர் கூடப் பிறந்து என்ன - அதர் என்னும் தொங்கும் தோல் ஆட்டுடனே பிறந்தால் என்ன ?, தண்ணீருடன் கொடும் பாசி உற்றும் என்ன - குளிர்ந்த ஜலத்துடன் கொடுமை இயற்றும் பாசி இருந்தால் என்ன?, மாகர் உண்ணும் அமுதினோடு - தேவர்கள் உண்ணத் தகுந்த அமிர்தத்துடன், நஞ்சம் பிறந்து என்ன - விஷம் பிறந்தால் என்ன?, வல் இரும்பில் துரு வந்தே பிறந்து என்ன - வன்மையான இரும்பிடத்தில் துரு தோன்றினால் என்ன ?, நெடு மரம் தன்னில் மொக்குள் வளமொடு பிறந்து என்ன - நீண்ட மரத்தில் கொப்பூழ் பிறந்து வளர்ந்து பெரியதாகத் தொன்றினல் என்ன ?, உண் பாகம் மிகு - அரிசியாக்கிச் சமைத்து உண்ணத் தகுந்த பக்குவம் அடைந்த, செந்நெல்லொடு—, பதர் பிறந்து என்ன—, பன்னும் ஒரு தாய் வயிற்றில் - அன்புக்குத் தாய் என்று மதிப்புடன் கூறப்படும் மாதா உதரத்தில் (பிறக்கும்), பண்பு உறு விவேகியொடு - நற்குணம் பொருந்திய அறிவாளியுடன், கயவர்கள் பிறந்து என்ன - மூடர்கள் பிறந்தால் என்ன ?, பலன் ஏதும் இல்லை அன்றோ - பிரயோசனம் ஒன்றும் இல்லை அல்லவா ?, கனகமாமேருவை சிலை என வளைத்த - பொன்மயமான பெரிய மேருகிரியை வில்லாக வளைத்தருளிய, சிவன் மைந்தன் என வரு முருகா - சிவ

பெருமானின் திருக்குமாரன் என்று அவதரித்த ஆறு முகக்கடவுளே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) கோகனகம் - தாமரை. மாகம், மா - பெரிய, கம் - ஆகாயம்; மாகர் - தேவலோகத்தில் வசிப்போர், தேவர்கள்.

## 91. தன் இனத்தால் அழிவு

குலமான சம்மட்டி குறடுகைக் குதவியாய்க்
கூரிரும் புகளை வெல்லுங்
கோடாலி தன்னுளே மரமது நுழைந்துதன்
கோத்திர மெலா மழிக்கும்
நலமான பார்வைசேர் குருவியா னதுவந்து
நண்ணுபற வைகளை யார்க்கு [ன்
நட்புடன் வளர்ந்தகலை மானென்று சென்றுத
னவில்சாதி தனையி ழுக்கும்
உலவுநற் குடிதனிற் கோளர்க ளிருந்துகொண்
டுற்றுரை யீட ழிப்ப
ருளவனில் லாமனூ ரழியா தெனச்சொல்லு
முலகமொழி நிசமல் லவோ
வலமாக வந்தா ணிடத்தினிற் கனிகொண்ட
மதயானை தன்சோ தரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) குலம் ஆன சம்மட்டியுடன் குறடு கைக்கு உதவியாய் - (இரும்புக்கு) இனம் ஆன சம்மட்டியும் குறடும் கருமான் கைக்கு உதவியாக நின்று, கூர் இரும்புகளைக் கொல்லும் - கூரிய இரும்புகளைச் சிதைக்கும், கோடாலிதன்னுளே மரமது நுழைந்து - கோடாரிக்குள்ளே ஓர் மரக்காம்பானது புகுந்து, தன் கோத்திரம் எல்லாம் அழிக்கும் - தனது இனமாகிய மரங்கள் எல்லாவற்றையும் வெட்டி ஒழித்துவிடும், நலம் ஆன பார்வை சேர் குருவி ஆனது வந்து - நல்ல பார்வையுடைய குருவி வேடனுடன் வந்து, நண்ணு பறவைகளை ஆர்க்கும் - இரை கண்டு அணுகும் பறவைகளை வலையில் சேர்த்துப் பிணிக்கச் செய்துவிடும், நட்புடன் வளர்ந்த கலைமான் ஒன்று சென்று - சினேகமுடன் வளர்ந்த கலைமான் ஒன்று வனத்தில் போய், தன் 'நவில் சாதிதனை இழுக்கும் - தன்னுடைய இனம் என்று கூறப்படும் எல்லா மான்களையும் வலையிடத்திற்கு இழுத்துவிடும், உலவு நற்குடிதனில் - நன்றாக இயங்குகின்ற நல்ல குலத்தில், கோளர்கள் இருந்துகொண்டு - கோட்சொல்லுபவர் வசித்து இருந்துகொண்டு, உற்றுரை ஈடு அழிப்பர் - பந்துக்களைப் பெருமை போக அழித்துவிடுவர், உளவது இல்லாமல் ஊர் அழியாது எனச் சொல்லும் - உளவாளி இல்லாது ஊர் கெடாது என்று கூறுவது, உலகமொழி நிசமல்லவோ - உலகத்தில் வழங்கி வரும் பழமொழி உண்மை யல்லவோ, வலமாக வந்து அரன் இடத்தில் கனி கொண்ட - பரமசிவனைப் பிரதக்ஷணமாகச் சுற்றி வந்து மாம்பழம் பெற்றுக்கொண்ட, மதயானை சோதரா -

விநாயகப் பெருமானின் உடன்பிறந்தவனே !, மயிலேறி
எ - று.

## 92. வீணுக்கு உழைத்தல்

குயின்முட்டை தனதென்று காக்கையடை காக்குங்
குணம்போலு மீக்க ளெல்லாங்
கூடியே தாமுண்ண வேண்டுமென் றேதினங்
கூடுய்த்த நறவு போலும்
பயில்சோர ருக்குப் பிறந்திடத் தாம்பெற்ற
பாலனென் றுட்கருதி யே
பாராட்டி முத்தமிட் டன்பாய் வளர்த்திடும்
பண்பிலாப் புருடர் போலும்
துயிலின்றி நிதிகளைத் தேடியே யொருவர்பாற்
றெட்டுத் தெரித்தி டாமற் [கவரு
றுகைபண்ணி வைத்திடுவர் கைக்கொண்டுபோ
சொந்தமா னவர்வேறு காண்
வயிரமொடு சூரனைச் சங்கார மேசெய்து
வானவர்க் குதவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) குயில் முட்டை தனது என்று காக்கை அடை காக்கும் - குயிலானது தன் கூண்டில் முட்டையிடத் தன்னுடைய தென்று நினைத்துக் காகம் குஞ்சு பொரிக்க

அடை காக்கும், குணம் போலும் - தன்மை போலும், ஈக்கள் எல்லாம் - தேனீக்கள் எல்லாம், கூடியே தாம் உண்ண வேண்டும் என்று - சேர்ந்து தாம் பருக வேண்டும் என்று கருதி, கூடு உய்த்த நறவு போலும் - தேன்கூட்டில் சேர்ந்த தேன் போலவும், பயில் சோரருக்குப் பிறந்திட தாம் பெற்ற பாலன் என்று - நட்புடன் தம் மனைவியுடன் வந்து சேரும் கள்ள புருடனுக்குப் பிறந்த பிள்ளையைத் தாமே பெற்ற பிள்ளை என, உள் கருதி - மனதார நினைத்து, பாராட்டி - கொண்டாடி, முத்தமிட்டு—, அன்பாய் வளர்த்திடும்—, பண்பில்லா(த) புருடர்போலும்-குணமில்லாத கணவன்மார் போலவும், துயில் இன்றி நிதிகளைத் தேடி - தூக்கமில்லாதுஉழைத்துச் செல்வம் தேடி, ஒருவர் பால் தொட்டு தெறித்திடாமல் - ஒருவருக்கும் அதிலிருந்து எடுத்துக் கொடுத்திடாமல், தொகை பண்ணி வைத்திடுவார்-உலோபிகள் குவியலாகச் சேர்த்து வைப்பார்கள், கைக்கொண்டு போகவரு - அபகரித்துப் போவதற்கு வருகின்ற, சொந்தமானவர் வேறு - அத் திரவியக் குவியலுக்கு உரிய கொள்ளைக் காரர்கள் வேறானவர்களே, வயிரமொடு - பகையுடன், சூரனை - சூரபதுமனை, சங்காரம் செய்து - அழித்து, வானவர்க்கு உதவு தலைவா - தேவர்களுக்கு உபகாரம் செய்யும் இறைவனே !, மயிலேறி—, எ - று.

## 93. இதுசேரின் இது பயன்படாது எனல்

அழலுக்கு ளேவிட்ட நெய்யும் பெருக்கான
வாற்றிற் கரைத்த புளியு

மரிதான கமரிற் கவிழ்த்திட்ட பாலும்வரு
மலகைகட் கிடு பூசையும்
சுழல்பெருங் காற்றினில் வெடித்தபஞ் சும்மணற்
சொரிநறும் பனிநீரு நீள்
சொல்லரிய காட்டுக் கெரித்தநில வுங்கடல்
சுழிக்குளே விடுகப்ப லும
விழலுக் கிறைத்திட்ட தண்ணீரு முகமாய
வேசைக் களித்த பொருளும
வீணருக் கேசெய்த நன்றியும் பலனில்லை
விருதாவி தென்பர் கண்டாய்
மழலைப் பசுங்கிள்ளை முன்கைமலை மங்கைதரு
வண்ணக் குழந்தை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) அழலுக்குள் விட்ட நெய்யும் - நெருப்பில் சொரிந்த நெய்யும், பெருக்கான ஆற்றில் கரைத்த புளியும் - வெள்ளம் பெருகும் நதியில் கரைத்த புளியும், அரிதான - நெருங்குதற்கு அருமையான, கமரில் கவிழ்த்திட்ட பாலும் - நிலவெடிப்பிற்குள் கவிழ்த்த பாலும் வரு, அலகைகட்கு இடு பூசையும் - தெய்வத்தன்மை இன்றி வருகின்ற பூதங்களுக்கு இடுகின்ற ஆராதனையும், தழல் பெரும் காற்றினில் வெடித்த பஞ்சும் - பலமான புயற்காற்றில் வெடித்த பஞ்சும், மணல் சொரி நறும் பனி நீரும் - மணலில் கொட்

டப்படும் வாசனையுள்ள பனிநீரும், நீள் சொல் அரிய காட்டுக்கு எறித்த நிலவும் - நீளம் இவ்வளவு என்று சொல்லுதற்கு அருமையான கானகத்தில் வீசிய நிலாவெளிச்சமும், கடல் சுழிக்குள் விடு கப்பலும் - கடலில் தோன்றும் பெரிய ஆபத்தான நீர்ச்சுழியில் விடுகின்ற கப்பலும், விழலுக்கு இறைத்திட்ட நீரும் - விழல் என்ற ஒன்றுக்கும் பயன் படாத புல்லுக்குப் பாய்ச்சிய தண்ணீரும், முகமாய வேசைக்கு அளித்தபொருளும் - முகத்தால் ஆண்களை மயக்கும் வேசிக்குக் கொடுத்த செல்வமும், வீணருக்கு செய்த நன்றியும் - பயனில்லாதவருக்குச் செய்த உபகாரமும், பலனில்லை விருதா இது என்பர் - பிரயோஜன மில்லை, வீண் இது என்று பெரியோர் சொல்லுவர், மழலைப் பசுங்கிள்ளை முன்கை - நிரம்பாமென் சொல் பேசும் பசுமையான கிளியை முன்னங்கையில் வைத்திருக்கும், மலை மங்கை - பர்வதராச குமாரியான பார்வதியானவள், தரு - பெற்றெடுத்த, வண்ணக்குழந்தை முருகா - அழகிய குழந்தை வடிவனான முருகா !, மயிலேறி—, எ - று.

## 94. கைவிடத் தகாதவர்

அன்னைசுற் றங்களையு மற்றைநாள் முதலா
வடுத்துவரு பழையோ ரையு
மடுபகைவ ரிற்றப்பி வந்தவொரு வேந்தனையு
மன்பான பெரியோரை யும்
தன்னை நம் பினரையு மேழையா னவரையுஞ்
சார்ந்தமறை யோர்தமை யுந்

தருணமிது வென்று நல் லாபத்து வேளையிற்
சரணம் புகுந்தோரை யு
நன்னயம தாகமுன் னுதவிசெய் தோரையு
நாளுந் தனக்குறுதி யாய்
நத்துசே வகனையுங் காப்பதல் லாதுகை
நழுவவிட லாகாது காண்
மன்னயிலு மினியசெஞ் சேவலுஞ் செங்கைமலர்
வைத்தசர வணபூ பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ-ள்) அன்னை சுற்றங்களையும் - பெற்றெடுத்த தாய்தந்தையரையும் இதர பந்துக்களையும், அற்றை நாள் முதலா(க) அடுத்து வரு பழையோரையும் - கண்டு நட்பு பூண்ட தினம் முதற்கொண்டு தன்னை அண்டி இயங்கி வருகின்ற பரிசயமுடைய நட்பினரையும், அடு பகைவரில் தப்பி வந்த ஒரு வேந்தனையும் - கொல்லுகின்ற பகை அரசரிடம் இருந்து தப்பித் தன்னிடம் வந்து சேர்ந்த அரசனையும், அன்பான பெரியோரையும் - அன்பு பாராட்டு தற்குரிய பெரியவரையும், தன்னை நம்பினேரையும்—, ஏழையானவரையும்—, சார்ந்த மறையோர் தம்மையும் - தன்னை அடுத்த வேதம் வல்ல அந்தணர்களையும், நல்ல ஆபத்துவேளையில் - பெரிய கேடுற்ற சமயத்தில், தருணம் இது என்று - காக்கத் தகுந்த சமயம் இதுவென்று

சொல்லி, சரணம் புகுந்தோரையும் - அடைக்கலமாகத் தன்னிடம் புகுந்தவரையும், நல் நயம் ஆக - இனிமையாக, முன் உதவி செய்தோரையும் - தனக்கு ஆபத்து வந்த காலத்தில் உதவி புரிந்தவரையும், நாளும் தனக்கு உறுதியாய் - தினந்தோறும் தனக்குத் துணையாக, நத்து சேவகனையும் - விரும்பித் தொண்டு செய்யும் வேலைக்காரனையும், கை நழுவ விடலாகாது - கை சோர்ந்து விட்டுவிடக் கூடாது. மன் அயிலும் - ஆயுதங்களில் தலைமை பூண்ட வேலாயுதமும், இனிய சேவலும் - கண்ணுக்கு இனியதான சேவற்கொடியும், செங்கை மலர் வைத்த - சிவந்த தாமரைப்பூ வொத்த கையில் தரித்த, சரவண பூபனே - சரவணப்பொய்கையில் உதித்தருளிய இறைவனே !, மயிலேறி—, எ - று.

(வி - ரை) மன் - பெருமையாதலின் பெருமை பொருந்திய வேல் என்றுங் கூறலாம். வேல் ஆயுதங்களுக்குத் தலைமை யுடையதை "எவர்மேல் விடுக்கினும் அவர் தமாயிருந் திறலும் வரங்களும் சிந்தி மன்னுயிர் உண்பது எப்படைக்கும் நாயக மாவதொரு தனிச்சுடர் வேல்" என்னும் கந்தபுராண மொழியால் உணர்க.

## 95. தகாத செயல்

அண்டிவரு முற்றூர் பசித்தங் கிருக்கவே
    யன்னியர்க் குதவு வோரு
மாசுதபு பெரியோர்செய் நேசத்தை விட்டுப்பி
    னற்பரை யடுத்த பேரும்

கொண்டவொரு மனையா ளிருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவு வோருங்
கூறுசற் பாத்திர மிருக்கமிகு தானமது
குணமிலார்க் கீந்த பேரும்
கண்டுவரு புதியோரை நம்பியே பழையரைக்
கைவிட் டிருந்த பேருங்
கரிவாலை விட்டுநரி வால்பற்றி நதிநீர்
கடக்கின்ற மரியாதை காண்
வண்டடர் கடப்பமலர் மாலிகா பரணமணி
மார்பனே யருளாள னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) அண்டி வரும் உற்றூர் பசித்து - ஆதரவு கிடைக்கும் என்று தம்மை நெருங்கித் தம் வீட்டிற்கு வருகின்ற பந்துக்கள் பசித்து, அங்கு - அச் செல்வந்தர் வீட்டில், இருக்கவே - இருக்கும்போது, அன்னியர்க்கு உதவுவோரும் - பிறருக்கு உபகாரம் செய்வோரும், ஆசுதபு - குற்றம் கெடுகின்ற, பெரியோர் செய் நேசத்தைவிட்டு - பெரியவர்களுடன் செய்தற்குரிய நட்பை விடுத்து, அற்பரை அடுத்த பேரும் - இழிந்தவரை அண்டினவரும், கொண்ட ஒரு மனையாள் இருக்க - தான் வரிந்துகொண்ட ஒப்பற்ற பாரியை தன் வீட்டில் இருக்கவும், பரத்தையை கொண்டாடி மருவுவோரும் - பிறர் மனைவியையோ வேசி

யையோ கொண்டாடிப் புணர்பவரும், கூறு சற்பாத்திரம் இருக்க - மதித்துச் சொல்லப்படும் தானம் வாங்கத் தகுதி யுடையவர் இருக்கையில், குணமிலார்க்கு - நற்குணம் இல்லாதவருக்கு, மிகு தானம் - மிகுந்த தானப் பொருள் களை, ஈந்த பேரும் - கொடுத்தவர்களும், கண்டு - ஐஸ்வரி யத்தை நோக்கி, வரு புதியோரை - அதற்காகவே நட்பு செய்ய வரும் புதிய ஆட்களை, நம்பி - விஸ்வாசம் வைத்து, பழையரைக் கைவிட்டு இருந்த பேரும்-பழைய நட்பினரைக் கைசோர விட்டவர்களும், கரி வாலை விட்டு நரி வால் பற்றி - யானை வாலை விடுத்து நரி வால் பலமென்று அதைப் பிடித் துக்கொண்டு, நதி நீர் கடக்கின்ற மரியாதை (ஆகும்) ஆற்று ஜலத்தைக் கடக்கின்ற தன்மைபோல் ஆவார்கள், வண்டு அடர் - வண்டுகள் மொய்க்கின்ற, கடப்பமலர் மாலிகா - கடப்ப மலரால் ஆகிய மாலையையும், ஆபரணம் - பலவித நகைகளும், அணி - அணிந்திருக்கும், மார்பனே—, அருள் ஆளனே - கிருபையை ஆள்பவனே, மயிலேறி—, எ - று.

## 96. நல்லோர் முறை

கூடியே சோதரர்கள் வாழ்தலா லுந்தகு
 குழந்தைபல பெறுத லாலுங்
குணமாக வேபிச்சை யிட்டுண்கை யாலுங்
 கொளும்பிதிர்க் கிடுத லாலுந்
தேடியே தெய்வங்க ளுக்கீத லாலுந்
 தியாகங் கொடுத்த லாலுஞ்

சிறியோர்கள் செய்திடும் பிழையைப் பொறுத்து
சினத்தைத் தவிர்த்த லாலும் [ச்
நாடியே தாழ்வாய் வணங்கிடுத லாலுமிக
நல்வார்த்தை சொல்ல லாலு
நன்மையே தருமலாற் தாழ்ச்சிகள் வராவிவை
நல்லோர்கள் செயு முறைமைகாண்
வாடிமன நொந்து தமிழ் சொன்ன நக்கீரன்முன்
வந்துதவி செய்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

(இ - ள்) கூடியே சோதரர்கள் வாழ்தலாலும் - ஓர் தாய் வயிற்றிற் பிறந்தவர்கள் தம்முள் இணக்கமாக வாழ்வதாலும், தரு குழந்தை பல பெறுதலாலும் - தகுந்த பல குழந்தைகளைப் பெறுவதாலும், குணமாக பிச்சை இட்டு உண்கை ஆலும் - நல்ல மனதுடனே அன்னம் அதிதிகளுக்கும் பரிமாறி உண்பதாலும், கொள்ளும் பிதிர்க்கு இடுதலாலும் - (எள்ளுந் தண்ணீரும் ஏற்றுக்) கொள்ளும் பித்ருக்களுக்கு அவிசு கொடுப்பதாலும், தேடித் தெய்வங்களுக்கு ஈதலாலும் - பொருள் தேடி தேவதைகளுக்குப் பூசைகள் செய்வதாலும், தியாகம் கொடுத்தலாலும் - தானப்பொருள் வழங்குவதாலும், சிறியோர்கள் செய்திடும் பிழையைப் பொறுத்து - இளம் வயதுடைய அறிவு முதிர்ச்சி யில்லாதவர்கள் செய்யும் குற்றங்களை மன்னித்து,

சினத்தை தவிர்த்தலாலும் - கோபத்தை அகற்றுவதாலும், நாடி தாழ்வாய் வணங்கிடுதலாலும் - (பெரியவரை) நாடிப் பணிவுடன் தொழுவதாலும், நல்ல வார்த்தை மிக சொல்லலாலும் - இனிய மொழிகள் மிகவும் கூறுவதாலும், நன்மையே தரும் அல்லால் தாழ்ச்சிகள் வரா - நன்மையைத்தான் கொடுக்கும் அல்லாமல் தீமைகள் வரமாட்டா, இவை நல்லோர்கள் செய்யும் முறைமை - மேற் சொன்னவைகள் எல்லாம் பெரியவர்களின் முறைமையாகும், வாடி - மெலிந்து, மனம் நொந்து - மனோவேதனை யுற்று, தமிழ் சொன்ன - திருமுருகாற்றுப்படை என்னும் பிரபந்தம் பாடிய, நக்கீரன் முன் - நக்கீரதேவர் என்னும் சிறந்த தமிழ்ப்புலவர் முன்னாக, வந்து உதவி செய்த முருகா - எழுந்தருளிப் பூதத்தின் சிறையினின்றும் விடுவித்தருளிய முருகக் கடவுளே !, மயிலேறி—, எ - று.

## 97. அடைக்கலங் காத்தல்

அஞ்சலெனு நாயினுட றருமன் சுமந்துமுன்
    ஞற்றைக் கடத்து வித்தா
னடைக்கல மெனுங்கயற் காகநெடு யாலுட
    னருச்சுனன் சமர்புரிந் தான்
தஞ்சமென வந்திடு புருவுக்கு முன்சிபி
    சரீரந் தனைக்கொ டுத்தான்
றடமலைச் சிறகரிந் தவனைமுன் காக்கத்
    ததிசிமுது கென்பளித் தான்

இன்சொ லுட னேபூத தயவுடைய ராயினே
　　ரெவருக்கு மாபத்தி லே
யினியதஞ் சீவனை விடுத்தாகி லுங்காத்
　　திரங்கி ரக்ஷிப்ப ரன்றே
வஞ்சகிர வுஞ்சமொடு தாருகன் சிங்கமுகன்
　　வளர்சூர னுடல்கீண்ட வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
　　மலைமேவு குமரேச னே.

(இ-ள்) முன் தருமன் - முன்னொரு காலத்தில் தருமராசன், அஞ்சல் என - பயப்படாதே என்று அபயப் பிரதானம் வழங்கி, நாயின் உடல் சுமந்து ஆற்றைக் கடத்து வித்தான் - நாயின் இழிந்த சரீரத்தைத் தோள்மீது சுமந்து இடை கண்ட நதியைக் கடந்தான், அருச்சுனன் - அருச்சுனனனவன், அடைக்கலம் எனும் கயற்காக - "அபயம்!" என்று முறையிட்ட கயன் என்னும் கந்தருவ னுக்காக, நெடுமாலுடன் சமர் புரிந்தான் - நெடிய திருமா லின் அவதாரமூர்த்தியாகிய கண்ணபிரானுடன் யுத்தம் செய்தான், முன் சிபி - முன்பு சிபிச்சக்கரவர்த்தி என்ப வர், தஞ்சம் என வந்திடு புறுவுக்கு - நீரே அபயம் தர வேண்டும் என்று கதறித் தன்னை வந்தடுத்த புறுவைப் பாதுகாப்பதற்காக, சரீரம் தன்னை கொடுத்தான் - பெரும் பருந்துக்குத் தனது தேகத்தையே அறுத்துக் கொடுத் தான், முன் ததீசி - முன்னர் ததீசி என்னும் முனிவன், தடமலை சிறகு அரிந்தவனை - விசாலமான மலைகளின்

இறக்கைகளைத் துண்டித்தவனாகிய இந்திரனை, காக்க முதுகு என்பு அளித்தான் - பாதுகாப்பதற்காகத் தனது முதுகெலும்பைத் தானமாக வழங்கினான், இன் சொல் உடனே பூததயை உடையராயினோர் - இனிய சொல் சொல்லுவதுடன் ஜீவராசிகள்மீது கிருபை யுடைய பெரியவர்கள், எவருக்கும் - யாருக்கும், ஆபத்தில் - கேடு சம்பவிக்கும் நேரத்தில், தம் இனிய சிவனை விடுத்தாகிலும் - தமது இனிமையான உயிரைக் கொடுத்தாகிலும், இரங்கி காத்து இரக்ஷிப்பர் அன்றோ - தயை புரிந்து பாதுகாப்பார் அன்றோ ?, வஞ்ச கிரவுஞ்சமொடு - கபடத் தன்மை வாய்ந்த கிரௌஞ்ச பர்வதத்துடன், தாருகன் சிங்கமுகன் வளர் சூரன் உடல் கிண்டவா - தாருகாசுரன் சிங்கமுகாசுரன் வலிமை மிக்க சூரபதுமன் இவர்களின் சரீரங்களைப் பிளந்தருளிய முருகக் கடவுளே !, மயிலேறி—, எ - று.

( வி - ரை )

தருமனும் நாயும்:—கலியுகம் பிறந்துவிட்டமையால் சொர்க்கம் புகுவதற்காகத் தருமபுத்திரர் தாமும் தம்பிமாரும் திரௌபதியும் தம்மைத் தொடர்ந்து வந்த ( எமன் ) நாயும் அத்தினபுரியி னின்றும் புறப்பட்டு வடக்கு நோக்கி வெகு தூரம் சென்றார். இடையில் திரௌபதி, சகாதேவன், நகுலன், அருச்சுனன், பீமன் ஐவரும் தேக வியோகமாகிச் சொர்க்கம் புகுந்தனர். அதையும் கருதாது விடாமுயற்சியுடன் நாயொடு சென்றுகொண் டிருந்தார். வழியில் எமன் உண்டாக்கிய ஆறு தென்பட்டது. இனிக் கதியில்லை என்று

நாய் வருந்த அஞ்சேல் என அபயத்தம் அளித்துத் தோள்மீ தேற்றி ஆற்றைக் கடந்தார். பின்னர் இந்திரன் விமானத் துடன் வந்து வரவேற்ருன். நாயும் சொர்க்கத்திற்கு விமானம் ஏறி வரல் வேண்டுமென்று தருமர் வற்புறுத்த இந்திரன் இழி பிறவி நாய்க்கு விமானம் இடந்தரா தென் ருன். தருமர் அதற்கு மறுக்க எமன் தன் சுய சொரூபம் காட்டித் தருமப் பிரபுவின் அபயப்பிரதான மேன்மை யைக் குறித்துப் பெரிதும் பாராட்டினன்.

அர்ச்சுனன் கயனுக்கு அபயம் அளித்தது :—கயன் என்னும் கந்தருவன் வரப்பலத்தினுல் விமானம் பெற்று விரும்பிய இடத்தெல்லாம் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். ஓர் நாள் தன் மகளிருடன் விமானத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தவன் தம்பலம் துப்பினன். அது கண்ண பிரானின் அர்க்கியம் ஏந்திய இரு கைகளில் விழுந்தது. பிரான் கோபித்து அவனைச் சம்மரிப்பதாகச் சபதம் செய் தனன். இது கண்டு கந்தருவன் அர்ச்சுனனிடம் அடைக்கல மாகப் புகுந்தனன். செய்தி யறியாது அபயம் அளித்த னன் அருச்சுனன். அறிந்த பின்னரும் அவனுக்குக் காப்பதாக ஊக்கம் அளித்தனன். கண்ணன் அக்குரூரர், சுபத்திரை இவர்களை விட்டுக் கந்தருவனை விடும்படி வேண்டி யும் அருச்சுனன் மறுக்கவே இருவருக்குங் கடும்போர் நிகழ்ந்தது. சிவபிரான் வந்து சமாதானம் செய்விக்கக் கந்தருவனும் அருச்சுனனும் இருவருமாகக் கண்ணனை

அடைக்கலம் புகுந்தனர். அதனால் கண்ணன் சினம் ஆறிக் கந்தருவனை மன்னித்தருளினன்.

சிபி உடல் கொடுத்தது:—சிபிச்சக்கரவர்த்தி யிடம் ஓர் புறு அடைக்கலம் புகுந்தது. அதனைத் துரத்தி வந்த வல்லூறு தன் இரைப்பொருளை விடும்படிக் கேட்டது. அதற்கு மறுத்து எவ்விரைச்சி வேண்டினும் தருவதாகச் சொன்னன். வல்லூறு சிபியின் உடலிரைச்சியையே வேண்டப் புறுவைத் தராசின் ஓர் தட்டில் வைத்துத் தனது உடலை அறுத்தறுத்து வைத்தும் நிறைபடாமல் இருக்கத் தானே தட்டில் ஏறினன், எடை சரியாய் விட்டது. உடனே புறுவும் வல்லூறும் முறையே எமனும் இந்திரனும் ஆகக் காட்சி தந்து பாராட்டிச் சென்றனர்.

ததீசி முதுகெலும்பு தந்தது:—பாற்கடல் கடைவதற்குச் சென்ற தேவர்கள் தங்கள் ஆயுதங்களைத் ததீசி முனிவனிடம் தந்து சென்றனர். வெகுநாள் ஆகவே முனிவன் படைகளை விழுங்கினன். படைகளின் பலம் முதுகெலும்பில் ஏறியது. பின்னர் இந்திரன் விருத்திராசுரனுடன் போர் புரியும்போது இந்திரன் விட்ட வச்சிராயுதம் அசுரனை ஒன்றுஞ் செய்யவில்லை. ஆதலின் இந்திரன் திருமாலை வேண்டத் திருமால் ததீசியின் முதுகெலும்பு பெறச் சொன்னர். அதன்படியே முனிவனை இந்திரன் வேண்டத் தக்ஷணம் யோகத்தால் உயிர் நீத்தார். இந்திரன் முதுகெலும் பெடுத்து வச்சிராயுதமாகச் செய்து விருத்திரனைச் சங்கரித்தான்.

இந்திரன் மலைச்சிறகு அரிந்தது :—முன்னொரு காலத்தில் மலைகள் எல்லாம் சிறகுடையனவாகிப் பறந்து சென்ற விட மெல்லாம் பாழாக்கி வந்ததால் இந்திரன் அவற்றின் சிறகுகளை அரிந்தெறிந்தனன்.

ஈற்றடியின் வரலாறு:—அசுரேசன் மகள் மாயை என்னும் சுரசைக்குக் காசிப முனிவரால் சூரன் தாருகன் சிங்கமுகன் என்னும் அசுரர் உதித்தனர். அவர்கள் அண்டங்களை அதம் செய்துகொண் டிருக்கையில் முருகப்பிரான் அவதரித்து அவர்களைச் சங்கரித்துத் தேவர்தம் இடுக்கண் தீர்த்தருளினர்.

தாருகன் கிரௌஞ்சகிரியில் இருந்து கொண்டே பல மாயைத்தீங்குகள் புரிந்து வந்தனன். முருகக் கடவுள் வேல் விடுத்துக் கிரியையும் அசுரனையும் பிளந்தருளினர்.

## 98. யோக்கியா யோக்கியம்

பாலினொடு தேன்வந்து சேரில்ருசி யதிகமாம்
பருகுநீர் சேரி லென்னும்
பவளத்தி னிடைமுத்தை வைத்திடிற் சோபிதம்
படிகமணி கோக்கி லென்னும்
மேலினிய மன்னர்பால் யானைசேர் வதுகனதை
மேஷமது சேரி லென்னும்
மிக்கான தங்கத்தி னவமணி யுறிற் பெருமை
வெண்கல் லழுத்தி லென்னும்

வாலிப மினார்களுடன் இளையோர்கள் சேரினலம்
வளைகிழவர் சேரி லென்னும்
மருவுநல் லோரிடம் பெரியோர் வரிற்பிரியம்
வருகயவர் சேரி லென்னும்
மாலிகை தரித்தமணி மார்பனே தெய்வானை
வள்ளிக்கு வாய்த்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே.

(இ - ள்) பாலினோடு தேன் வந்து சேரில் ருசி அதிகம் ஆம் - பாலோடு தேன் கலந்தால் சுவை மிகுதி யாகும், பருகு நீர் சேரில் என் ஆம் - குடி தண்ணீர் சேர்ந்தால் பலன் என்ன?, பவளத்தினிடை முத்தை வைத்திடில் சோபிதம் - பவழத்துடன் முத்து சேர்த்துக் கோர்த்தால் அழகாகும், படிகமணி கோக்கில் என் ஆம் - கண்ணாடி மணியைக் கோத்தால் என்ன இலாபம்?, மேல் இனிய மன்னர்பால் யானை சேர்வது கனதை - மேன்மையும் இனிமையும் பொருந்திய அரசர் சைனியத்தில் யானை சேர்ந்தால் பெருமையாகும், மேஷமது சேரில் என் ஆம் - ஆடு சேர்ந்தால் பிரயோசனம் என்ன ?, மிக்கான தங்கத்தின் நவமணி உறில் பெருமை - மேன்மை பொருந்திய பொன்னுடன் நவரத்தினங்கள் பொருந்தினல் பெருமை யாகும், வெண்கல் அழுத்தில் என் ஆம் - வெண்மையான கல்லைப் (பொன்னில்) புதைத்தால் என்ன நன்மையாகும்?, வாலிப மினார்களுடன் இளையோர்கள் சேரில் நலம் - இளமையும் மின்னல் போன்ற

ஒளியுடனும் உடைய மாதர்களுடன் வாலிபர்கள் புணர்ந்தால் நலமாகும், வளை கிழவர் சேரில் என் ஆம் - உடல் வளையும் கிழவர்கள் புணரின் என்ன நலம்?, மருவு நல்லோரிடம் பெரியோர் வரின் பிரியம் - நற்குணம் பொருந்திய பெரியோரிடம் பெரியோர் வந்தால் அன்பு அதிக மாகும், வரு கயவர் சேரில் என் ஆம் - தீமை பொருந்திய கீழ்மக்கள் பொருந்தினல் பெருமை என்ன?, மாலிகை தரித்த மணி மார்பனே - கடப்பமலர் மாலை முதலியன அணிந்த அழகிய மார்பை உடையவனே!, தெய்வானை வள்ளிக்குவாய்த்த கணவா - தெய்வயானைக்கும் வள்ளிக்கும் ஏற்ற கணவனே! மயிலேறி—, எ - று.

## 99. பெரியோர் இயல்பு

அன்னதா னஞ்செய்தல் பெரியோர்சொல் வழிநி
லாபத்தின் வந்த பேருக் [ற்ற
கபயங் கொடுத்திடுத னல்லினஞ் சேர்ந்திடுத
லாசிரியன் வழிநின் றவன்
சொன்னமொழி தவருது செய்திடுதல் தாய்தந்தை
துணையடி யருச்சனை செயல் [மொழி
சோம்பலில் லாமலுயிர் போகினும் வாய்மை
தொல்புவியி னுட்டி விடுதல் [யொடு
மன்னரைச் சேர்ந்தொழுகல் கற்புடைய மனைவி
வைகினுந் தாமரை யிலை

மருவுநீ ரெனவுறுத லிவை யெலா மேலவர்த
மாண்பென் றுரைப்ப ரன்றோ [யில்
வன்னமயின் மேலிவர்ந் திவ்வுலகை யொருநொடி
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

(இ - ள்) அன்னதானம் செய்தல் - பிழைக்க வழியற்றவருக்குச் சோறு இடுதலும், பெரியோர் சொல்வழி நிற்றல் - பெரியவர் சொற்படி நடத்தலும், ஆபத்தின் வந்தபேருக்கு அபயம் கொடுத்திடுதல் - கேடு உற்ற காலத்தில் தன்னை வந்தடைபவருக்கு அபயதானம் கொடுத்தலும், ஆசிரியன் வழி நின்று - குரு காட்டிய வழியிலேயே ஒழுகி, அவன் சொன்ன மொழி தவறாது செய்திடுதல் - அவன் சொன்ன சொற்படிக்குப் பிசகாமல் செய்வதும், தாய் தந்தை துணை அடி அருச்சனை செயல் - தாய் தகப்பன் இவர்களின் இரு பாதங்களையும் நீரும் மலரும் இட்டு அருச்சனை புரிதலும், சோம்பல் இல்லாமல்—, உயிர் போகினும் - சிவன் பிரிவதாயிருப்பினும், வாய்மை மொழி - சத்திய வாசகத்தை, சொல் - (பெரியோரால்) மதித்துக் கூறப்படும், புவியில் நாட்டி இடுதல் - உலகத்தில் நிலைநாட்டுதலும், மன்னரைச் சேர்ந் தொழுகல் - அரசரைச் சேர்ந்து இராஜ காரியங்கள் செவ்வனே புரிதலும், கற்புடைய மனைவியோடு வைகினும் - பதிவிரதா தர்மமுடைய நல்ல மனைவியுடன் வாழ்ந்தாலும், தாமரை இலை மருவு நீர் என உறுதல் -

(உலக வாழ்க்கையில்) தாமரையிலையில் பொருந்திய தண்ணீர்போல் (ஒட்டினும் ஒட்டாமல்) பற்றற்றவனாய் நடத்தலும், இவை எல்லாம்—, மேலவர் தம் மாண்பு - பெரியோர் இயல்பு, என்று உரைப்பர் அன்றோ - என்று அறிவுடையோர் கூறுவர் அல்லவா?, வன்மையின் - வலிய முயற்சியுடன், மேல் இவர்ந்து - (மயில்மிசை) ஆகாயத்தின்மீது ஏறி, இவ்வுலகை—, ஒரு நொடியில்—, வலமாக வந்த முருகா - பிரதக்ஷிணமாக வந்தருளிய முருகக் கடவுளே!, மயிலேறி—, எ - று.

## 100. நூலின் பயன்

வன்னமயி லேறிவரு வேலா யுதக்கடவுண்
 மலைமே லுகந்த முருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கைமர மாகினேன்
 வானவர்கள் சேனா பதி
கன்னன்மொழி யுமையா டிருப்புதல்வ னரன்மகன்
 கங்கைபெற் றருள புத்திரன்
கணபதிக் கிளையவொரு மெஞ்ஞான தேசிகக்
 கடவுளா வினன்குடியி னான்
பன்னரிய புல்வயலில் வாலகும ரேசர்மேற்
 பரிந்துகுரு பாத தாசன்
பாங்கான தமிழாசி ரியவிருத் தத்தினறை
 பாடலொரு நூறு நாடி
நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
 நாடோறும் கற்ற பேர்கள்

ஞானயோ கம்பெறுவர் பதவியா வும்பெறுவர்
நன்முத்தி யும்பெறுவ ரே.

(இ - ள்) வன்னம் மயில் ஏறி வரு - அழகிய மயில் மீதேறி வருகின்ற, வேலாயுதக் கடவுள் - வேற்படையைத் தரித்த இறைவன், மலைமேலுகந்த முருகன் - மலைகளின் மேலிடங்களைத் திருக்கோயிலாகக் கொள்ள மகிழ்ந்த முருகப்பிரான், வள்ளிக்கொடிக்கு இனிய வேங்கை மரம் ஆகினோன் - வள்ளி என்னும் கொடி போன்றவள் முன் இனிமை பொருந்திய வேங்கைமரமாக நின்றவன், வானவர்கள் சேனபதி - தேவர் சேனபதி, கன்னல் மொழி உமையாள் திருப்புதல்வன் - கருப்பஞ் சாறுபோன்று இனிய மொழியுடைய உமையவளின் திருக்குமாரன், அரன் மகன் - சங்கரன் திருமகன், கங்கை பெற்று அருள் புத்திரன் - கங்காதேவி பெற்று அருளிய குமாரன், கணபதிக்கு இளைய ஒரு மெய்ஞ்ஞான தேசிகக் கடவுள் - விநாயகருக்குப் பின் பிறந்த ஒப்பற்ற மெய்ஞ்ஞான வடிவனான சற்குருமூர்த்தியாகிய இறைவன், ஆவினன் குடியினன் - பழநியம்பதியில் கோயில்கொண்டுள்ளவன், பன்ன அரிய - சொல்லுதற்கு அருமையான, புல்வயலில் - திருப்புல்வயல் க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும், வாலகுமரேசன் மேல் - பால வடிவனான குமரேசன் மீது, பரிந்து - அன்பு செய்து, குருபாததாசன்—, பாங்கான - அழகான, தமிழ் - தமிழ் மொழியில், ஆசிரிய விருத்தத்தின் - ஆசிரியவிருத்தம் என்னும் செய்யுள் பகுப்பிலே, அறை - பாடிய, பாடல் ஒருநூறு - செய்யுட்கள் ஒரு

நூற்றிதனையும், நாடி - ஆராய்ந்து, நல் நயமதாக நல்ல - ஆவலுடனும் நல்ல இசையுடனும், படித்த பேர் - வாசித்தவரும் கேட்ட பேர் - பிறர் படிக்கத் தாம் சிரவணம் செய்தவரும், நாள்தோறும் கற்ற பேர்கள் - தினந்தோறும் பயின்றவரும், பதவியாவும் பெறுவர் - செல்வம் பெற்றுப் புகழ் நிறைந்த பதவிகள் எல்லாவற்றையும் பெறுவர், ஞான யோகம் பெறுவர் - கடவுளை அடையும் வழியாகிய ஞான முயற்சியிலும் வெற்றி பெறுவர், நல் முத்தியும் பெறுவர் - மறுமையில் சிறந்த மோட்சத்தையும் அடைவர், எ - று.

(வி - ரை) வன்னம் - வர்ணம் என்ற வடமொழி மரூஉ; நிறம் எனினும் அமையும். வள்ளியாகிய கொடி பொருந்துதற்கு இனிய வேங்கைமரம் எனினும் சிறப்புடைத்தாகும். ஓர் நன்னூலைப் பயின்றால் அறம் பொருள் இன்பம் வீடு எனும் புருஷார்த்தங்கள் பெறலாம். இந்நூலைப் பயின்று அதன்படி நடந்தால் இவ்வுலக வாழ்வில் பதவிகள் முதலியன பெறுவர். பதவிகள் முதலியன - பொருளும் இன்பமும். ஞானம் - அறம். மறுமையில் நல் முத்தி பெறுவர். முத்தி - வீடு. நல் முத்தி என்பது ஜீவன் என்றும் மீளாத சிறந்த முத்தி.

சுபம் ! சுபம் !!

குமரேச சதகம் மூலமும்
தெளிபொருள் விளக்கவுரையும்
முற்றுப்பெற்றன.

---

தருமகள் விலாசம் பிரஸ், சென்னை:—1937.

# நளவெண்பா மூலமும்

## விரிவுரையும்

### விலை ரூ. 2-0-0.

இலக்கியங் கற்க விரும்புவோர் நளவெண்பா கற்காமல் முடியாது. இத்தகைய நளவெண்பா, வெண்பா பாடுவதில் சிறந்து விளங்கிய வெண்பாப்புலி புகழேந்தியாரால் ஆக்கப்பட்டதே காரணமாகும். புலவர் பெருமக்கள் ஒவ்வோரிலக்கியத்தையும் வெகு அழகாக மனக்கன்றும், கற்பனைசக்தியும் கலந்து வேலை செய்ய ஆழ்ந்த கருத்தையும் வெகு எளிதே எடுத்துரைத்துப் போனார்கள். என்றாலும், இதுகாலத்துப் பல உரைகள், இந் நளவெண்பாவிற்கும் வந்திருப்பினும், நமது அன்பர் சென்னை பிரம்பூர் கலவல கண்ணன் செட்டியார் உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியர் ஸ்ரீமான் T. C. பார்த்தசாரதி அய்யங்காரவர்கள் புலவர் புகழேந்தியாரின் உள்ளக்கிடக்கைக்கேற்ப உரை எழுதி யிருக்கின்றாராதலின், இவ்வுரை தமிழ்ப் பெருமக்களுக்குப் பெரிதும் பயன்படுமென்பதில் சிறிதும் ஐயமில்லை. சுருங்கச் சொன்னால் இவ்வுரை ஒன்றே கவி. புகழேந்தியாரின் கருத்திற்கமைய எழுதப்பட்டது.

எமது விலாசம்:—

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கடாமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.